# for that millionaire look

Century
for 100% cotton
textiles

CENTURIZED
PRESHRUNK FABRIC

THE
**CENTURY**
SPG. & MFG. CO. LTD.,
BOMBAY 25 DD






For Fashion Fabrics choose
*Century Shirtings!*

NPS-CM 16

# எண்ணிய வண்ணமே!

உங்களைப் போன்றவர்களின் ஆதரவில்

# ரூபி டஸ்ட்

அனைத்திலும் விரைவாக விற்பனையாகும்
தூள் தேயிலையாக ஆகிவிட்டது




ரூபி டஸ்ட்: நிறைந்த ருசி;
நல்ல நிறம்; கோடியில்
தயாராகும் பானம்,
வேறெந்தத் தூள் தேயிலை
யையும்விட அதிகக்
கோப்பைகள் அளிப்பதுகூட

இந்தியாவில்
வெகுவிரைவில்
விற்பனையாகும்
தூள் தேயிலை



பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது

LRDC-6/72 TAM

இன்று—ஜானகியின் வீட்டுவேலை பூராவும் முடிந்தது. அம்மாவைப் பார்த்துவிட்டு, வரும் வழியில் கடைக்கும் போய் வந்தாயிற்று. இப்போது -- மகன் ராஜனுடன் விளையாடும் நேரம்.

## "என்ன இருந்தாலும் 'ஹார்லிக்ஸ்' தரும் முழுமையான ஊட்டச்சிறப்பே தனி"

என்கிறாள் ஜானகி

முழு ஆடைப்பால், செழுமையான கோதுமை இவை தரும் நிறைவான பயனும் புரதச்சத்தும் நிரம்பியது 'ஹார்லிக்ஸ்'.

அன்றாட உணவில் விட்டுப்போகும் ஊட்டக்குறையை 'ஹார்லிக்ஸ்' ஈடுசெய்து உடலுக்கு உறுதியும் அதிக சக்தியும் அளிக்கிறது.

80 ஆண்டுகளுக்கும் மேலாக டாக்டர்கள் சிபாரிசு செய்து வரும் 'ஹார்லிக்ஸ்' தாய்மார்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

'ஹார்லிக்ஸ்' அருந்துங்கள். தரமான சத்தும் அதிக சக்தியும் அளிப்பது அதுவே.

## முழுமையான ஊட்டம்பெற—'ஹார்லிக்ஸ்'

'ஹார்லிக்ஸ்' பதிவு பெற்ற டிரேட் மார்க்.




HL-2516

# சுயநலமற்ற சேவை

நிவாரண ஏற்பாடுகளை நிர்வகிப்பது, வியாபாரத்தை நிர்வகிப்பதைவிட அதிகப் பொறுப்பு வாய்ந்தது. இதற்குத் தேர்ச்சி மட்டுமின்றி, 'சுயநலமற்ற சேவை' என்னும் மனப்பான்மையினால் உந்தப் பட்ட மக்களின் ஈடுபாடு மிக அவசியம். வெள்ளம், பஞ்சம் மற்றும் புயலினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நேர்முகமான நிவாரணம் அளிப்பதற்காக முகாம்களிலிருந்து கொண்டு இன்முகத்துடன் செயல்பட வேண்டும்.

டாடா ஸ்டீலின் ஊழியர்களிடையே இத்தகைய சேவைக்கான தொண்டர்கள் பலர் உள்ளனர். கடந்த சில மாதங்களாக எங்கள் டாக்டர்கள், சமூகத் தொண்டர்கள் மற்றும் எஞ்ஜினீயர்கள் கொண்ட குழுவினர் பீகாரிலுள்ள கிஷன்கஞ்ஜ் என்னுமிடத்தில் முகாமிட்டுக்கொண்டு சுமார் 7000 பங்களா தேஷ் அகதிகளுக்கு வைத்திய சிகிச்சை, அதிகப்படியான போஷாக்கு, துணிக் மற்றும் போர்வைகள் வழங்குதல், சுத்தமான குடிநீர் வசதி மற்றும் சுகாதார ஏற்பாடு இவைகளைச் செய்து வருகின்றனர்.

**எங்கள் பலம் உறுதிமிக்க எஃகில் மட்டுமல்ல திறமை மிக்க ஊழியர்களிலும் உள்ளது**



**டாடா ஸ்டீல்**

# மலரிதழ் மிருது வதனம்!
# மனமகிழ் சந்தன மணம்!




மகிழ்ச்சி தருவது

# கோகுல்

சந்தன முகப் பவுடர்

தயாரிப்பாளர்: டி. எஸ். ஆர் & கம்பெனி, சென்னை

பொங்கல் மலர்

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, தை 2 - ஜனவரி 16, 1972








| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 23-00 | ரூ. 11-50 |

# இப்போழுது
# தேநீரின் சுவை குன்றுமல்
# புத்துணர்ச்சி நீடித்திருக்க

---

## ஸ்பென்ஸரின் புதிய வெகுமதி

---

நீங்கள் எப்போதும் விரும்பும்

## ஸ்பென்ஸரின்

### ரெட் பாண்ட் மற்றும் கிரீன் லேபல்'டீ' (400 கிராம்)

இப்பொழுது சுகாதாரமான, கவர்ச்சிமிக்க,
காற்றுப்புகாத, உங்களுக்கு என்றும் உபயோகப்
படக்கூடிய, பாலிஎதலீன் டப்பாக்களில் கிடைக்கின்றன

இந்தச் சலுகை
சென்னை, ஹைதராபாத்
மற்றும் பெங்களூர்
நகரங்கட்கு மட்டுமே.
ஸ்டாக் தீருமுன்
முந்துங்கள்

ஸ்பென்ஸர் அண்ட் கோ.
லிமிடெட்,
சென்னை மற்றும் கிளைகள்



கல்கி

மலர் 31

இதழ் 25



தமிழ்த்திரு நாடுதன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
--- பாரதியார்

# நல்ல அறிகுறிகள்

“பாகிஸ்தான் ஒரு சிறிய நாடு. அது இந்தியா, ருஷியா, பூடான், நேபாளம், இலங்கை முதலிய நாடுகளுடன் நட்புத் தொடர்பு கொள்ளவே விரும்புகிறது'' என்று திரு பூட்டோ கூறியுள்ளார். இந்த வாசகம் பாகிஸ்தான் சர்க்காரின் அதிகாரபூர்வமான 'ரேடியோ பாகிஸ்தான்' ஸ்தாபனத்திலுல் டிசம்பர் 30ந் தேதி ஒலிபரப்பப்பட்டிருப்பதைக் குறிப்பாகக் கவனிக்க வேண்டும். பூட்டோ கூறியிருப்பதில் அடக்கமும் விநயமும் தெளிவாகத் தொனிக்கின்றன. அவரது இந்த வாசகம் அந்தரங்க சுத்தமானதுதானு என்று நாம் குடைந்து பார்க்காமல், அதனை உண்மையாகவே எடுத்துக் கொண்டு, இந்திய — பாகிஸ்தான் உபகண்டத்தில் அமைதி என்கிற லட்சியத்தை அடைவதில் , முன்னேற வேண்டும். நாம் பாகிஸ்தானுடன் அமைதியான உடன்படிக்கை காணவே விரும்புவதால், திரு பூட்டோ சொல்லியிருப்பதை நல்ல முறையில் எடுத்துக் கொண்டு மேல் நடவடிக்கைகள் தொடர வேண்டும். சுற்றிலும் பகை நாடுகளை வைத்துக் கொண்டிருப்பது எவருக்குமே நல்லதல்ல.

பொதுவாக அரசியல் விவகாரங்களில் ஜாக்கிரதையாகக் காரியங்களைச் செய்ய வேண்டும் என்பது வாஸ்தவம்தான். ஆயினும் நட்புப்பாங்கான ஒரு வழிக்குத் தோது தென்படும்போது, அதற்கு உகந்த நட்பு நடவடிக்கை மேற்கொள்வதில் நாம் தயக்கமின்றி முனைந்து, இடர்ப்பாடுகளையும் துணிந்து ஏற்க வேண்டும். எதிர்த்தரப்பில் மோசடி நடந்திருக்கிறது என்று பிற்பாடு தெரியுமாயின், நாம் அதையே தாராளமாகக் காரணம் காட்டி, அப்போது நமது நிலையை மாற்றிக் கொள்ளலாம். அதற்குப் போதிய அவகாசம் கிடைக்கும். ஆனல் உடனடியாக நாம் காட்ட வேண்டுவது அதிகபட்ச நட்புப் பான்மையயே ஆகும்.

* * *

திரு பூட்டோ, எவ்வித நிபந்தனையுமின்றி திரு முஜிப்—உர்—ரஹ்மானை விடுவிப்பதாக அறிவித்திருப்பது நம்பகமான தகவலாகவே தெரிகிறது. எதிராளிகளுடன் பேரம் பேசுவதற்காக அவர் இவ்விதம் செய்வதாகத் தோன்றவில்லை. ஆயினும், திரு முஜிப்—உர்—ரஹ்மான் வங்காள தேசத்துக்குச் சென்று, தமது சகாக்களைச் சந்தித்து, தமது திட்டங்களை வெளியிட்ட பின்பே நமக்கு நிலவரம் முழுவதும் தெளிவாகும். அதுவரை நாம் அபிப்பிராயம் சொல்வதற்குக் காத்திருக்க வேண்டும்.

* * *

இந்திய — பாகிஸ்தான் சண்டை ஏற்பட்டால் அதில் உலக வல்லரசுகள் ஈடுபடும் எனத் திரு யாஹ்யா கான் கற்பனை செய்திருந்தது மடமையேயாகும். மேல்நாட்டு வல்லரசுகள் இந்தச் சண்டையில் ஆயுதங்களும் தளவாடங்களும் விலைக்கோ, இலவசமாகவோ வழங்கக் கூடுமேயன்றி, நேராக நேச நாடுகள் என்ற ரீதியில் போரில் இறங்கா. இனியும் இந்தியாவுடன் போர் மூண்டால் அமெரிக்கா, பகிரங்கமாகப் பாகிஸ்தானின் தரப்பில் ஈடுபடும் என்று இப்போது பாகிஸ்தான் தலைவர்கள் எண்ணுவராயின் அது அவிவேகமேயாகும். பாகிஸ்தான், இந்தியா இருநாட்டுத் தலைவர்களும் சுயபலத்தையும், பரஸ்பர நட்பையும், சமாதானத்தையும்தான் உய்வுக்கு வழியாகக் கொள்ள வேண்டும். பாகிஸ்தானில் உள்ள போர் வெறியர்களைத் திருப்திப்படுத்த எண்ணி, திரு பூட்டோ விவேக வழியிலிருந்து பிறழமாட்டார் என நம்புகிறோம்.

---

**இவ்விதழ் அச்சாகிக்கொண்டிருக்கையிலேயே சுதந்திர பங்களா தேஷ் தலைவர் ஸ்ரீ முஜிப்—உர்—ரஹ்மான் அவர்கள் விடுதலை பெற்ற நற்செய்தி வெளியாகியிருக்கிறது. இந்தப் பெருமகிழ்வில் பல கோடி மக்களுடன் நாமும் பங்கு கொள்கிறோம்.**

# ராஜாஜியின் கருத்துக்கள்

## ஸ்தாபனக் காங்கிரஸும் சொத்துரிமையும்

தில்லியிலும் மற்ற இடங்களிலும் உள்ள கட்டிடங்கள் முதலியவற்றில் தனது சொத்துரிமையைப் பாதுகாத்துக் கொள்வதுடன் ஸ்தாபனக் காங்கிரஸ் திருப்தி பெற்றுவிடுகிறது! பொதுமக்கள் அனைவருக்கும் ஜீவாதாரமான சொத்துரிமைக்கு என்ன நேர்ந்தாலும் அதுபற்றி ஸ்தாபனக் காங்கிரஸ் பொருட்படுத்தக் காணோம். இந்த அடிப்படை உரிமைகளை நீக்கிவிட வேண்டும் என்பதற்காக அக் கட்சி ஆளும் காங்கிரஸுடன் சேர்ந்து வோட்டுப் போடுகிறது. இது ஆச்சரியம்; ஆனால் இந்தக் காலத்தில் எதுவுமே ஆச்சரியம் இல்லைதான். பகுத்தறிந்து உணரும் திரு காமராஜ்கூட என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தி விட்டது குறித்துத்தான் வருந்துகிறேன்.

## சுதந்திரக் கட்சியின் பணி

ஸ்தாபனங்களுக்கும் தனி மனிதர்களுக்கும் ஒரு மாறுபாடு உண்டு. பெற்றோரின் பரஸ்பர அன்பிலே தனி மனிதர்கள் பிறக்கிறார்கள். குழந்தைகள் எந்த ஒரு நோக்கத்தையும் கருத்தில் கொண்டு உண்டு பண்ணப்படுவதில்லை. ஆனால் ஸ்தாபனங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்காகவே தோற்றுவிக்கப்பட்டு, வரையறுத்த இலட்சியங்களுக்காகப் பேணி வளர்க்கப்படுகின்றன.

இந்திய ஆட்சி முறையில் ஏகாதிபத்தியப் போக்கைத் தவிர்ப்பதற்கே சுதந்திரக் கட்சி ஸ்தாபிக்கப்பட்டும், வளர்க்கப்பட்டும் வந்திருக்கிறது. மக்களுக்கு அரசியல் மூல சாஸனம் அளித்த அடிப்படை உரிமைகளை அரசாங்கம் நியாயமற்ற முறையில் குறைப்பதற்கு இடமளிக்காமல், இவ்வுரிமைகளைப் பாதுகாக்க வேண்டும் என்பதே சுதந்திரக் கட்சியின் ஸ்தாபகர்களுடைய நோக்கம். சுதந்திரக் கட்சித் தலைவர்கள் இந்த நோக்கத்தைக் கைவிட்டால், அப்போது கட்சியைக் கலைத்துவிடுவதே யோக்கியமாக இருக்கும்; தேசத்தின் அரசியலில் இக்கட்சியும் ஒரு வீண் சுமையாக இருக்க வேண்டியதில்லை.

ஸ்ரீமதி இந்திரா காந்தி ரத்தம் சிந்தாமலே சமத்துவப் புரட்சிக்குத் திட்டமிட்டுள்ளதாகச் சுதந்திரக் கட்சித் தலைவர்கள் சிலர் எண்ணுகிறார்கள். இந்த ரத்தம் சிந்தாப் புரட்சியை ஆதரிக்காவிடில் ரத்தக்களரியான புரட்சியே ஏற்படும் எனவும் அவர்கள் கருதுகிறார்கள். ஆகையால் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கொள்கைகளை ஏற்பதே யோக்கியம் என்று அவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். கூர்ந்த கவனத்துடன் வகுக்கப்பட்ட மூல சாஸனத்தைப் பாதுகாப்பதற்குப் பதில், சுதந்திரக் கட்சித் தலைவர்கள் சிலரே இப்படிக் கருதுவது கண்டு எனக்கு வேதனையாக இருக்கிறது. மற்றவர்கள் எந்தக் கருத்துக் கொண்டாலும் சரி, சுதந்திரக் கட்சியின் பணி, சாஸன கர்த்தர்கள் வகுத்த அடிப்படை உரிமைகளைக் காப்பதே என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். சுதந்திரக் கட்சியின் பணிக்குத் தீவிரமான எதிர்ச் சக்தியாக யதேச்சாதிகாரம் உள்ளது. ஆயினும் கூட வெற்றி தோல்விகளைச் சமமாகப் பாவித்து, 'ஸித்ய ஸித்யோ: ஸமோ பூத்வா' என்று கீதை கூறுவதற்கேற்ப நமது பணியைத் தொடர வேண்டும்.

## நீதிபதி நியமனம்

நமது நாட்டில் நீதிபரிபாலனத் துறையின் சுதந்திரம் பைஸா நகரத்துச் சாய்ந்த கோபுரத்தின் கதிக்கு வந்து விட்டது. ஒன்று கண்டிப்பாகச் செய்தாக வேண்டும்: ஸுப்ரீம் கோர்ட், ஹைகோர்ட் இவற்றின் நீதிபதிகளை நியமிப்பதில் ராஜ்ய சர்க்காரின் செல்வாக்கையும், நடவடிக்கையையும் தவிர்க்க வேண்டும். ராஜ்ய அரசாங்கங்கள் ஆழ்ந்த அக்கறை கொண்ட பிரச்னைகளிலும் ஹைகோர்ட் நீதிபதிகள் தீர்ப்புச் செய்தாக வேண்டியிருக்கிறது. எனவே, எவ்விதத்திலும் கட்டுப்படாத நீதிபதிகளே தீர்ப்பு செய்பவர்களாக இருத்தல் வேண்டும். இவ்வாறு கோர மக்களுக்கு உரிமை உண்டு. ஆகையால் ராஜ்ய சர்க்கார்களுக்கு நீதிபதி நியமனத்தில் பங்கு தரவே கூடாது.

---

## அலையோசையில் இலக்கிய நயம்

சாகித்ய அகாடெமியின் பரிசுபெற்ற முதல் தமிழ் நாவலும், ருஷ்ய மொழியில் பல லட்சம் பிரதிகள் விற்பனையாகி பிரபலமானதும், நாம் எழுதியவற்றுள் தலைசிறந்ததெனப் பேராசிரியர் கல்கி அவர்களாலேயே மதிக்கப்படுவதுமான அலையோசையைப் படிக்க ஆர்வத்துடன் காத்திருக்கும் லட்சக் கணக்கான வாசகர்களுக்கு ஒரு மகிழ்ச்சியளிக்கும் அறிவிப்பு:




அலையோசையின் முதல் பதினைந்து அத்தியாயங்கள் வரை நீங்கள் படித்ததும், மீண்டும் ஒரு தடவை முதலிலிருந்து ஆரம்பித்துப் படித்துப் பாருங்கள். அவற்றுள் இலக்கிய நயம் மிக்கதென நீங்கள் கருதும் பகுதியை (சுமார் பத்துப் பதினைந்து வாக்கியங்கள்) எடுத்து எழுதுங்கள். எதனால் அந்தப் பகுதியை இலக்கிய நயம் மிக்கதென நீங்கள் கருதுகிறீர்கள் என்பதையும் பத்துப் பன்னிரண்டு வரிகளில் தெரிவியுங்கள்.

உங்கள் கடிதம் கல்கி காரியாலயத்துக்கு 1972 மார்ச் 15ந் தேதிக்குள் கிடைக்கவேண்டும். சிறந்த கடிதத்துக்கு ரூ. 100/- பரிசாக வழங்கப்படும். உறையின்மேல் 'அலையோசை - இலக்கியப் பரிசுத் திட்டம்' எனக் குறிப்பிடவும்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



ஆனந்தம் பொங்கும் உள்ளத்துடன் இந்தப் பொங்கல் இதழை உங்களுக்கு அளிக்கிறேன். இதை எழுதும்போது, அன்னை பராசக்தியின் அருள்வடிவங்களில் ஒன்றான ஸ்ரீ மா ஆனந்தமயீதேவி அவர்கள் கல்கிப் பூங்காவில் எழுந்தருளியிருக்கிறார்கள். இது கல்கிக் குடும்பத்துக்குக் கிடைத்தற்கரிய பேர் அநுக்கிரகமாகும். 'கல்கிக் குடும்பம்' என்னும்போது இந்தப் பத்திரிகை ஊழியர்களை மட்டும் நான் குறிப்பிடவில்லை. இந்தப் பத்திரிகையைக் கைகளில் வைத்துள்ள உங்கள் அனைவரையுமே குறிப்பிடுகிறேன். ஸ்ரீ மா ஆனந்தமயீ திருவடி பதித்த திவ்விய முகூர்த்தத்தை ஒட்டிக் 'கல்கி'ப் பத்திரிகை தனது சமய—இலக்கிய — சமூகப் பணிகளில் மேன்மேலும் எழுச்சி கொண்டு பூரித்துப் பொங்கும் என நம்புகிறேன்.

* * *

பூரித்துப் பொங்கும் கடலின் ஓசை இப்போதே கேட்பது போல் இவ்விதழில் 'அலை ஓசை' தொடங்குகிறது. என் அருமை நண்பர் 'கல்கி' அவர்களின் அமர சிருஷ்டி 'அலை ஓசை'. தமது எழுத்துக்களை நிர்த்தாட்சிண்யமாக எடை போட்டுக் கொள்ளும் பேராசிரியர் கல்கி அவர்களாலேயே தமது படைப்புக்களில் தலைசிறந்தது எனக் கருதப்பட்ட அலை ஓசை, சம்பவங்களின் கோவையிலும், குணசித்திர நயத்திலும் உலகப் பேரிலக்கியங்களிடையே இடம் கொள்கிறது. அனைத்திந்திய மொழிகளிலும், ருஷிய மொழி போன்ற பிற நாட்டு மொழிகளிலும் பெயர்க்கப்பட்ட பெருமை பொருந்தியது 'அலைஓசை'. புதுத் தலைமுறைக்குப் பரிச்சயமாகாத இந்தப் புதினத்தைப் பொங்கல் சுதினத்திலிருந்து மீண்டும் வெளியிடுவதில் மகிழ்கிறேன்.

இவ்விதழில் பிரசித்தி பெற்ற எழுத்தாளர் நால்வரின் சிறப்புக் கதைகள் வெளியாகின்றன. புதிது புதிதாகப் பல அம்சங்களை அளித்து வரும் கல்கி, இவ்விதழிலிருந்து இரு இல்லத்தரசிகளின் சுவை பொருந்திய உரையாடலான ''வணக்கம், சௌக்கியமா?'' என்ற தொடரையும், 'கல்யாணக் கதைகள்' என்ற ரசமான உண்மை நிகழ்ச்சித் தொகுப்பையும் அளிக்கிறது.

நேயர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி தரும் ஒரு செய்தியைப் பொங்கல் நன்னாளில் தெரிவித்துக் கொள்கிறேன். படிக்கச் சுவையானதும் உயர்தரமானதுமான விஷயங்களைத் தருவது கல்கி என்ற கௌரவம் இப்பத்திரிகைக்கு எப்போதுமே உண்டு. அதோடு கல்கியின் உருவ அமைப்பும் இப்போது மேலும் சிறப்புக் கொள்கிறது. ஏராளமான இரு வர்ணச் சித்திரங்களையும் நேர்த்தியான அச்சையும் சென்ற சில இதழ்களாகவே பார்த்து வந்திருப்பீர்கள். கிழக்கு ஜெர்மனியில் நமக்கெனவே தயாரிக்கப்பட்டு வந்துள்ள ஆஃப்ஸெட் ரோடரி யந்திரத்தில் கல்கியின் பெரும் பகுதி அச்சாவதே இதற்குக் காரணம். ஆஃப்ஸெட் ரோடரியின் துணைகொண்டு கல்கியை வண்ணக் கதம்பமாக, கண்ணுக்கினிய கலைப் பண்டமாக ஆக்கப் போகிறோம்.

வண்ணங்களைக் கண்டு பூரிப்பது குழந்தைகளின் விசேஷ இயல்பு அல்லவா? 'பிள்ளையார்' என்றே பேர் கொண்ட சிவசக்திக் குழந்தையைக் காவல் தெய்வமாகக் கொண்டுள்ள 'கல்கி' நிறுவனம் குழந்தைகளுக்கு ஓர் அற்புதப் பரிசு தர முடிவு செய்திருக்கிறது — **வருகிற தமிழ்ப் புத்தாண்டிலிருந்து குழந்தைகளுக்கென ஒரு புதிய பத்திரிகை தொடங்குவதாக உத்தேசித்திருக்கிறோம்.** குழந்தைகளின் கண்ணுக்கு விருந்து தருவதுடன் அவர்களின் எண்ணத்தையும் செம்மை செய்யும் உயர் நோக்குடன் இப்பத்திரிகை அமையும். குழந்தைகளைச் சிரிக்கச்செய்யும், சிந்திக்கவும் செய்யும். பத்திரிகை உலகுக்கே பெருமை கூட்டும் முறையில் இக் குழந்தைப் பத்திரிகையை உருவாக்க வேண்டும் என ஊக்கத்துடன் இருக்கிறோம்.

காவல் தெய்வம் கணபதியின் அநுக்கிரகமும், காஞ்சி முனிவர் ஸ்ரீ ஆசாரியாளின் அருளும், உங்கள் அனைவரின் அபிமானமும் துணை நிற்க, கல்கி புதிய பெருமை கொள்வதிலும், புதிய குழந்தைப் பத்திரிகை செழித்து வளருவதிலும் சந்தேகம் என்ன?

அனைவருக்கும் என் உளம் கனிந்த பொங்கல் வாழ்த்துக்கள்.

சதாசிவம்

# உண்மைக் கல்வி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அமைதி நிலவுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறதென்பது பிரத்தியட்ச அநுபவம். மன அமைதியின் உயர்நிலையே மேலான புருஷார்த்தமாகும். அமைதி குறையக் குறையத் துன்பமும் வளரும். மனிதர்கள் தங்கள் துன்பங்கள் நீங்குவதற்கு முயற்சி செய்யும் பொழுது, பிறரை அவர்கள் துன்புறுத்தவும் நேருகிறது. இவ்விதம் ஒவ்வொருவரும் சந்தர்ப்பங்களை ஒட்டி மற்றவர்களைத் துன்புறுத்த முயலும்பொழுது சமுதாயத்தில் குழப்பம் ஏற்படுகிறது. அவ்விதம் குழப்பம் நேரும் பொழுதெல்லாம் அதை அடக்கி அமைதியையும், சமாதானத்தையும் நிலைநிறுத்த அரசாங்க அதிகாரிகள் சட்டத்தின் மூலம் நடவடிக்கைகள் எடுக்கிறார்கள். ஆயினும், உண்மையான பரிகாரம் யாதெனில், மக்கள் எல்லோரும் புலன்களைப் பறிக்கும் வெளி விஷயங்களிலிருந்து தங்கள் மனசைத் திருப்பி அதைத் தங்கள் வசமாக்கி அமைதியாக இருக்க எப்பொழுது முற்படுகின்றார்களோ, அப்பொழுதுதான் துன்பம் அவர்களை அணுகாமல் இருக்கும். அதோடு அவர்களால் பிறருக்குத் துன்பம் விளையாமலும் இருக்கும். நல்ல கல்வியைப் பயிலும் பயனாகத்தான் இத்தகைய வெளி அமைதியும் உள் அமைதியும் நம் நாட்டிலே தொன்று தொட்டு சித்தித்து வந்திருக்கின்றன.

நம் பாரத நாட்டின் முற்காலக் கல்வியின் முதல் நோக்கம் மன அமைதியை அடைவதேயாகும். புதிது புதிதாகத் தோன்றும் பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் மேன்மேலும் கல்வியைப் பெருக்குவதில் தவறில்லை. ஆனால் அதன் பயனைத் தர்ம மார்க்கத்தில் மட்டுமே உதவுமாறு செய்தால்தான் நாடும் மக்களும் உயர்வான அமைதி நிலையை அடைய முடியும். இவ்வாறில்லாமல் புலன்கள் போன வழியே அவைகளை விட்டுக் கொண்டிருந்தால் எத்தனை படிப்பும் விஞ்ஞான அறிவும் இருந்தாலும் கெட்ட எண்ணங்களும் ஆசைகளும் வளரும். இன்னல்களும், துன்பங்களும் பெருகும்.

உண்மையான கல்வி என்பது ஆத்மஞானம் அடைய உதவுவதே யாகும். அதனால் மக்கள் அமரத்துவம் அடைகிறார்கள். எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ அந்தப் பயனை உண்மைக் கல்வி அளிக்கிறது. மற்ற விதமான கல்விப் பயிற்சிகளெல்லாம் உலகப் பயனை அளிக்கின்றன. ஆனாலும் அவையும் படிப்படியாக இறைவனைச் சேர உபயோகப் படலாம். உலகப் பயன் என்பது பொதுவாகப் பொருள் திரட்டுவதையே குறிக்கின்றது. பொருளும் கூடப் பலவித தருமங்களைச் செய்யப் பயன்படுகிறது. எனவே லௌகிக தருமங்களும் பிரம்ம ஞானத்துக்குச் சாதனமாகின்றன. 'தனக்கு விதிக்கப்பட்ட தர்மங்களைச் சரிவர நடத்துவதாலும், தவத்தினாலும், இறைவனை வணங்கி வழிபடுவதாலும் ஒருவன் ஆத்ம ஞானத்தை அடைகிறான்' என ஆதி ஆசாரியர்கள் கூறியுள்ளார்கள்.

ஆத்ம ஞானத்தை அளிக்கும் கல்வியைப் பரவித்யை எனவும், மற்றவற்றை அபர வித்யை எனவும் கூறுவர். பரவித்யை எனும் பிரம்ம ஞானம் நேரான பலனை அளிக்கின்றது; அஞ்ஞான இருளைப் போக்குகின்றது. கண்களுக்குப் புலனாகாத தர்மத்தின் லட்சணத்தை வேதம், ஸ்மிருதி இவைகளின் மூலமாகத்தான் அறிய முடியும். ஞானத்துக்கு வேதம், யுக்தி, அநுபவம் இவ்வகையான பிரமாணங்கள் ஆதாரமாக இருக்கின்றன. இது ஆதி சங்கர பகவத்பாதாசாரியர்களின் தீர்மானம். ஆனாலும், மனிதனது புத்தி நுட்பத்தால் கண்களுக்குப் புலனாகும் பயனை விளக்கக்கூடிய வான சாஸ்திரம், அரசியல், பொருளாதாரம் இவைகளும், வெளிநாட்டாரது ஆராய்ச்சி முறைகளும் கற்பிக்கப் படுவதும் நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவியாகத்தான் இருக்கிறது. ஆஸ்திகமயமான கல்வி போதனைகளுடன் அந்நிய நாட்டாரின் முறைகளைக் கலந்து போதிப்பதில் நாம் மிகவும் நிதானத்துடன் நடந்து கொள்ள வேண்டும். நமது ஆத்ம சக்தி, அந்தரங்கசுத்தி, ஒழுக்கம், இவற்றைக் கல்வியின் உறுபயனாகக் கருத வேண்டும். நம் புலன்களுக்கு மட்டுமே சுக உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் எளிதில் தரக்கூடிய வகையில் உள்ள எல்லா அம்சங்களையும் போதனை முறையிலிருந்து விலக்க வேண்டும். மேல் நாட்டாரின் நடை, உடை, பாவனை, உணவு, உரையாடல் முதலியவைகளில் ஈடுபட்டு அவைகளைக் கையாளுவோமானால் படிப்படியாக நமது பண்பாடு, அறம் இவைகளிலிருந்து நாம் நழுவி நமது ஆன்ம நலனுக்கு இடையூறு செய்து கொள்வதோடு, புண்ணிய பூமியாகிய இந்தப் பாரத நாட்டுக்கே கெடுதி ஏற்படுத்தி விடுவோம்.

பாரத நாட்டில் தற்காலம் நமது மக்கள் பெரும்பாலும் சிறு பிராயம் முதலே நம் தேசத்துக்குரிய ஒழுக்கம், பண்பாடு, இறை வணக்கம், ஆத்ம தியானம் இவ்விதமான பழக்கமே இல்லாமலிருந்து வருகின்றனர். விஞ்ஞானத்தைப் பயில்வதில் மட்டுமின்றி வாழ்முறையிலும் கூட வெளிநாட்டாரது முறைகளையே பின்பற்றி வருகின்றனர். இதனால் மக்களுக்கு இந்த உலகத்தின் சாமானிய இன்பத்தையும் மறு உலகத்தின் பேரின்ப வழியையும் அடையத் தடை ஏற்படுகிறதென்பது தெளிவு. ஆஸ்திகப் பரம்பரையில் தோன்றிய நமது குழந்தைகளுக்குச் சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தருமம், ஒழுக்கம், பக்தி முதலியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு அநுகூலமான கல்வியைப் போதிக்க வேண்டும் என்பதே எனது விருப்பம்.






# தி பாலக்காடு கிரெடிட் கார்ப்பொரேஷன் (Regd.)

ஸ்தாபிதம் ; 1950

Head Office : 5, நாஞராவ் நாயுடு தெரு
தி. நகர், சென்னை - 17

## ரெக்கரிங் டெபாசிட்டுகள்

| பிரதி மாதம் | மேற்கண்ட மாதங்களுக்குப்பின் திரும்பப் பெறக்கூடிய தொகை | | | |
|---|---|---|---|---|
| ரூ. | 12 | 24 | 36 | 75 மாதங்கள் |
| 5 | 62-50 | 130/- | 205/- | 500/- |
| 10 | 125-00 | 260/- | 410/- | 1000/- |
| 20 | 250-00 | 520/- | 820/- | 2000/- |
| 50 | 625-00 | 1300/- | 2050/- | 5000/- |
| 100 | 1250-00 | 2600/- | 4100/- | 10000/- |
| 250 | 3125-00 | 6500/- | 10250/- | 25000/- |
| 500 | 6250-00 | 13000/- | 20500/- | 50000/- |

## பிக்சட் டெபாசிட்டுகளும்

1 வருடம் 9% P. A. வட்டி
2 வருடங்களுக்கு 9½% ,,
3 வருடங்களுக்கு 10% ,,

வீதம் பெற்றுக் கொள்ளப்படுகிறது. குறைந்த பட்ச டெபாசிட் ரூ. 100/-. பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்.

5 வருட காஷ் சர்டிபிகேட்டுகள்

ரூ. 100/-, ரூ. 1000/-க்கும் முறையே ரூ. 62/- ரூ. 620/- வீதம் வழங்கப்படுகிறது.

A. S. P. அய்யர்,
மானேஜிங் பார்ட்னர்.

கிளைகள் :

சென்னை நகரம் : (1) 331/333, தம்பு செட்டித் தெரு, ஜார்ஜ் டவுன். (2) 9, கொன்னூர் ஹைரோடு, அய்யாவரம். (3) 14, தங்கசாலை தெரு, சென்னை-3. (4) 2/96, பெரிய தெரு, திருவல்லிக்கேணி.

இதர இடங்கள் : (1) 85, ஒப்பணைக்காரத் தெரு, கோயமுத்தூர். (2) பெரிய பஜார், பாலக்காடு-1. (3) 3-6-345/A, பஷீர்பாக், ஹைதராபாத்-29. (4) தீபக்வில்லா, பிளாட் நெ. 105/6, கோவாண்டி ரோடு, செம்பூர், பம்பாய்-71.



மெலட்டூர் நாட்டிய நாடக நிகழ்ச்சிகளில் நடத்துவதற்காக ஸ்ரீ வேங்கடராம சாஸ்திரியாரால் தெலுங்கு மொழியில் இயற்றப்பட்ட துருவ சரித்திர நாட்டிய நாடகம் என்ன காரணத்தினாலோ இதுவரையில் அரங்கம் ஏறவில்லை. இந்தச் சம்பிரதாயத்துக்கு வாரிசாக விளங்கும் ஸ்ரீ பாலு பாகவதரின் உதவியைக் கொண்டும் மற்றும் பலருடைய ஒத்துழைப்பைப் பெற்றும் முதல் தடவையாக இந்நாட்டிய நாடகத்தை அரங்கேற்றியுள்ளது கலாக்ஷேத்திரம்.

# இரு நாட்டிய நாடகங்கள்

சோக பாவம் பிரதானமாக இழை ஓடும் இந்நாடகத்தில் உத்தானபாதராக ஜனார்த்தனனும், ஸுநீதியாக சத்தியபாமாவும், ஸுருசியாகச் சீதாலக்ஷ்மியும் தோன்றி உணர்ச்சி வேகங்களை அநாயாசமாக வெளிக்காட்டினர். ஸுருசியின் அந்தப்புரத்தில் இரு பட்டமகிஷிகளுக்குமிடையே நடக்கும் அபிநய ஸம்வாதம், உணர்ச்சி மாறுபாடுகளை விஸ்தாரமாகக் காட்டச் சத்தியபாமாவுக்கு முழு சந்தர்ப்பம் அளித்தது. இது ஓர் அழகான காட்சி. இரு மனைவியர்களிடையே அகப்பட்டுத் தவிக்கும் ராஜனின் சோகம் மேடையிலிருந்து சபைக்குக்கூடத் தாவிற்று. துருவனாகவும், உத்தமனாகவும் தோன்றிய பத்மாவும் சாந்தாவும் அற்புதமாக நடித்தனர். அவர்களுடைய இளமையும், குழந்தைமையும், களங்கமற்ற உள்ளமும் மனம் கவருவனவாக இருந்தன. துருவனுடைய தவக் கோலம் படத்தில் காண்பது போலவே இன்னமும் கண்முன் நிற்கிறது. எல்லோரும் ஒற்றுமைப்படும் காட்சி, சோக



உணர்ச்சியை மாற்றும் காட்சியாக மட்டுமில்லாமல் அவர்களின் பாவம் பெருக்குக்கும் இடமளித்தது.

கலாக்ஷேத்திரம் அரங்கேற்றிய இரண்டாவது நடன நாடகம் திருவேற்காட்டுத் தேவி கருமாரி அம்மனது புகழைச் சித்திரிக்கும் கிருஷ்ணமாரி குறவஞ்சி. இத்திருக் கோவிலின் தேவதையின் கட்டளையால் மேற்கொள்ளப்பட்ட இந்நாட்டிய நாடகத்துக்குக் கிருஷ்ணமாரி குறவஞ்சி என்ற நாமகரணமே தேவியின் வாக்கு என்று உணர்ச்சியுடன் கூறியுள்ளார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி. இதைத் தயாரிப்பதில் அவர் அசாதாரண உழைப்பை மேற்கொண்டு தமது கலைத் திறமை முழுவதையும் காட்டியுள்ளார் என்றால் மிகையாகாது.

வேதபுரி நாதனின் திருவீதி பவனியில் அவர் அழகைக் கண்டு மையல் கொண்ட மதனவல்லி தனது அபிலாஷை பூர்த்தி பெற, குறத்தியின் துணை கொண்டு தேவி கருமாரியைப் பூஜிக்க, தேவியே பிரசன்னமாகிக் காட்சி தந்து அருள் பாலிக்கிறாள். தேவியே தோன்றுவதுதான் இந்தக் குறவஞ்சி நாடகத்தில் புதுமை. மற்ற அம்சங்கள் இதர குறவஞ்சி நாடகங்களைப் போலவே என்றாலும் இதில் நடனங்களும், பாவங்களும், "கோரியோகிரபி" (அரங்க மேடையில் பாத்திரங்கள் நடமாடும் ஒழுங்கு முறை)யும் அற்புதம் என்று சொல்ல வேண்டும். "கெலிடாஸ்கோப்" என்ற வெகுரூப தர்சனியில் வர்ணக் கோலங்கள் மாறி மாறி ரம்மியமாகக் காண்பதுபோல கிருஷ்ணமாரி குறவஞ்சியில் ஐந்தாறு நாட்டியமணிகள் நெருங்கியும் விலகியும் எழிலுடன் ஆடியது கண்கொள்ளாக் காட்சி.

கிருஷ்ணவேணியின் அபிநயங்களும் நடனங்களும் முகபாவங்களும் முதல் தரம். ஒவ்வொரு பாவமும் முழுப் பொலிவுடன் அப்பழுக்கின்றிக் கலையின் முத்திரையை அள்ளி வீசியது.

குறத்தியாக வந்த சத்தியபாமாவின் நடனங்கள் இந்த நிகழ்ச்சிக்குச் சோபை அளித்த மற்றொரு அம்சம். இரண்டாவது பகுதி முழுவதும் சத்தியபாமாவுக்குச் சொந்தம் என்றே சொல்ல வேண்டும்.

தேவி கிருஷ்ணமாரி புரியும் நாக நடனம் அடக்கமான நடனத்துக்கு எடுத்துக்காட்டு. பாம்பு நடனங்கள் மேடையில் நிகழ்த்துவது சாதாரணமாக ரசிக்கக் கூடிய எல்லையைத் தாண்டிவிடும். அதை ஓர் அளவுக்குள் கட்டுப்படுத்தியது ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் கலை உணர்ச்சியும் ரசிகத்தன்மையுமாகும்.

தேவி கருமாரி தாஸரின் பாட்டுகளும் பாபநாசம் சிவனின் மெட்டுகளும் நாட்டிய நாடகத்துக்குச் சோபை அளித்தன. கமலாராணியின் பாட்டும் பாகவதுல சீதாராம சர்மாவின் நட்டுவாங்கப் பின்னணிப் பாட்டும் அமைதியாகவும் அளவுடனும் அழகாக அமைந்திருந்தன. தேவி கருமாரி பக்தர்களுக்குப் பரவசமூட்டும் இந்தக் குறவஞ்சி நடனம்.

- எம். எஸ். சிவஸ்வாமி







# விக்ராந்தின் வெற்றி

புத்தாண்டு தினம். அன்றைக்குக் காலையில் எழுந்ததும் முதல் காரியமாகப் புதிய பங்களா தேச உதயத்துக்குப் பெரும் போரிட்டு வெற்றி வாகை சூடிய நமது விமானத் தாங்கிக் கப்பல் ஐ.என்.எஸ். விக்ராந்துக்குள் அடியெடுத்து வைக்கிறோம். கப்பல் தளத்தை மிதித்ததும் நம்மை அறியாமல் வீர நடை போடுகிறோம். வீரத்தின் விளைநிலமல்லவா?

காப்டன் பிரகாஷ் கூறினார்: ''கப்பற்படையின் கிழக்குப் பிரிவு, போர் வந்தால் இப்படிச் செயலாற்ற வேண்டும் என்று வைஸ் அட்மிரல் கிருஷ்ணன் முன்கூட்டியே திட்டமிட்டுக் கொடுத்திருந்தார். போர் தொடங்குவதற்கு முன்னாலேயே பாகிஸ்தான் சப்மரைன் காஸி (Ghazi) வங்காளக்குடாக் கடலில் நடமாடிக் கொண்டிருந்தது. யுத்தம் மூண்டதும் எங்கள் கப்பற் படை விழிப்புடனிருந்து அதனைத் தாக்கி மூழ்கடித்தது. பெட்ரோல் கடல் நீரில் மிதந்ததும் 'எங்களை நாலு கப்பல்கள் சூழ்ந்து அழிக்கின்றன. காப்பாற்றுங்கள்!' என்று அவர்கள் ரேடியோவில் ஓலமிட்டதும் காஸியின் முடிவை அம்பலப் படுத்தின.''

''விக்ராந்தின் காப்டனை நீங்கள் இந்தப் பங்களா தேசப் போரில் பெருமைப் படக்கூடிய நேரமாகக் கருதுவது எதை?''

''சிட்டகாங் நகரைத் தாக்கி இருபத்து நான்கு மணி நேரத்தில் அந்நகரைச் சரணடைய வைத்தோம். பாகிஸ்தான் வீரர்கள் குழிகளுக்குள் சென்று பதுங்கினார்கள். கிழக்கு வங்காள மக்கள் கரை மீதேறி எங்கள் விமானத் தாக்குதலைப் பார்வையிட்டனர். சிட்டகாங் நகர் ஸ்தம்பித்துப் போய் எங்கள் வசமாயிற்று. சிட்டகாங் விமான தள அதிகாரி கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவர். அவரைச் சந்தித்ததும், 'மன்னிக்கணும், ரொம்பவும் கடுமையாகத் தாக்கி விட்டோம்!' என்

## பொங்குக ஜோக்குகள்! ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★



''போர்வீரர்களுக்கு நீ பண்ணின பொங்கலைக் கொடுத்தனுப்பப் போறேன்.''

''ரொம்ப சந்தோஷம்.''

''பாகிஸ்தான் போர் வீரர்களுக்கு!''



''போன முறை எங்கள் வீட்டுக்குப் பொங்கல் சாப்பிட வந்தீர்களே, இந்த முறை ஏன் வரவில்லை?''

''போன முறை வந்ததால் தான்!''

மாஜி எம். பி.: ''எலக்ஷனிலே நான் ஜெயிச்சிருந்தால் 25-வது திருத்தத்துக்கு ஆதரவாகக் கை தூக்கி யிருப்பேன்!''

''உம்...போகட்டும்! அந்தத் தடவையாவது ஜெயிச்சு, வாங்கின கடனைத் திருப்பித் தர வேண்டாம்னு ஒரு சட்டம், வாழைக்காய் வாங்கினதுக்கு காசு தரவேண்டாம்னு ஒரு சட்டம் பாஸ் பண்ணுங்க! கடன்காரன், கறிகாய் கடைக்காரங்க தொல்லே அதிகமாப் போச்சு!'' — சுதர்சன்

விருந்தினர்: பொங்கல் கமகமவென்று வாசனை பிரமாதமா இருக்கே! உங்களுக்கு மண்ணெண்ணெய் எங்கே கிடைக்குது?

—கிட்டு



□

''நான் பண்ணின பொங்கலை ஆபீசுக்கு எடுத்துக் கொண்டு போனீர்களே, என்ன சொன்னார்கள்?''

''மானேஜரும் சாப்பிட்டுப் பார்த்தார். அவர் ஒரு கோந்துக் கம்பெனி ஆரம்பிக்கப் போகிறாராம். என்னைப் பங்குதாரராகச் சேர்த்துக் கொள்வதாகச் சொல்லியிருக்கிறார்!'' —கே. வி. எம்.





இவ்வாண்டு மியூஸிக் அகாதமியின் சதஸ்ஸுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீமதி ருக்மிணி தேவி, 'பாடும்போது மட்டும் அல்லாமல் இருபத்திநாலு மணி நேரமும் பக்தியுடன் இருப்பவர் ஸ்ரீ சிவன்' என்றார். அவர் பாடல்களில் உள்ள தெய்விகத் தன்மையால் கவரப்பட்டு ஒரு முறை ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை நடுத்தெரு என்பதையும் லட்சியம் செய்யாமல் பாதம் பணிந்து வணங்கியதை நினைவுகூர்ந்தார். 'சங்கீத கலாநிதி' விருதை வழங்கிய அவர், 'சிவனுக்கு இதனால் புதுப் பெருமை இல்லை யெனினும் இவ்வாறு மேதைகளைப் போற்றுவது நமக்கு நன்மை பயக்கும்' என்றார்.

இவ்வாண்டு வீணை சண்முக வடிவு நினைவுப் பரிசான வீணையை ஸ்ரீமதி ராஜேசுவரி பத்மநாபன் பெற்றார். அமரர் கல்கி நினைவுப் பரிசான தம்பூராவை குமாரி கே. சாந்தி வென்றார்.





றேன். 'இல்லை. நாங்கள் உங்களுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறோம். உங்கள் தாக்குதலால் கிழக்கு வங்க மக்களுக்குச் சேதம் விளையவில்லை' என்று அவர் எடுத்துரைத்தார். இதுவே எங்கள் 'குறித்த ராணுவ இலக்குத் தாக்குத'லுக்குக் கிடைத்த அரிய பாராட்டுதல்!'' என்று அடக்கத்துடன் கூறினார் காப்டன் பிரகாஷ்.

காப்டன் பிரகாஷ் ஜலந்தரில் பிறந்தவர். இதற்கு முன் நடந்த பாகிஸ்தான் போரிலும் கலந்து கொண்டிருக்கிறார். மாஸ்கோவில் நம் கப்பல் படைப் பிரதிநிதியாக இந்தியத் தூதுவராலயத்தில் செயலாற்றியிருக்கிறார்.

விக்ராந்தின் விமானப் படை லெப்டினன்ட் கமாண்டர் குப்தா காப்டனின் அறைக்கு வந்ததும், ''எங்கள் வெற்றியில் இந்தக் கப்பல் தளத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் பங்கு உண்டு. எனினும் பங்களா தேசப் போரின் கதாநாயகன் இந்தக் கப்பலைப் பொறுத்தவரை இவர்தான். புலியாகச் சீறிச் செயல்பட்ட இவரைக் கூண்டில் வைத்துக் காட்சிப் பொருளாகக் காட்டணும்!'' என்று காப்டன் பிரகாஷ் நகைச்சுவையோடு குப்தாவை (படம்) அறிமுகப்படுத்தி வைத்தார்.

சந்தோஷ் குமார் குப்தா முப்பத்தைந்து வயதான இளைஞர். குடும்பத்தில் பதினொரு பேர்களுக்கிடையில் ஒருவராகப் பிறந்தவர். மைசூர்ப் பெண்மணியை மணந்து ஒரு பெண்ணுக்கும் பிள்ளைக்கும் தந்தையாயிருக்கிறார்.

இரண்டாயிரம் மணி நேரம் விமானம் செலுத்தியுள்ள குப்தா தற்போது சிட்டகாங்கை எட்டு 'கழுகு' விமானங்களுக்குத் தலைமை தாங்கி விக்ராந்திலிருந்து பறந்து சென்று தாக்கினார். சிட்டகாங் நகரை வீழ்த்திய சாதனை, அவருக்கு மகாவீர் பதக்கத்தைப் பெற்றுத் தந்தது.

''காலஞ்சென்ற நமது பாரதப் பிரதமர் நேருஜி 'ஒருங்கிணைந்த இந்தியா'வைப் பார்க்க வேண்டுமானால் கப்பலுக்குப் போக வேணும் என்பார். காஷ்மீரிலிருந்து கன்யாகுமரிவரை கல்கத்தாவிலிருந்து பம்பாய் வரை அனைத்திந்திய மக்களும் உழைக்கும் கப்பல் விக்ராந்த் பாரதத்தின் ஒருமைப்பாட்டுக்கு ஒரு சின்னமாகத் திகழுகிறது. 1700 பேர்கள் விக்ராந்தின் வெற்றிக்கு நாள்தோறும் அனவரதமும் பாடுபடுகிறோம்'' என்று கூறினார் காப்டன் பிரகாஷ். விக்ராந்தின் அத்தனை கப்பல் வீரர்களின் முகங்களிலும் வெற்றிப் பெருமிதம் தாண்டவமாடியது. ''விக்ராந்துக்கு ஏற்படும் செலவு குறித்துச் சில அரசியல்வாதிகள் 'யானையைக் கட்டித் தீனி போடுவதா?' என்று சொல்லும்போது எங்களுக்குக் கஷ்டமாக இருக்கும். இனி அப்படிப் பேசுவார்களா!'' என்று முத்தாய்ப்பு வைத்தார் காப்டன் பிரகாஷ். —பி.எஸ்.எம்.



# பேனாப் போர்!

சமீபத்திய யுத்தத்தின்போது துப்பாக்கிக் குண்டுகள் பறந்தது ஒருபுறமிருக்க, பேனாக்களும் போர் நடத்தின. கடகட விழுந்த வார்த்தைக் குண்டுகள் சிலவற்றை இங்கு காணலாம்.

## வேண்டாம் உங்கள் பரிசு

★ டெல்லி பத்திரிகை நிருபர் பி. கே. நரேஷ் என்பவர் இந்திரா காந்தியுடன் அமெரிக்கா சென்றிருந்தார். அப்பொழுது அவருக்கு நிக்ஸன் ஒரு பார்க்கர் பேனா பரிசாகக் கொடுத்தார். அந்தப் பேனாவை இப்பொழுது நரேஷ் நிக்ஸனுக்குத் திருப்பி அனுப்பி விட்டார்! -பிளிட்ஸ்

## இடுக்கண் களைவதாம் நட்பு

★ நமது நண்பர்கள் என்று சொல்லிக்கொள்ளும் அரபு நாடுகள் நம்மைப் பாகிஸ்தானுக்கு எதிராகப் படையெடுத்ததாகக் குற்றம் சாட்டும்பொழுது இஸ்ரேல் நாடு பங்களா தேஷ் அகதிகளுக்காக 75 டன் புரத உணவும் பொருள் அனுப்பியுள்ளது. இதிலிருந்து உண்மை நண்பன் யார் என்று தெரியவில்லையா? - டைம்ஸ் ஆப் இந்தியா கடிதம்

## அவர் செய்த தொண்டு

★ "இந்திரா காங்கிரஸுக்கும் பல லட்சக் கணக்கான வோட்டுகளை யாஹியா கான் வழங்கியிருக்கிறார்!"

- டெக்கான் ஹெரால்ட் கார்ட்டூன்

## பகைவனுக்கருள்வாய்

★ காயமடைந்து உதம்பூர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்ட ஒரு பாகிஸ்தானி போர்க் கைதிக்கு ரத்தம் தேவைப்பட்டது. அசாதாரண ரகத்தைச் சேர்ந்த அந்த ரத்தம் ஆஸ்பத்திரியில் இல்லை. ஆகவே நகரில் உள்ளவர்களுக்கு ஒரு வேண்டுகோள் அனுப்பப்பட்டது. கடைசியில் கல்லூரி மாணவர் ஒருவர் ரத்த தானம் செய்து அவரைக் காப்பாற்றினார். -டெக்கான் ஹெரால்ட்

## தப்பு! தப்பு! தப்பு!

★ "அமெரிக்க அரசு தப்பான அரசை, தப்பான நேரத்தில் தப்பான இடத்தில் தப்பான காரணத்துக்காக ஆதரித்திருக்கிறது." -ஸ்டேட்ஸ்மேன் கடிதம்

## இருட்டில் திருட்டு!

★ இருட்டடிப்புச் சமயத்தில் கல்கத்தாவில் கார்ப்பரேஷன் பல்புகளைச் சிலர் திருடிக்கொண்டு போய்விட்டதால் அங்கு பல தெருக்களில் இன்னமும் இருட்டடிப்பு நீடிக்கிறது. - ஸ்டேட்ஸ்மன்

## பேச்சைப் பணமாக்கு!

★ இந்திரா காந்தியின் போர்க் காலத்திய பேச்சுக்களை நீண்ட நேர கிராமபோன் ரெக்கார்டுகளாக வெளியிடலாம். லாபத்தைப் பாதுகாப்பு நிதிக்கு அளிக்கலாமே!

- டெக்கான் ஹெரால்ட் வாசகர் யோசனை

## 108 தேங்காய்

★ பாகிஸ்தானி நீர்மூழ்கிக் கப்பல் 'காஸி' மூழ்கடிக்கப்பட்டதற்காக, வைஸ் அட்மிரல் கிருஷ்ணன் விசாகப்பட்டினத்திலுள்ள பிள்ளையார் கோவிலுக்கு 108 தேங்காய் உடைக்கச் செய்தாராம். பிளிட்ஸ்

## ஏட்டிக்குப் போட்டி

★ "இந்திய ராணுவம் எங்களைத் தோற்கடிக்கவில்லை. ரஷ்யப் படை பலம் எங்களைத் தோற்கடித்தது" என்று பூட்டோ பேசியதற்கு நாம் சொல்ல வேண்டிய பதில் "நாங்கள் பாகிஸ்தான் ராணுவத்தைத் தோற்கடிக்கவில்லை. அமெரிக்கப் படை பலத்தைத் தோற்கடித்தோம்." -ஸ்டேட்ஸ்மன் கடிதம்.

தொகுப்பு: கே. ஆர்.

# அலை ஓசை



அமரர் **கல்கி**

முதல் பாகம்

## பூகம்பம்

# அலை ஓசை

அமரர் கல்கி





## முதல் அத்தியாயம்

## தபால் சாவடி



சாலையின் இருபுறத்திலும் ஆல மரங்கள் சோலையாக வளர்ந்திருந்தன. ஆதியும் அந்தமும் இல்லாத பரம்பொருளைப் போல் அந்தச் சாலை எங்கே ஆரம்பமாகிறது, எங்கே முடிவாகிறது என்று தெரிந்துகொள்ள முடியாததாயிருந்தது. பகவானுடைய விசுவரூபத்தின் அடியும், முடியும்போல, இரு திசைகளிலும் அடர்ந்த மரக் கிளைகளினிடையில் அந்தச் சாலை மறைந்துவிட்டது.

கிழக்கு மேற்காக வந்த சாலை வட திசை நோக்கித் திரும்பிய முடுக்கிலே ராஜம்பேட்டைக் கிராமத்தின் தபால் சாவடி எழுந்தருளியிருந்தது. அதன் வாசற்கதவு பூட்டியிருந்தது. தூணிலே இரும்புக் கம்பியினால் கட்டித் தொங்க விடப்பட்டிருந்த தபால் பெட்டி இக்கற்ற அநாதையைப் போல் பரிதாபத் தோற்றம் அளித்தது.

சற்றுத் தூரத்தில் ஒரு கட்டை வண்டி 'லொடக்' 'லொடக்' என்ற சத்தத்துடனே சாவகாசமாக அசைந்து ஆடிய வண்ணம் சென்றது. வண்டிக்காரன், 'அய் அய்' என்று அதட்டி மாடுகளை முடுக்கினான்.

தபால் சாவடிக்கு எதிரே சாலையின் மறு பக்கத்தில் ஒரு மிட்டாய்க் கடை. அந்தக் கடையின் வாசலில் அப்போது ஆள் யாரும் இல்லை. உள்ளேயிருந்து 'சொய் சொய்' என்ற சத்தம் மட்டும் கேட்டது. அந்தச் சத்தத்தோடு கடைக்குள்ளிருந்து வந்த வெங்காயத்தின் வாசனையும் சேர்ந்து மிட்டாய்க் கடை அய்யர் மசால் வடை போட்டுக்கொண்டிருக்கிறார் என்பதை விளம்பரப்படுத்தின.

ஆலமரக் கிளையில் நிர்விசாரமாகக் குடியிருந்த பறவைகள் உல்லாசமாகக் கிறீச்சிட்டுக் கொண்டிருந்தன.

அதோ 'டக்கு டக்கு' என்ற பாதக் குறட்டின் சத்தம் கேட்கிறது. வருகிறவர் ஸ்ரீமான் கே. பி. பங்காரு நாயுடு பி. பி. எம். அவர்கள்தான்.

பி. பி. எம். **(B. P. M.)** என்றால் சாதாரணமாக நினைத்துவிட வேண்டாம். பிராஞ்சு போஸ்ட் மாஸ்டர் என்று அறிந்து கொள்க.

கிராமத்துப் போஸ்டுமாஸ்டருக்குச் சம்பளம் சொற்பந்தான். ஆனால், அவருடைய அதிகாரம் பெரியது. அவருடைய உத்தியோகப் பொறுப்பு அதைவிட அதிகமானது.

''ஜில்லா கலெக்டராகட்டும்; ஹிஸ் எக்ஸலென்ஸி கவர்னரே யாகட்டும்; இந்தத் தபால் ஆபீஸுக்குள் அவர்களுடைய அதிகாரம் செல்லாது! இன்னொருவருக்கு வந்த கடிதத்தைக் கொடு என்று கவர்னர் கேட்டாலும், 'மாட்டேன்' என்று சொல்ல எனக்கு அதிகாரம் உண்டு!'' என்று நாயுடுகாரு மிகுந்த பெருமிதத்துடன் சொல்லிக் கொள்வார்.

• • •

இதோ அருகில் வந்துவிட்டார் போஸ்டு மாஸ்டர் பங்காரு நாயுடு. தபால் சாவடியின் பூட்டில் திறவுகோலைப் போட்ட உடனே கதவு திறந்து கொள்கிறது.

பங்காருநாயுடு அவருடையசாம்ராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறார். ஆனால் வாசற்படியைத் தாண்டியதும் மேலே அடி வைக்க முடியாமல் பிரமித்துப்போய் நிற்கிறார்.

தபால்கார பாலகிருஷ்ணன் உள்ளே சாவ






தானமாக உட்கார்ந்து நேற்று வந்த தபால்களை வரிசைப்படுத்தி வைத்துக் கொண்டிருக்கிறான்.

* * *

போஸ்டுமாஸ்டர் திகைத்து நின்றதைக் கண்ட பாலகிருஷ்ணன், ''ஏன் ஸார், இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்? நான் என்ன பேயா, பிசாசா?'' என்று கேட்டான்.

''நீ-நீ-வந்து-வந்து... எப்படி அப்பா நீ உள்ளே புகுந்தாய்?'' என்று பங்காரு நாயுடு தடுமாறிக்கொண்டே கேட்டார்.

''எனக்கு இக்ஷிணி வித்தை தெரியும், ஸார்! கொஞ்ச நாள் நான் பீதாம்பர அய்யரின் சிஷ்யனு யிருந்தேன். கண் சிமிட்டும் நேரத்தில் இந்தச் சுவருக்குள்ளே நுழைந்து வெளியிலே போய் விடுவேன்!''

''உண்மையைச் சொல், அப்பனே! விளையாடாதே!''

''என்ன ஸார், அப்படிக் கேட்கறீங்க! விளையாடுவதற்கு நான் என்ன பச்சைக் குழந்தையா?''

''போஸ்டாபீஸ் கதவு பூட்டியிருக்கும்போது எப்படி உள்ளே வந்தாய்? சொல், அப்பா!''

''கதவு பூட்டியிருந்ததா, ஸார்? பார்த்தீங்களா, ஸார்?''

''பின்னே? இப்பத்தானே சாவியைப் போட்டுத் திறந்தேன்?''

''சாவியைப் போட்டுப் பூட்டைத் திறந்தீங்க! ஆனல், கதவைத் திறந்தீங்களா என்று கேட்டேன்.''

''பூட்டைத் திறந்தால் கதவைத் திறந்ததல்லவா, தம்பி! என்னவோ மர்மமாய்ப் பேசுகிறயே?''

''ஒரு மர்மமும் இல்லீங்க, ஸார்! நேற்று சாயங்காலம் ஒருவேளை கொஞ்சம் 'மஜா'விலே இருந்தீங்களோ, என்னமோ! நாதாங்கியை இழுத்து மாட்டாமல் பூட்டை மட்டும் பூட்டிக்கிட்டுப் போய்விட்டீங்க!''

போஸ்டு மாஸ்டர் சற்றுத் திகைத்திருந்துவிட்டு, ''பாலகிருஷ்ணு! கடவுள் காப்பாற்றினர். பார்த்தாயா? நீ புகுந்ததுபோல் திருடன் புகுந்திருந்தால் என்ன கதி ஆகிறது!'' என்று உச்சி மேட்டை நோக்கிக் கும்பிட்டார்.

''கதி என்ன கதி? அந்தத் திருட்டுப் பயலின் தலைவிதி வெறுங் கையோடே திரும்பிப் போயிருப்பான்! இங்கே என்ன இருக்கிறது, திருட்டுப் பசங்களுக்கு? அது போகட்டும் ஸார், தபால் பெட்டியின் சாவியை இப்படிக் கொடுங்க!''

சாவியை வாங்கிக் கொண்டு போய்ப் பாலகிருஷ்ணன் தபால் பெட்டியைத் திறந்து அதிலிருந்த தபால்களை எடுத்துக் கொண்டு வந்தான். தபால்களின் மேலே ஒட்டியிருந்த தலைகளில் 'டட—டக்' 'டட—டக்' என்று தேதி முத்திரை குத்த ஆரம்பித்தான்.

போஸ்டுமாஸ்டர் ஒரு சிறு தகரப் பெட்டியில் இருந்த தபால் தலைகளை எண்ணிக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தவர், திடீரென்று தலையை நிமிர்த்தி, ''ஏனப்பா, பாலகிருஷ்ணு! தேதியைச் சரியாக மாற்றிக் கொண்டாயா?'' என்று கேட்டார்.

பாலகிருஷ்ணன் முத்திரை அடிப்பதை நிறுத்திவிட்டு, ''என்ன கேட்டீங்க, ஸார்?'' என்றன்.

''முத்திரையில் தேதியைச் சரியாக மாற்றிக் கொண்டாயா என்பதாகக் கேட்டேன்.''

''இன்றைக்குத் தேதி பதினைந்து தானே சார்?''

''தேதி பதினைந்தா? நான் சந்தேகப் பட்டது சரிதான்!''

''பின்னே என்ன தேதி, ஸார்!''

''பதினாறு அப்பா, பதினாறு !''

''கொஞ்சம் உங்கள் எதிரிலே இருக்கிற சுவரிலே பாருங்க, ஸார் !''

பாலகிருஷ்ணன் காட்டிய இடத்தில், தினகரன் காலண்டர் மாட்டியிருந்தது. அது 1933ஆம் வருஷம் ஜனவரி மீ 15உ என்று காட்டியது.

''அட, பரந்தாமா! வருஷத்தைக் கூட இதைப் பார்த்துப் போட்டுவிட்டாயோ ?''

'' பின் எதைப் பார்த்துப் போடுகிறது? காலண்டர் காட்டுகிற வருஷம் மாதம் தேதிதானே போட்டுத் தொலைக்க வேணும்?''

'' அட கேசவா ! இது போன வருஷத்துக் காலண்டர் அல்லவா? வருஷம், தேதி இரண்டும் பிசகு!''

பங்காரு நாயுடு எழுந்து போய்க் காலண்டரில் வருஷத்தையும் தேதியையும் மாற்றினார். இப்போது அந்தக் காலண்டர் 1934ம் வருஷம் ஜனவரி மீ 16ந் தேதியைக் காட்டியது.

**சா**லையில் பெட்டி வண்டி ஒன்று இரு பெரும் காளைகளால் இழுக்கப்பட்டு ஜம் ஜம் என்று சென்றது.

''பட்டாமணியம் கிட்டாவய்யரின் வண்டி போகிறது, ஸார்!'' என்றான் பாலகிருஷ்ணன்.

''ஆமாம்; ஜனவரி மாதம் பதினாறும் தேதி ஆகிவிட்டதல்லவா? ஜனவரி வசூலிக்கப் பட்டாமணியம் புறப்படுவது நியாயந்தானே?'' என்று பங்காரு நாயுடு ஒரு பழைய சிலேடையைத் தூக்கிப் போட்டார்.

''ஏன் ஸார்! கிட்டாவய்யர் பெண்ணுக்கு எப்போது கல்யாணமாம்? உங்களுக்குத் தெரியுமா?''

''பாலகிருஷ்ணா! உனக்கு என்ன அதைப் பற்றிக் கவலை?''

''கவலையாகத்தான் இருக்கிறது. கல்யாணம் ஆகிவிட்டால் அந்தக் குழந்தை புருஷன் வீடு போய்விடும்!''

''போனால் உனக்கு என்ன?''

'' ஏதோ இந்த விடியாமூஞ்சித் தபாலாபீசுக்கு அந்தக் குழந்தை இரண்டிலே, மூன்றிலே வந்து கொண்டிருக்கிறது. அதனால் ஆபீஸ் கொஞ்சம் கலகலப்பாயிருக்கிறது. லலிதா புருஷன் வீட்டுக்குப் போய்விட்டால் அப்புறம் இங்கே ஒரு காக்காய்கூட வராது. நீங்களும் நானும் எதிரும் புதிருமாய் உட்கார்ந்து ஈ ஓட்ட வேண்டியதுதான் !''

## கேட்ட பெயர்கள்; கேட்காத செய்திகள்!



இஸ்லாமாபாத் யாஹியா பாகவதர் அவர்கள் நிகழ்த்தி வரும் மோசனம் யுத்த காண்டப் பிரவசனத்தின் கடைசி நாளாகிய நேற்று விபீஷண சரணாகதிப் பகுதி வெகு சிறப்பாக அமைந்தது. போல்லாத விபீஷணனை ராமபிரானிடம் சரணடையுமாறு ராவணனேதான் தூண்டினான் என்று புதிய மோசன விளக்கங்களைக் காட்டிப் பாகவதர் பலத்த பாராட்டுக்குள்ளானார். இன்றைய விபீஷண சரணாகதிப் படலப் பிரவசனத்துடன் யாஹியா பாகவதர் தமது தொழிலை மூட்டை கட்டிவைத்துவிட்டு ஓய்வு பெறுகிறார்.

★




இரட்டைத் தண்டவாளங்களை ஒன்றாக இணைத்து அதில் ரயிலும் ஓட்டிக் காட்டுவோம் என்று சொல்லியவர் பூட்டோ பாக் விஞ்ஞானக் கழகத்தில் கூறியிருக்கிறார். விஞ்ஞானக் கழகத் தலைவர் பூட்டோ ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் இந்தப் பணியிலிருந்து நாங்கள் பயந்து ஒதுங்கமாட்டோம் என்று சொல்லித் தம் தொண்டர்களை அடிக்கடி உற்சாகப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

★



கடந்த சுமார் பத்து மாதங்களாகப் பூமிக்கடியில் இருந்து தவயோகம் செய்து காட்டிய யோகி முஜ்பிரானந்தா, இனி பூமிக்கு மேல் சில அபூர்வ ஆசனங்கள் போட்டுக் காண்பிப்பார் என்று நம்பத் தகுந்த வட்டாரங்களிலிருந்து செய்தி வந்திருக்கிறது.

★



சர்க்கரை விலை உயர்வினால் பொங்கல் திருநாளுக்குக் கரும்பு விநியோகம் பாதிக்கப்படுமே என்று தமிழக மக்கள் கவலைப்பட வேண்டாம் என்றும், மூன்று ரூபாய்க்கு ஒரு கரும்பு விகிதத்திலாவது ரேஷன் முறையில் வழங்கப்படலாம் என்றும் உணவு அமைச்சக அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

-- திருவேரகத்தான்

''பாவம்! இந்த ஆபீசுக்கு ஈயாவது வரட்டுமே, பாலகிருஷ்ணு! அதை ஏன் ஓட்ட வேண்டுமென்கிறாய்?''

''ஈயை ஓட்டாமல் என்னத்தைச் செய்வது? அதை நான் ஓட்டாவிட்டால் இங்கே இருக்கிற பசையை யெல்லாம் அது ஒட்டிக் கொண்டு போய்விடும். பாருங்கள், சார்! நான் தேவபட்டணம் தபாலாபீஸில் வேலை பார்த்தபோது மாதம் பிறந்து ஏழாந் தேதிக்குள்ளே நூறுக்குக் குறையாமல் மணியார்டர் வந்து குவியும்!''

''யாருக்கு உனக்கா?''

''எனக்கு என்னத்திற்கு வருகிறது? கொடுத்து வைத்த மவராசன் மகன் களுக்கு வரும்.''

''யாருக்கோ மணியார்டர் வந்தால் உனக்கு என்ன ஆயிற்று?''

''மணியார்டர் ஒன்றுக்கு அரைக் கால் ரூபாய் விதம் நூற்றரைக்கால் இருபத்தைந்து ரூபாய் நம்பளுக்குக் கிடைக்கும்.''

''நூற்றரைக்கால் இருபத்தைந்தா? கணக்கிலே புலிதான்!''

''தேவபட்டணத்திலே நூற்றரைக் கால் இருபத்தைந்துதான். இந்தத் தரித்திரம் பிடித்த ஊரில் நூற்றரைக் கால் ஏழரைக்கூட ஆகாது!''

''போதும்! போதும்! வேலையைப் பார், கிருஷ்ணு! தங்கவேலு அதோ வந்துவிட்டான்!''

வெளியே சற்றுத் தூரத்தில் 'ஜிங் ஜிங் ஜிக ஜிங்' என்ற சத்தம் கேட்டது. வரவர அந்தச் சத்தம் தபாலாபீஸை நெருங்கியது. ரன்னர் தங்கவேலு கையி லுள்ள ஈட்டிச் சிம்பைக் குலுக்கிக் கொண்டு தபால் சாவடியின் வாசலுக்கு வந்து சேர்ந்தான்.

## 2. தாயின் உள்ளம்

ராஜம்பேட்டை அக்கிரகாரத்து வீடுகளில் சரிபாதி வீடுகளுக்கு மேலே பாழடைந்து கிடந்தன. உருப்படியாக இருந்த வீடுகளில் பட்டாமணியம் கிட்டாவய்யரின் வீடு இரட்டைக் காமரா அறைகளுடன் கம்பீரமாக நிமிர்ந்து நின்றது.

வீட்டின் முன் கட்டில் செங்கல் — செமெண்ட் தளம் போட்ட கூடத்தில் உட்கார்ந்து கொண்டு சரஸ்வதி அம் மாள் தன் மகள் லலிதாவுக்குச் சடை பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள். பின் னல் முடியும் சமயத்தில், தபால் ஆபீஸ் பங்காரு நாயுடுவும் பாலகிருஷ்ணனும் கேட்ட 'ஜிங் ஜிங் ஜிக ஜிங்' என்னும் சத்தம் அந்த வீட்டுக்குள்ளேயும் நுழைந்து இலேசாகக் காதில் விழுந்தது.

''எத்தனை நேரம் அம்மா! சீக்கிரம் பின்னிவிடேன்!'' என்றாள் லலிதா.

''மெதுவாகத்தான் பின்னுவேன். என்ன அப்படி அவசரமாம்? படை ப்டைக்கிற வெய்யிலிலே தபாலாபீசுக்கு ஓட வேண்டுமாக்கும்! தபால் வந்திருந் தால் எங்கே போய்விடும்? தானே பால கிருஷ்ணன் கொண்டுவந்து தருகிறான்?''

இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே பின்னல் முடிந்து விட்டது.

அதைத் தூக்கிக் கட்டப் போகும் சமயத்தில் லலிதா சடக்கென்று பிடுங் கிக்கொண்டு எழுந்தாள்.

''நான் கட்டிக் கொள்கிறேன், அம்மா!'' என்று சொல்லிக்கொண்டே வாசற் பக்கம் ஓடினாள்.

''லலிதா! லலிதா! இங்கே வா! வா என்றால் வந்துவிடு! வராவிட்டால்... நீ மாத்திரம் போய்விடுவாயோ? அப் புறம் திரும்பி இந்த வீட்டில் அடி வைத்தால்...''

இவ்விதம் சரஸ்வதி அம்மாள் சத்தம் போட்டுக் கொண்டிருக்கும்போதே பட்டாமணியம் கிட்டாவய்யர் வீட்டுக் குள்ளே நுழைந்தார்.

அப்பாவைப் பார்த்ததும் குழந்தை லலிதா தயங்கி நின்றாள். அவளுடைய தேகம் பூங்கொடியைப் போலத் துவண் டது. கபடு சூதுஅறியாத அவளது குழந்தை முகத்தில் வெட்கமும் சலுகை யும் போட்டியிட்டன.

லலிதாவின் தாயார் கணவனைக் கண்டதும் எழுந்து நின்றாள். அவளைப் பார்த்துக் கிட்டாவய்யர், ''என்ன தடபுடல் சரசு? எதற்காகச் சத்தம் போடுகிறாய்? எப்போது பார்த்தாலும் குழந்தையைக் கோபித்துக் கொள்வது தானா உனக்கு வேலை?'' என்று கடுமை யான குரலில் கேட்டார்.

''ஆமாம்; உங்கள் செல்லக் குழந்தை யைக் கோபித்துக் கொள்வதுதான் எனக்கு வேலை. இப்படி நீங்கள் இடம் கொடுத்துக் கொடுத்து....''

''.... இடம் கொடுத்துக் கொடுத்துச் சர்வ அசடாக ஆக்கிவிட்டேன். போகட் டும்; உன் வயிற்றிலே பிறந்தபோது அவள் சமர்த்தாகப் பிறந்தாள் அல் லவா? அது போதும். இந்தக் கலாட்டா வெல்லாம் இப்போது எதற்காக என்று



கி.ராஜேந்திரன்
எழுதும்

# ஸைக்கோ ஸாரநாதன்

புதிய நாவல்

விரைவில் ஆரம்பம்

கேட்கிறேன். லலிதா என்ன செய்து விட்டாள்?''

''எத்தனையோ தடவை சொல்லியாச்சு! தபாலாபீசுக்குத் தனியாக ஓடுவேன் என்கிறாள். வருகிற தபால் வழியிலா நின்றுவிடும்? தை பிறந்து விட்டது; இந்த வருஷம் எப்படியாவது குழந்தைக்குக் கல்யாணம் பண்ணியாக வேணும்....''

''போதும், நிறுத்து! கல்யாணத்துக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''கல்யாணம் பண்ணும் வயதான பெண்ணை யாராவது தனியாக அனுப்புவார்களா?''

''அனுப்பினால் என்ன? பூகம்பமா வந்துவிடும்? தபால் ஆபீஸ் இரண்டு பர்லாங் தூரம்கூட இல்லை. வீட்டுக்குள்ளே பெண்களைப் பூட்டி வைக்கிற காலமெல்லாம் மலையேறிப் போய் விட்டது..... லலிதா! நீ போய் வா! எனக்கு ஏதாவது தபால் வந்திருந்தால் அதையும் வாங்கிக் கொண்டு வா!''

அவ்வளவுதான்; அம்மாவைக் கடைக்கண்ணால் ஒரு தடவை பார்த்துவிட்டு லலிதா மானைப் போல் துள்ளி வாசலில் ஓட்டம் பிடித்தாள்.

''நானும் பார்த்தாலும் பார்த்தேன். பெண்ணுக்கு இப்படிச் செல்லம் கொடுக்கிறவர்களைப் பார்த்ததேயில்லை. பம்பாய்க்குப் போய்விட்டு வந்ததிலிருந்து அப்பாவும் பெண்ணும் இப்படியாகி விட்டார்கள். இதெல்லாம் என்னத்தில் போய் முடியப் போகிறதோ, என்னமோ?'' என்று சரஸ்வதி அம்மாள் முணுமுணுத்தாள்.

''எல்லாம் சரியாகத்தான் முடியும்; வாயை மூடிக் கொண்டிரு! மாப்பிள்ளை மட்டும் பெரிய படிப்புப் படித்தவனாய் வேண்டும் என்கிறாயே; அதற்குத் தகுந்தபடி பெண்ணைப் பழக்க வேண்டாமா? வீட்டுக்குள்ளே பொத்திப் பொத்தி வைத்துக் கொண்டிருந்தால் எப்படி நாளைக்கு.....''

இதற்குள்ளே வாசலிலிருந்து யாரோ ஒருவர் வருகிற காலடிச் சத்தமும் கனைப்பும் கேட்டன.

சரஸ்வதி அம்மாள் கொஞ்சம் பின்னால் ஒதுங்கிச் சென்று தூண் ஓரத்தில் நின்றாள்.

வந்த மனிதர் கிட்டாவய்யரின் நெருங்கிய நண்பரும் உறவினருமான சீமாச்சுஅய்யர். அந்த நண்பர்களுடைய பேச்சு ஒரு தனி ரகமாயிருந்தது.

''என்ன ஓய்!''

''என்ன ஓய்!''

''என்ன ஓய்!''

''என்ன ஓய்!''

''தெரியுமா ஓய்?''

''என்ன, தெரியுமா?.... ஓய்?''

''காலையில் பட்டணத்திலிருந்து நம்முடைய அத்தான் கல்யாணசுந்தரன் வந்தான். வரும்போது கையில் பத்திரிகை கொண்டு வந்தான். அதில் எல்லாம் சக்கைப் போடாகப் போட்டிருக்கிறது, ஓய்!''

''என்ன போட்டிருக்கிறது, ஓய்?''

''பீஹார் மாகாணத்தில் பூகம்பமாம்!''

''என்ன? என்ன? என்ன?''

---

## அவர் எங்கே?

1931ம் வருஷம் சென்னையில் சேப்பாக்கம் மைதானத்தில் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் பிரஸிடென்ஸி மாட்ச் நடைபெற்றது. விஜயநகரம் மகா ராஜகுமாரும் ஸி.கே. நாயுடுவும் இந்த மாட்சில் கலந்து கொண்டனர்.

ஆந்திர கேசரி பிரகாசம்காரு நடத்தி வந்த 'ஸ்வராஜ்யா' பத்திரிகையில் விளையாட்டுப் பகுதியில் முதல் நாள் பந்தயத்தைப் பற்றி "பிரஸிடென்ஸி மாட்சுக்கு வடநாட்டிலிருந்துதான் ஆட்டக்காரர்கள் வந்து ஆடவேண்டுமா? தமிழகத்தில் ஆட்டக்காரர்கள் இல்லையா?" என்று காரசாரமாக எழுதினார் விளையாட்டு விமர்சகர்.

அடுத்த நாள் சேப்பாக்கம் விளையாட்டு மைதானத்தில் உள்ள 'பிரஸ் பாக்ஸ்'க்கு விஜயநகரம் மகாராஜ குமார் வந்து, "ஸ்வராஜ்யா பத்திரிகை நிருபர் வந்திருக்கிறாரா?" என்று கேட்டார்.

மற்றப் பத்திரிகைக்காரர்கள் தம்மைக் காட்டிக் கொடுப்பதற்கு முன், "இன்னும் அந்தப் பத்திரிகை நிருபர் வரவில்லை" என்று அந்த விளையாட்டு விமர்சகரே எழுந்து சொல்லிவிட்டார்! அவர் நகர்ந்து சென்ற பிறகு, "உனக்குத் தெரியாதா? விஜயநகரம் மகாராஜ குமார் 'ஸ்வராஜ்யா' பத்திரிகைக்கு ஆயிரம் ரூபாய் நன்கொடை வழங்கியிருக்கிறார். பிரகாசம்காருவைச் சந்தித்து விஷயத்தைச் சொல்லி விடப் போகிறார்!" என்று கடுக்காய் கொடுத்தார் இன்னொரு பத்திரிகை நிருபர்.

ஆபீஸ் போனதும் என்ன சொல்வார்களோ என்று கவலை! "உனக்கு மனத்தில் பட்டதை எழுதியதில் தவறில்லை!" என்று மானேஜர் ஸ்ரீ [illegible] கூறியதும் சிறிது தைரியம் பிறந்தது.



அடுத்த நாள் பந்தயத்தில் ஸி. கே. நாயுடு செஞ்சுரியும், விஜயநகரம் மகாராஜ குமார் ஐம்பது ரன்களும் ஆடி எடுத்ததும் விளையாட்டு விமர்சகர் அந்த அரிய சாதனையைப் பாராட்டி எழுதினார்.

மறு நாளும் மகாராஜ குமார் விஜயநகரம் வந்து, "'ஸ்வராஜ்யா' பத்திரிகை நிருபர் வந்திருக்கிறாரா? இன்றைக்கு ரொம்ப நல்லா எழுதியிருக்கிறார்!" என்றார்.

"ஓ! வந்திருக்கிறேனே! நான் தான்" என்று இன்று தைரியமாக எழுந்து நின்றார் அந்த விளையாட்டு விமர்சகர் தி. ந. நரசிம்மன்.

- குண்டுமணி



# சரியான காலடிவைப்பு

உங்களுடைய பம்பு செட அடிக்கடி பழுதடையாமல் ஒழுங்காக இயங்கி வயலில் தங்கு தடையின்றி தண்ணீர் கிடைக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணினால் அதற்காக சரியான நட வடிக்கை எடுங்கள். அவாவது, உங்கள் பம்பு செட்டின் மோட்டாருக்கு பூர்ண பாதுகாப்பளிக்க 'எல் அண்ட் டி'(L&T) ஸ்டார்ட்டர் பொருத்துங்கள்.

ஓவர்லோட் ஏற்பட்டாலோ, கரெண்டின் வோல்டேஜ் குறைந்தாலோ இந்த ஸ்டார்ட்டர் உடனேயே மோட்டாரை லைனிலிருந்து விடுபடுத்தி அது எரிந்து விடாமல் பாதுகாக்கும். இந்த ஸ்டார்ட்டர் நெடுநாள் உழைக்கிறது. ஏனென்றால் இதன் காண்டாக்டுகள் அசல் வெள்ளியால் தடிப்பாக செய்யப்பட்டவை. லார்ஸன் அண்ட் டூப்ரோவின் பெயரே இதன் உயர்தரத்திற்கும் நம்பகத்தன்மைக்கும் உறுதி. டைரக்ட்-ஆன்-லைன், ஸ்டார்டெல்டா போன்ற எல்லா ரகங்களிலும் 'எல் அண்ட் டி' ஸ்டார்ட்டர்கள் கிடைக்கின்றன. உங்கள் தேவைக்குஏற்றதைத் தேர்ந்தெடுங்கள்







ஸ்விட்ச்கியர் டிவிஷன்

**லார்ஸன் அண்ட் டூப்ரோ லிட்.**
தபால் பெட்டி 278, பம்பாய்-1
தபால் பெட்டி 619, கல்கத்தா-16
தபால் பெட்டி 323, புது டெல்லி-1
தபால் பை 5247, மதராஸ்-2.

LT-9580 (A)

"பிரமாதமான பூகம்பமாம்! உயிர்ச் சேதமும் பொருட் சேதமும் ரொம்ப இருக்கலாம் என்று பயப்படுகிறார்களாம்..... பத்திரிகை பூராவும் இந்த ஒரு விஷயந்தான்! சக்கைப் போடு!"

"சிமாச்சு! இது என்ன அதிசயம்?"

"எது என்ன அதிசயம்?"

"நீ வருகிறதற்கு ஐந்து நிமிஷத்துக்கு முன்னாலேதான் பூகம்பத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன்."

"என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள்?"

"சரசுவிடம், 'குழந்தை தபாலாபீஸுக்குப் போனால் பூகம்பமா வந்துவிடும்?' என்று சொல்லிக் கொண்டிருந்தேன். சொல்லி வாய் மூடுவதற்குள் நீ உள்ளே நுழைந்து 'பீகாரில் பூகம்பம்' என்கிறாய்!"

"பிராமணர் வாக்கு உடனே பலித்து விட்டதாக்கும்! நீர் என்ன சாமானியப்பட்டவரா? பெரிய வைதிக பரம்பரை. அதர்வண வேதத்தைக் கரைத்துக் குடித்தவர். ஓய்! உம்மைக் கூப்பிடுகிறாப் போல இருக்கிறது!"

தூண் மறைவிலே நின்று கொண்டிருந்த சரஸ்வதி அம்மாள் சற்று முன்புறமாக வந்து கிட்டாவய்யரைத் திரும்பிப் பார்க்கும்படி செய்யச் சிரமப்பட்டுக்கொண்டிருந்தாள். இதைக் கவனித்துவிட்டுத்தான் சிமாச்சுவய்யர் அவ்விதம் சொன்னார்.

"சரசு! இப்படி முன்னால் வந்து தைரியமாகச் சொல்லேன்! நம்ப சிமாச்சுவிடம் என்ன சங்கோசம்?"

சரஸ்வதி அம்மாள் ஈனஸ்வரத்தில், "அவர் என்னவோ பூகம்பம், கீகம்பம் என்று சொல்லுகிறாரே? குழந்தை தனியாகப் போயிருக்கிறானே! உடனே நீங்களாவது போய் அழைத்து வாருங்கள்; இல்லாவிட்டால் ஆள் அனுப்புங்கள்" என்றாள்.

(தொடரும்)

# ஐரிஷ் நகைச்சுவை!

"உலகத்திலேயே சிறந்த நகைச்சுவையாளர்கள் ஐரிஷ்காரர்கள்தான்" என்று சர்ச்சிலே வியந்து பாராட்டியுள்ளார் பல முறை. பெர்னார்டு ஷா, ஆஸ்கார் ஒயில்ட், ஜோனத்தன் ஸ்விப்ட், ஜார்ஜ்மூர் ஆகியவர்கள் ஐரிஷ்காரர்கள் என்பதே சர்ச்சில் கூறியதை மெய்ப்பிக்கும்.



□ ஓர் அயர்லாந்து பிரம்மச்சாரி தாம் கல்யாணம் செய்து கொள்ளாததன் காரணத்தைச் சொன்னார்: "இந்தத் தேசத்தில் வாழ்வோருக்குச் சுதந்திரம் கிடைக்க எழுநூறு வருடங்கள் ஆயின. அதை ஒரே நாளில் இழக்க நான் தயாரில்லை."

□ இங்கிலாந்து அரசாங்கத்தின் கையில் பொம்மையாக ஐரிஷ் தேசம் இருந்தபோது மாது ஒருவரிடம் விருந்தாளி, "உங்கள் தேசம் மிகவும் அழகாகவும், ஆரோக்கியமளிப்பதாகவும் இருக்கிறது" என்றார். உடனே அம்மாது, "இதை இங்கிலாந்தில் சொல்லி விடாதீர்கள், உடனே அதற்கும் வரி நீட்டி விடுவார்கள்!" என்றாள்.

□ ஓர் ஐரிஷ் செல்வந்தர் செருப்புத் தைப்பவரிடம் இப்படி இரைந்தார்: "ஒரு செருப்பைச் சிறியதாகவும் ஒரு செருப்பைப் பெரியதாகவும் செய்யச் சொன்னால் ஒன்றைப் பெரியதாகவும் ஒன்றைச் சிறியதாகவும் செய்திருக்கிறாயே, உனக்குக் கூலி கிடையாது போ.......!"



□ திருமணம் செய்துகொள்ளக் காதலனுடன் வந்திருந்த பெண்ணிடம் பாதிரியார் சொன்னார்: "இவன் போதையில் இருக்கிறான். குடிபோதை தெளிந்ததும் இவனை அழைத்துக் கொண்டு வா. உங்களுக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்."

அப்பெண் சொன்னாள்: "அது முடியாத காரியம். போதை தெளிந்தால் இவன் என்னுடன் வர மாட்டான்!"

- கே. வி. முரளி

# கொஞ்சுமிளம் தென்றலோ,
# குலவ வரும் மல்லிகையோ!

Bensons/4313 Ta

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜெய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜெய்—ஜிகினாத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜெய் அழகு சோப் மணங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**

**டாடா** தயாரிப்பு.













உங்கள் சிநேகிதனைப் பார்த்துக் கேளுங்கள்:

'டேய்! ஒரு மாடு நிற்கிறது. அதன் முகம் கிழக்கே பார்க்கிறது. அதன் வால் எந்தப் பக்கம் பார்க்கும்?' என்று கேளுங்கள். அவன் உடனே, 'மேற்கு' என்பான்! அதுதானில்லை! வால் பூமியைப் பார்க்கும்!





















# பொங்கல் தமாஷ்!

சாமா










"இந்தா வீராசாமி கரும்பு! சாப்பிடு!"

"அம்மா! அதோடே ஒரு நாலணா கொடுத்தாத்தான் சாப்பிட முடியும்."

"கரும்பு தின்னக் கூலியா?"

"ஆமாங்க! எனக்குப் பல் இல்லே! ஆலையில் காசு கொடுத்துப் பிழிஞ்சு சாப்பிடணும்!"

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

### அத்தியாயம் எண்பத்திநாலு

## பட்டாபிஷேகப் பரிசு

சீனத்து வர்த்தகர்கள் இருவரும் தலையில் பெரிய பெரிய தலைப்பாகைகளுடனும் முகத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த தாடி மீசைகளுடனும் காட்சி அளித்தார்கள். அரண்மனை மேன்மாடத்தில் அச்சமயம் எரிந்து கொண்டிருந்த மங்கலான தீபத்தின் ஒளியில் அவர்களுடைய முகத் தோற்றங்கள் தெளிவாகப் புலப்பட வில்லை. அவர்கள் என்ன பிராயத்தினர் என்பதைக்கூடத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

குந்தவையின் உள்ளத்தில் தோன்றியிருந்த ஐயங்கள் மேலும் வலுப்பட்டன. அறிவில் மிக்க அம்மாதரசி, "பட்டுப் பட்டாடைகளைப் பார்ப்பதற்கு இந்த வெளிச்சம் போதாது. பெரிய தீவர்த்தி ஏற்றிக் கொண்டு வா!" என்று அவ்வர்த்தகர்களை அழைத்து வந்த சேவகனுக்குக் கட்டளையிட்டாள்.

"நான் சென்று நல்ல விளக்கு அனுப்புகிறேன்!" என்று கூறிவிட்டு மதுராந்தகத் தேவர் அவ்விடத்திலிருந்து அகன்றார். அவருடன் செம்பியன் மாதேவியும் சென்றார்.

அவர்கள் சென்ற பின்னர் குந்தவை சீன வர்த்தகர்களை நோக்கி, "ஐயா! உங்களுக்கு ஏன் இத்தனை அவசரம்? உங்கள் சரக்குகளை நாளைப் பகல் வேளையில் கொண்டு வந்து காண்பிக்கக் கூடாதா? இரவுக்கிரவே வந்தீர்களே?" என்றாள்.

"இளவரசிமார்களே! மன்னிக்க வேண்டும்! நாங்கள் தஞ்சைக்கு வந்து பல தினங்கள் ஆயின. எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் அரண்மனைக்குள் வந்து தங்களைப் பார்க்க முடியவில்லை. நாளை மறுதினம் நாகைப்பட்டினத்திலிருந்து நாவாய் புறப்படுகிறது. அதில்



நாங்களும் புறப்பட வேண்டும். அதனாலேதான் அவசரப்பட்டோம்!'' என்று சீன வர்த்தகர்களில் ஒருவன் சொன்னான்.

அவனுடைய குரல் சிறிது விசித்திரமாக இருந்தாலும் அவன் பேசிய தமிழ் நன்றாக இருந்ததைக் குறித்து அங்கிருந்தவர்கள் அதிசயப்பட்டார்கள்.

''சீன வர்த்தகரே! உமக்குத் தமிழ்மொழி நன்றாக வருகிறதே!'' என்றாள் குந்தவை.

''நான் இச்சோழ நாட்டுக்கு வியாபார நிமித்தமாக வந்து தங்கிச் சிலகாலம் ஆயிற்று. அதனால் தமிழ் பேசச் சிறிது கற்றுக் கொண்டேன். தமிழும் தமிழ் நாடும் எனக்குப் பிடித்திருக்கின்றன'' என்றான் அவ்வர்த்தகன்.

''பின் ஏன், இப்போது உங்கள் நாட்டுக்குப் புறப்பட அவசரப்படுகிறீர்கள்? பட்டாபிஷேகம் வரையிலாவது இருந்து விட்டுப் போகக் கூடாதா? அவ்வளவு அவசரம் என்ன?''

''நாளை மறுநாள் புறப்படும் கப்பல் தவறிவிட்டால், அப்புறம் எப்போது கப்பல் கிளம்புமோ தெரியாது. முன்போலவெல்லாம் இப்போது அடிக்



கடி நாகையிலிருந்து கப்பல்கள் புறப்படுவதில்லை.''

''அது எதனால் ?''

''தங்களுக்கு அதன் காரணம் தெரியாதா, தேவி! கடற் பிரயாணம் முன்போல இப்போது சுலபமாயில்லை; பத்திரமாகவும் இல்லை. கடற் கொள்ளைக்காரர்கள் அதிகமாகி விட்டார்கள். அரபு நாட்டிலிருந்து ஆவேச வெறி கொண்ட வீரர்கள் கப்பல்களில் ஏறி மேலைக் கடல்களிலும் கீழைக் கடல்களிலும் எங்கெங்கும் சஞ்சரித்து வருகிறார்கள். கடற்கரையோரங்களிலும் துறைமுகங்களின் சமீபத்திலுங்கூட அவர்கள் வந்து காத்திருக்கிறார்கள். வர்த்தகக் கப்பல்களைக் கண்டதும் நெருங்கி வந்து பாய்கிறார்கள். மூர்க்காவேசத்துடன் போர் செய்து கப்பல்களில் உள்ளவர்களை யெல்லாம் கொன்று, பொருள்களையும் கொள்ளை கொண்டு போகிறார்கள். இது காரணமாக, இப்போதெல்லாம் வர்த்தகக் கப்பல்கள் தனித்தனியாகக் கிளம்பிச் செல்ல இயலவில்லை. பத்து, இருபது கப்பல்கள் சேர்ந்து புறப்பட வேண்டியிருக்கிறது. அவ்வாறு நாளை மறுநாள் புறப்படும் கப்பல்கள் போய் விட்டால், மறுபடியும் எத்தனை காலம் காத்திருக்க வேண்டுமோ, தெரியாது. தேவிமார்களே! பெரிய மனசு செய்து நாங்கள் கொண்டு வந்திருக்கும் பட்டுப் பட்டாடைகளைப் பாருங்கள்!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே அச்சீன வர்த்தகன் தான் கொண்டு வந்திருந்த மூட்டையைப் பிரிக்கத் தொடங்கினான். அம்மாதிரியே இன்னொருவனும் மூட்டையை அவிழ்த்தான்.

''வர்த்தகர்களே! இப்போது உங்கள் கடையை விரிப்பதில் பயனில்லை. உங்கள் பட்டாடைகளின் தரத்தை இரவு நேரத்தில் பார்த்து நன்கு தெரிந்து கொள்ள முடியாது. உங்களிடம் பட்டாடைகள் வாங்கினால் விலை கொடுப்பதற்கு வேண்டிய பொருளும் இங்கே நாங்கள் கொண்டு வந்திருக்கவில்லை !'' என்றாள் இளையபிராட்டி.

முதலில் பேசிய வர்த்தகன் உடனே மிக்க வியப்படைந்தவனைப் போல் எழுந்து நின்று கரங்களை விரித்துக் குவித்துவிட்டு, ''இளவரசி! தங்களிடம் நாங்கள் விலை கூறிப் பெறுவோமா? நல்ல வார்த்தை சொன்னீர்கள் ! தாங்கள் இந்தப் பட்டாடைகளை ஏற்று அணிந்து கொள்ள முன் வந்தால், அதுவே நாங்கள் முன் ஜன்மங்களில் செய்த தவத்தின் பயன் என்று எண்ணி மகிழமாட்டோமா? விலை கூறி விற்பதற்காக நாங்கள் இந்தச் சரக்குகளைக் கொண்டு வரவில்லை! பட்டாபிஷேகப் பரிசுகளாகக் கொண்டு வந்தோம் !'' என்றான்.

''அப்படியானால், நீங்கள் தவறான இடந் தேடி வந்தீர்கள். இங்கேயுள்ள எங்களில் யாருக்கும் பட்டாபிஷேகம் இல்லை. முடிசூட்டிக் கொள்ளப் போகிறவர் இளவரசர் பொன்னியின் செல்வர். அவரைத் தேடிக் கொண்டு போய் உங்கள் பரிசுகளைக் கொடுங்கள்!''

''இல்லை, தேவி ! சரியான இடந் தேடித்தான் நாங்கள் வந்துள்ளோம். எதற்கேனும் பொன்னியின் செல்வரின் தயவைப் பெறவேண்டுமானால், முதலில் இளைய பிராட்டி குந்தவை தேவியின் தயவைப் பெறுவதுதான் 'அதற்கு உபாயம் என்று எல்லாரும் சொல்லுகிறார்கள்!'' என்றான் சீன வர்த்தகன்.

இதைக் கேட்டு அங்கிருந்த பெண்ணரசிகள் அனைவரும் நகைத்தார்கள்.

''எல்லாரும் என்றால் யார்? அவ்விதம் எங்கே யார் பேசியதை நீங்கள் கேள்விப் பட்டீர்கள் ?''

''ஏன், தாயே ? இன்றைக்கு இந்த நகரில் நடந்த உற்சவத்தின்போது கூடியிருந்த கூட்டத்தில் கூடப் பலர் பேசிக் கொண்டார்கள். 'தமக்கை சொல்லைத் தம்பி தட்டவே மாட்டார்' என்று சொல்லிக் கொண்டார்கள். இதோ இருக்கும் என் தோழனை வேண்டுமானாலும் கேளுங்கள் !''

இத்தனை நேரம் சும்மாயிருந்த அத்தோழன், ''ஆம், இளவரசிமார்களே! அது உண்மைதான்! 'பொன்னியின் செல்வருக்குப் பட்டாபிஷேகம் என்றால், அது குந்தவைப் பிராட்டிக்குப் பட்டாபிஷேகம் செய்தது மாதிரிதான் !' என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். 'இனிமேல் சோழ நாட்டில் பெண்ணரசுதான் நடக்கப் போகிறது! அது நல்லரசாகவும் இருக்கும்' என்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள்'' என்றான்.

மறுபடியும் இளவரசிகள் 'கலகல'வென்று சிரித்தார்கள்.

''ஆகையால், இளவரசிமார்களே ! கருணைகூர்ந்து இந்தப் பட்டாபிஷேகப் பரிசுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றான் ஒரு சீன வர்த்தகன்.

''ஏற்றுக் கொண்டு, பொன்னியின் செல்வரிடம் எங்கள் கோரிக்கையையும் சமர்ப்பிக்க வேண்டும்!'' என்றான் இன்னொரு வர்த்தகன்.

''என்ன கோரிக்கை? பொன்னியின் செல்வரிடம் உங்களுக்கு என்ன காரியம் ஆகவேண்டும்? முதலில் அதைச் சொல்

லுங்கள் !'' என்ருன் குந்தவைப் பிராட்டி.

''தேவி! அவரால் எத்தனையோ காரியங்கள் ஆகவேண்டும். எங்களுக்கு மட்டும் அல்ல; சோழநாடு முதலில் சீன தேசம் வரையில் உள்ள எல்லா நாட்டு வர்த்தகர்களும் பொது மக்களும் அருள்மொழி வர்மரைத் தான் நம்பி யிருக்கிருர்கள். பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் கடல்களெல்லாம் பத்திரமா யிருந்தன. கடற் பிரயாணத்தில் புயற் காற்றினுல் நேரும் ஆபத்தைத் தவிர வேறுவித அபாயம் இல்லாமலிருந்தது. கடலில் கப்பல்களைத் தாக்கிக் கொள்ளையடிப்பது என்பது கனவிலும் கேள்விப்படாத காரியமா யிருந்தது. சோழ நாட்டு நாவாய்கள் வர்த்தகப் பொருள்களை ஏற்றிக் கொண்டு இராஜ பாட்டையில் செல்வது போல் நிர்ப்பயமாகச் சென்று கொண்டிருந்தன. மாநக்கவாரம், மாயிருடிங்கம், மாபப்பாளம், இலாமுரி தேசம், ஸ்ரீ விஜயம், சாவகம், கடாரம், காம்போஜம் ஆகிய கடல் சூழ்ந்த நாட்டுத் துறைமுகங்களுக்குச் சோழ நாட்டுக் கப்பல்கள் சென்று ஆங்காங்கே இறக்குமதி ஏற்றுமதி செய்து கொண்டு எங்கள் சீன நாட்டுக்குச் சென்றன. அவ்விதமே எங்கள் சீன தேசத்திலிருந்து புறப்பட்ட கப்பல்களும் சோழநாட்டுக்குத் தங்கு தடையின்றி வந்து கொண்டிருந்தன. அந்தக் காலம் இப்போது பழங் கனவாகப் போய்விட்டது. தேவி! தங்களிடம் உண்மையைச் சொல்லிவிடுகிறோம். இந்தப் பட்டுப் பட்டாடைகளை நாங்கள் திரும்பக் கொண்டு போனால் பத்திரமாய் எங்கள் நாட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்போம் என்பது நிச்சயமில்லை. வழியில் அராபியக் கடல் கொள்ளைக்காரர்களிடம் இந்தப் பட்டாடைகளைப் பறி கொடுப்பதைக் காட்டிலும் சோழ நாட்டு இளவரசிமார்களுக்குப் பரிசாக அளிப்பது மிகவும் விசேஷமான காரியமல்லவா?....''

இவ்விதம் அந்தச் சீன வர்த்தகன் சொல்லி வந்தபோது குந்தவை தேவியின் கருவண்டுகளையொத்த கண்கள் நன்கு விரிந்து அளவிலா ஆர்வம் ததும்பப் பெற்றவையாயின.

''பொன்னியின் செல்வரால் அந்தக் காரியம் நடைபெறும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் இருந்தது போல், கடற் பிரயாணம் அபாயமற்றதாகும் என்று எண்ணுகிறீர்களா ? மாநக்கவாரம், மாயிருடிங்கம், கடாரம், ஸ்ரீவிஜயம் முதலிய நாடுகளில் பொன்னியின் செல்வரின் புகழ் பரவும் என்று நம்புகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''நாங்கள் நம்புவது மட்டும் என்ன? இந்தச் சோழ நாட்டு வர்த்தப் பெரு மக்கள் எல்லாரும் நம்புகிருர்கள். ஏன்? சற்று முன் நாங்கள் ஒரு சோதிடரிடம் போயிருந்தோம். அவருங்கூடச் சொன்னுர்.''

'' என்ன சொன்னுர் ?''

'' பொன்னியின் செல்வர் பெரிய பெரிய கப்பல் படைகளைத் திரட்டிக் கொண்டு கடல்களைக் கடந்து செல்வார்; கொள்ளைக்காரர்களின் கூட்டங்களை ஒழித்துவிடுவார்; கடற் பிரயாணத்தை முன்போல் நிர்ப் பயமானதாகச் செய்து விடுவார்; சோழ நாடு பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் அடைந்திருந்த பெருமையை மீண்டும் அடையும் என்றெல்லாம் ஜோசியர் சொன்னுர். ஆனுல் இதற்கெல்லாம் சோழ நாட்டு இளவரசிகள் குறுக்கே நின்று தடை ஏற்படாமல் இருக்க வேண்டும் என்றும் கூறினுர்!''

''இவ்வளவுதான் சொன்னுரா? இளவரசிகளைப் பற்றி இன்னும் ஏதாவது அவதூறு கூறினுரா ?''

'' ஆகா ! அவதூறு ? அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, தேவி ! பழையாறை இளையபிராட்டியைப் பற்றியும் கொடும்பாளூர்க் கோமகளைப் பற்றியும் அவதூறு சொல்கிறவர்கள் இந்தச் சோழ நாட்டில் யாருமே இருக்க முடியாது. அப்படியிருக்க, இளவரசிகளின் தயவை எதிர்பார்த்திருக்கும் ஜோசியர் மட்டும் துணிந்து சொல்வாரா ?''

''வேறு என்னதான் அந்தச் சோதிடர் எங்களைப் பற்றிச் சொன்னுர் ?''

''இளவரசிமார்கள் இருவரும் சற்று முன் அவரிடம் வந்துவிட்டுப் போனதாகக் கூறினுர். இரண்டு பேருக்கும் விரைவில் திருமணம் நடக்கும் என்று சொன்னுர். தேவிமார்களே! பட்டாபிஷேகத்துக்குப் பரிசாக ஏற்றுக் கொள்ளாவிட்டால் திருமணப் பரிசிலாகவாவது இந்தப் பட்டு ஆடைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்ருன் முதலில் பேசிய சீன வர்த்தகன்.

இதைக் கேட்ட வானதி, ''அக்கா ! இந்தச் சீன வர்த்தகர்கள் வெறும் வம்புக்காரர்கள். இவர்களைப் போகச் சொல்லுங்கள்!'' என்ருள்.

''கொஞ்சம் பொறு, வானதி! இவர்களுடைய வம்பு இன்னும் எவ்வளவு தூரம் போகிறது, பார்க்கலாம் !'' என்று குந்தவை சொல்லிவிட்டு, '' வர்த்தகர்களே ! சோதிடர் வீட்டு வாசலில் யானையின் மீது வந்து நின்றவர்கள் நீங்கள்தானே ?'' என்ருள்.

''ஆம், தேவி! சோதிடர் வீட்டைத் தேடிப் போனதற்குப் பயன் உடனே கிடைத்து விட்டது. நீங்கள் வந்திருப்பதைத் தெரிந்து கொண்டோம். உங்களைச் சந்திக்கும் பாக்கியம் இன்று எங்களுக்குக் கிடைக்கும் என்று சோதிடர் கூறியதும் பலித்துவிட்டது. அம்மாதிரி கொடும்பாளூர் இளவரசியைக் குறித்து அவர் கூறியதும் பலித்துவிட்டால் எங்கள் கவலையெல்லாம் தீர்ந்துவிடும்!''

வானதி மீண்டும், ''அக்கா! இவர்களைப் போகச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''வர்த்தகர்களே! உற்சவக் கூட்டத்தினிடையே யானை ஏறி வந்தவர்களும் நீங்கள்தானே? அடிக்கடி நீங்கள் யானை மேலிருந்து கீழிறங்கி ஜனக் கூட்டத்தில் கலந்து கொண்டீர்கள் அல்லவா?'' என்று குந்தவை கேட்டாள்.

''ஆம், தேவி! வரப் போகும் பட்டாபிஷேகத்தைப் பற்றி ஜனங்கள் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள் என்று தெரிந்துகொள்ள விரும்பி அவ்வாறு கூட்டத்தில் புகுந்து சுற்றி வந்தோம்.''

''ஜனங்கள் என்ன பேசிக் கொண்டார்கள்? பொன்னியின் செல்வர் முடிசூட்டிக் கொள்ளப் போவதைப் பற்றித் திருப்தியாகத்தானே பேசினார்கள்?''

''இல்லை; முடிசூட்டு விழாவைப் பற்றியே யாரும் பேசவில்லை.''

''பின்னர், ஜனங்கள் எதைப் பற்றிப் பேசினார்கள்?''

''மதுராந்தகத்தேவரின் பக்தி மகிமையைப் பற்றியே பேசிக் கொண்டார்கள்.''

''அப்படி நல்ல விஷயமாகச் சொல்லுங்கள். பூங்குழலி! கேட்டாயா?'' என்று குந்தவை பூங்குழலியைப் பார்த்துச் சொல்லி விட்டு, ''மதுராந்தகத் தேவரைப் பற்றி இன்னும் என்னவெல்லாம் சொன்னார்கள்?'' என்றாள்.

''மதுராந்தகருடைய தியாகப் பண்பைப் பற்றிப் பேசினார்கள். சோழ ராஜ்யத்தில் அவருக்குப் பாத்தியதை கொண்டாடும் உரிமை இருந்தும், 'இராஜ்யம் வேண்டாம்' என்று சொல்லிவிட்டதை மிகவும் பாராட்டினார்கள்.''

''அப்படியா? அதற்குக் காரணம் என்ன சொல்லிக் கொண்டார்கள்?''

''மதுராந்தகத் தேவர் யாரோ ஒரு படகுக்காரப் பெண் மீது காதல் கொண்டு அவளையே பட்டமகிஷியாக்கிக் கொள்ளுவேன் என்று பிடிவாதம் பிடித்தாராம். அதனால் ஏற்கனவே அவர் கட்சியிலிருந்த சிற்றரசர்களின் மனம் மாறிவிட்டதாம். 'அப்படியானால் மதுராந்தகருக்குப் பட்டம் கிடையாது; பொன்னியின் செல்வருக்கே பட்டம்' என்று சிற்றரசர்கள் சொல்லி விட்டார்களாம். இம்மாதிரி ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். இளவரசிமார்களே! அந்தப் பாக்கியசாலியான ஓடக்காரப் பெண் இங்கே இருந்தால், அவருக்கும் பட்டாடைப் பரிசு கொடுக்க விரும்புகிறோம்.''

பூங்குழலி இப்போது, ''தேவி! கொடும்பாளூர் இளவரசி கூறியது சரிதான். இந்த வர்த்தகர்கள் வெறும் வம்புக்காரரர்கள். இவர்களை உடனே போகச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''கொஞ்சம் பொறு, பூங்குழலி! உனக்கு என்ன கோபம்? இவர்கள் உன்னைப் பற்றி ஒன்றும் தவறாகப் பேசவில்லையே? புகழ்ச்சியாகத்தானே பேசுகிறார்கள்?'' என்றாள், குந்தவை.

''இவர்கள் என்னைப் பற்றிப் புகழ்ச்சியாகவும் பேச வேண்டாம்; இகழ்ச்சியாகவும் பேச வேண்டாம்! எனக்குப் பரிசு கொடுக்கவும் வேண்டாம்!'' என்று பூங்குழலி கிளம்பினாள்.

''அம்மணி! தாங்கள்தானா அந்தப் பாக்கியவதி? ஆகா! ஜனங்கள் பேசிக் கொண்டது ரொம்ப சரி!'' என்றான் சின வர்த்தகர்களில் ஒருவன்.

''இன்னும் வேறு என்ன பேசிக் கொண்டார்கள்?'' என்று பூங்குழலி புன்னகையுடன் கேட்டாள்.

''மதுராந்தகத் தேவர் தங்களை முன்விட்டு இந்தச் சோழ ராஜ்யத்தையே தியாகம் செய்துவிட்டார் என்று கூட்டத்தில் ஒருவர் சொன்னபோது, அதற்கு மறுமொழியாக இன்னொருவர், 'பூங்குழலி தேவிக்காக ஒரு இராஜ்யத்தைத்தானா தியாகம் செய்யலாம்? என்னிடம் ஒன்பது இராஜ்யங்கள் இருந்திருந்தால் அவ்வளவு இராஜ்யங்களையும் தியாகம் செய்திருப்பேனே?' என்று சொன்னார். அவர் கூறியதை நானும் ஆமோதிக்கிறேன்!'' என்றான் அச்சின வர்த்தகன்.

பூங்குழலி கள்ளக் கோபத்துடன், ''அக்கா! இந்த அதிகப்பிரசங்கி வர்த்தகரை உடனே தண்டிப்பதற்குத் தாங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும்: இல்லாவிட்டால் நானே பொன்னியின் செல்வரிடம் சொல்லி இவருக்குத் தண்டனை வாங்கிக் கொடுப்பேன்!'' என்றாள்.

இதைக் கேட்டுக்கொண்டு அப்போது மேன் மாடத்துக்கு வந்தார் மதுராந்தகத் தேவர். மாலை நேரத்துப் பூஜை

உங்கள் குழந்தைக்கு
ஜலதோஷம் வரும்போது
எரிச்சலுடன் சிடுசிடுத்து அழுகிறான்
மூச்சுவிட முடிவதில்லை,
தூங்க முடிவதில்லை.

அப்போது விக்ஸ் வேபோரப்
தாலாட்டுவதுபோல
வேலைசெய்கிறது

# விக்ஸ் வேபோரப் மூக்கு அடைப்பை உடனேபோக்குகிறது. தாராளமாக மூச்சுவிட உதவுகிறது. குழந்தை சுகமடைந்து நிம்மதியாகத் தூங்குகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு, அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை மார்பு, முதுகு இங்கெல்லாம் நேரடி யாகத்தடவலாம். ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து குழந்தை உடனே நிவாரணம்பெறுகிறது. தாராளமாக மூச்சு விடுகிறது. சுகம் அடைகிறது.

விக்ஸ் வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1. 

உடம்பின் மேலே

2. 

உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல் வலியைப் போக்குகிறது.

2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச்சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

**முக்கியமான குறிப்புகள்**

விரைவில் குணம்பெற விக்ஸ் வேபோரப்பை கனிசமாகத் தடவவும்—ஒரு ஸ்டாண்டர்ட் சைஸ் (19 கிராம்) ஜாடி குழந்தைக்கு ஏழு எட்டு முறையும், வயதுவந்தவருக்கு மூன்று நான்கு முறையும் தடவப் போதுமானது.



விரைவாக குணம்பெற, மூக்கு தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள். ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்துவரவும்.




12 கிராம் பெரிய டின்




## ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ் வேபோரப்

ரிச்சர்ட்ஸன் ஹிந்துஸ்தான் லிமிடெட்டின் தயாரிப்பு.

செய்து விட்டுக் கையில் மலர்ப் பிர ஸாதம் எடுத்துக் கொண்டு வந்தவர், பூங்குழலியின் வார்த்தைகளைக் கேட்டு, ''இந்த வர்த்தகர் கூறியதில் தவறு ஒன்றுமில்லையே? எதற்காக அவரைத் தண்டிக்க வேண்டும்? அவர் கூறியதை நானும் ஆமோதிக்கிறேன், பூங்குழலி!'' என்றார்.

இவ்விதம் சொல்லிக் கொண்டு வந்த வரை அந்தச் சீன வர்த்தகன் திரும்பிப் பார்த்தபோது, பூங்குழலி, ''உண்மை யான வர்த்தகர் சொன்னால் சரிதான்; வேஷதாரி வர்த்தகரை எப்படி ஆமோ திக்க முடியும்?'' என்று சொல்லிக் கொண்டே, அந்த வர்த்தகர் தலையில் அணிந்திருந்த சீனத்துத் தலைப்பாகை யைப் பிடித்து இழுத்தாள்.

தலைப்பாகை கீழே விழுந்தது; தலைப் பாகையுடன் அவனுடைய முகத்தி லிருந்த தாடி மீசையெல்லாம் கீழே விழுந்தன !

சாக்ஷாத் வந்தியத் தேவனுடைய திரு முகம் காட்சி அளித்தது.

''ஐயா! காப்பாற்றுங்கள்!'' என்று அலறிக் கொண்டே வந்தியத் தேவன் மற்றொரு சீன வர்த்தகனின் கழுத்தைக் கட்டிக் கொள்ள முயன்ற போது, அவ னுடைய தலைப்பாகையும் தாடி மீசையும் கழன்று விழுந்தன.

பொன்னியின் செல்வர் புன்னகை பொலிந்த முகத்துடன் தோற்ற மளித்தார்.

மூன்று பெண்மணிகளும் குலுங்கக் குலுங்க நீண்ட நேரம் சிரித்தார்கள்.

செம்பியன் மாதேவி மேன்மாடத் துக்கு வந்த பிறகு அவரிடம் ஒரு தடவை சொல்லி விட்டு மறுபடியும் சிரித்தார்கள்.

பூங்குழலி, ''அம்மா! இவர்களைக் கோயிலின் அருகே பார்த்த போது ஒரு மாதிரி எனக்குச் சந்தேகம் தோன்றி விட்டது. அதனாலேதான் தைரியமாக இவர்களை அரண்மனைக்கு வரச் சொன் னேன் !'' என்றாள்.

மதுராந்தகத் தேவர், '' ஆமாம் ; எனக்கும் என் நண்பனைத் தெரிந்து போய் விட்டது. ஆகையினாலேதான் இவர்களை இங்கே விட்டு விட்டு நான் பூஜை செய்யச் சென்றேன்!'' என்றார்.

''வானதி! நீயும் நானும்தான் புருஷர் களின் கள்ள வேடத்தைக் கண்டுபிடிக்க முடியாத அசடுகள் போலிருக்கிறது!'' என்றாள் குந்தவை.

''இவர்கள் எதற்காக இந்த மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து நம்மை ஏமாற்றப் பார்த்தார்கள் ? அதைக் கேளுங்கள், அக்கா !'' என் றாள் கொடும்பாளூர்க் கோமகள்.

''கேட்பானேன், வானதி! என் சகோ தரன் இப்படியெல்லாம் கள்ள வேஷம் போடத் தெரிந்தவன் அல்ல. சகவாச தோஷத்தினால்தான் இவ்வாறெல்லாம் வேடம் போடவும் பொய் புனைந் துரைக்கவும் கற்றுக் கொண்டிருக் கிறான்!'' என்றாள் குந்தவைப் பிராட்டி.

''அக்கா! இந்தக் காரியத்துக்கு வந்தியத்தேவர் மீது பழி சுமத்த வேண்டாம். சீன வர்த்தகர்கள் மாதிரி வேஷம் தரிக்கும் அபூர்வ யோசனை

---

# பாரதி மணிமண்டபத்துக்கு 'ஆளுக்கு ஒரு ரூபாய்'



மகாகவி பாரதியாருக்கு ஒன்பது நாட்கள் பெரு விழா தேசப் பாதுகாப்பு விழாவாகப் பாரதி இளைஞர் சங்கத்தார் கொண்டாடினர்.

விழாவின் சிறப்பு முதுபெரும் அறிஞர் வெ.சாமி நாத சர்மா அவர்களையும் கவிஞர் ஸ்ரீமதி நா.கி. வாலம் அவர்களையும் பாராட்டிக் கௌரவித்தது.

சென்னையில் பாரதி மணி மண்டபம் கட்ட 'ஆளுக்கு ஒரு ரூபாய்' என்ற திட்டத்தைச் சங்கத் தலைவர் திரு கே. ராமமூர்த்தி அறிவித்து, இயக்கம் செயல்பட நூறு இளைஞர்களைக் கொண்ட குழு திரு வி. எல். மணி அமைப்பாளராக இருக்க அமையும் என்றார்.

என் மனத்திலேதான் தோன்றியது!'' என்றார் அருள்மொழி.

''இம்மாதிரி யோசனை உன் மனத்தில் தோன்றியதற்குக் காரணந்தான் சகவாச தோஷம் என்று சொல்லுகிறேன். போகட்டும்! இந்த மாதிரி பொய் வேஷம் இனிமேல் நீ போட வேண்டாம்!''

''அக்கா! திருவள்ளுவர் வாய்மையின் பெருமையைப் பற்றி எவ்வளவோ சொல்லியிருக்கிறார். ஆனால் அவர்கூட,

'பொய்ம்மையும் வாய்மை இடத்த; புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்!'

என்று சொல்லியிருக்கிறார் அல்லவா?''

''திருவள்ளுவர் அந்தக் குறளைப் பாடியபோது இப்படி நீ அதை உபயோகப்படுத்தப் போகிறாய் என்று கனவிலும் கருதியிருக்க மாட்டார்.''

''திருவள்ளுவரை விட்டுவிடலாம். இராமர் வனத்துக்குப் புறப்பட்டபோது தம்மைத் தொடர்ந்து வந்த அயோத்தி மக்களைத் திரும்பி அயோத்திக்குப் போகும்படி செய்வதற்குக் கொஞ்சம் பொய்ம்மையைக் கையாளவில்லையா? ஜனங்கள் தூங்கும்போது எழுந்து ரதத்தை அயோத்தியை நோக்கிச் சிறிது தூரம் செலுத்தி விட்டுப் பிறகு கங்கைக் கரையை நோக்கிச் செலுத்தும்படி சுமந்திரரிடம் சொல்லவில்லையா?''

''தம்பி! நீ எல்லாக் காரியங்களிலும் இராமரைப் பின்பற்றுவதாயிருந்தால் எனக்கு மிக்க மகிழ்ச்சி தான்! போகட்டும்! நீங்கள் இந்தப் பொய் வேஷம் பூண்டதால் 'புரை தீர்ந்த நன்மை' என்ன உண்டாயிற்று? அதைச் சொல்வாயா?'' என்று கேட்டாள் குந்தவை.

''நாங்கள் இன்னார் என்பதைக் காட்டிக் கொள்ளாமல் குடிமக்களின் கூட்டத்தில் புகுந்து அங்குமிங்கும் அலைந்து அவர்களுடைய உண்மையான மனக் கருத்துக்களை அறிய முடிந்தது!''

குந்தவை சிறிது ஆர்வத்துடன், ''மக்கள் மனக் கருத்தைப் பற்றி என்ன தெரிந்து கொண்டாய், தம்பி!'' என்று கேட்டாள்.

''எத்தனையோ தெரிந்து கொண்டேன், அக்கா! முக்கியமாக, இந்தச் சோழ சாம்ராஜ்யம் பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் இருந்ததுபோல் மகோந்நதமடைய வேண்டும் என்பதை மக்கள் எல்லாரும் விரும்புகிறார்கள் என்று அறிந்தேன். சற்று முன்னால் நானும் என் நண்பரும் சீன வர்த்தகர்கள் போல் வேஷம் போட்டுக் கொண்டு இருந்தோமல்லவா? வேஷம் பொய்யாக இருந்தாலும் நாங்கள் கூறியதெல்லாம் மெய்தான்! உங்கள் இருவரையும் சாலையில் சந்தித்துவிட்டுத் தஞ்சைக்கு நாங்கள் சென்றோம். தஞ்சையில் கோட்டை வாசலுக்கு அருகில் உண்மையாகவே இரண்டு சீன வர்த்தகர்களைக் கண்டோம். அவர்களிடம் விலை கொடுத்து இந்தப் பட்டு மூட்டைகளை வாங்கிக் கொண்டோம். அவர்களைப் போல் வேஷம் போட்டுக் கொண்டு திரும்பி வந்தோம். அராபியக் கடல் கொள்ளைக்காரர்களைப் பற்றி நான் சற்றுமுன் சொன்னதெல்லாம் அந்த வர்த்தகர்கள் எங்களிடம் கூறியது தான். அராபியக் கடல் கொள்ளைக்காரர்களின் மூர்க்கத்தனத்தை நானும் என் நண்பரும் நேரிலேயே அநுபவித்திருக்கிறோம். தேவி! எது எப்படியானாலும், பட்டாபிஷேக வைபவம் முடிந்ததும் நானும் என் நண்பரும் ஈழநாட்டுக்குப் புறப்படுவது நிச்சயம். அங்கே எங்கள் காரியம் முடிந்ததும், கடல்களுக்கு அப்பால் உள்ள இன்னும் பல நாடுகளுக்கும் செல்ல உத்தேசித்திருக்கிறோம். உயிருடன் திரும்பி வருவோமா, அல்லது போகுமிடங்களில் போர்க்களத்தில் உயிரைவிட்டு வீர சொர்க்கம் எய்துவோமோ, தெரியாது. ஆகையால் நாங்கள் புறப்படும் வரையில் நீங்கள் எல்லாரும் எங்களுடனேயே இருக்க வேண்டும் என்றும், எங்களுக்கு ஆசி கூறி விடை கொடுத்து அனுப்ப வேண்டும் என்றும் கேட்டுக் கொள்வதற்காகவே அவசரமாகத் தங்களைப் பின்தொடர்ந்து வந்தோம்!''

இவ்வாறு பொன்னியின் செல்வர் கூறி வந்த போது, குந்தவை தேவியின் கண்களில் நீர் ததும்பியது.

பூங்குழலி தழுதழுத்த குரலில், ''யுத்தம் என்று எதற்காக ஏற்படுத்தியிருக்கிறார்களோ, தெரியவில்லை. மனிதர்கள் ஒருவரையொருவர் நேசித்துக் கொண்டு ஆனந்தமாயிருக்கக் கூடாதா?'' என்றாள்.

''மகளே! அப்படியல்ல! உலகம் உள்ள வரையில் யுத்தம் இல்லாமல் தீராது. பரமசிவனும் பரமேசுவரியும் யுத்தம் செய்ய வேண்டியிருந்ததே! உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகப் பிறந்தவர்கள் சிலர் உண்டு. அவர்கள் யுத்தம் செய்யத்தான் வேண்டும்!''

இவ்விதம் சிவபக்த சிரோமணியும் பரம சாதுவுமான செம்பியன்மாதேவி கூறியதைக் கேட்டு அனைவரும் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்தார்கள்.

(தொடரும்)



# வைஷ்ணவ ஜனதோ

முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் வாழ்க்கை வரலாற்றைப் பக்தி ரஸம் சொட்டச் சொட்டத் தீட்டி வாசகர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டவர் ஸ்ரீ ரா. கணபதி. அந்த அருட்புனலில் நீராடி யாவரும் தூய அறிவு பெற்ற இன்பத்தை நுகர முடிந்தது அன்று.

இப்பொழுது, அவர்களுடைய 'வைஷ்ணவ ஜனதோ' என்ற புத்தகத்தைப் படிக்கும்படியான வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது.

'வைஷ்ணவ ஜனதோ' என்ற ஒரு பாட்டை வைத்துக் கொண்டு, அதற்கு விளக்கமாகப் பல மகான்களின் படங்களை வரைந்தார் ஓவியர் திரு கனு தேசாய். அவர் தீட்டிய மகாபுருஷர்கள், ஸ்திரீகள் எல்லாரும் உண்மை வைஷ்ணவன் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்கள். அந்த ஓவியங்களின் அடிப்படையில் இந்த மகா புருஷர்களின் சரிதங்களைச் சுருக்கமாக எழுதி ஒரு நூலை உருவாக்கிவிட்டார் திரு ரா. கணபதி. பாடலின் ஒவ்வொரு வரிக்கும் ஒரு விளக்கச் சரித்திரம் பிறந்திருக்கிறது. இது ஒரு புது முயற்சி.

உண்மை வைஷ்ணவன் என்பவன் உள்ளத் தூய்மை உடைய ஒருவனே என்பதை மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார் ஆசிரியர்.

புத்தரை விஷ்ணுவின் அவதாரமாகச் சொல்வதுண்டு. அதற்கு ஆதாரங்கள் காட்டி, சித்தார்த்தர் அவதார புருஷர் மட்டுமல்ல, ஒரு வைஷ்ணவன் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாகவும் இருக்கிறார் என்பதை வெகு அழகாகக் காட்டுகிறது சொற்சித்திரம்.

பிறரை நிந்திக்காதவன்தான் உண்மை வைஷ்ணவன் என்னும் வரியைப்படி பார்த்தால் சந்த் துகாராம் பளிச்சிடுகிறார். துகாராமின் உள்ளப் பாங்கை விவரிக்கையில் "ஆன்மப் பயிர் முற்றி மணி மணியாகத் தானியத்தைச் சொரிந்து கொண்டிருந்தது. இந்திரியப் பட்சிகள் அதை நெருங்கவொட்டாமல் கவண் கற்களாகப் பறந்தன கண்ணன் நாமங்கள்" என்று எழுதுகிறார் நூலாசிரியர்.

துளஸிதாசரின் வரலாற்றை எழுதும் போது அதில் தம்மையே மறக்கிறார் அவர்.

சர்வ சங்க பரித் தியாகம் என்பதற்கு எடுத்துக் காட்டாக ஸ்ரீ ராமாயணத்தில் ஸ்ரீ லக்ஷ்மணஸ்வாமியை ஆய்ந்து எடுத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது.

'தந தக ஜநநீ' என்பதற்கு, ஓவியர் கனு தேசாய் தீட்டியிருப்பதை ஒட்டி, சீதா தேவியை ரா. கணபதி அவர்கள் விளக்கியிருப்பது மிகவும் நன்றாக உள்ளது.

குசேலர் கிருஷ்ணனைக் காணும் கட்டம் நெஞ்சைத் தொடுகிறது.

கபீர்தாசரின் தூய உள்ளத்தைப் பற்றிப் படிக்கும்போது உள்ளம் உருகுகிறது. 'பர ஸ்த்ரீ ஜேநே மாத ரே' என்ற வாக்குக்கு எடுத்துக்காட்டாகக் கபீர்தாசரின் வாழ்க்கை அமைந்திருப்பதைக் காண மெய்சிலிர்க்கிறது.

அடியார்களை ஆதரிப்பதற்காகத் தன்னையே அர்ப்பணித்த ஜீஜா பாயின் தியாகத்தை நினைக்கும்போது மனம் வெதும்புகிறது. தன் கற்பை இழக்க மனம் துணியும் அளவுக்கு அவள் தன் மனத்தையும் தன்னுடையதாகப் பாவிக்காமல் தன்னைத் தன் கணவன் திருப்திக்காகத் தியாகம் செய்தவள். இந்த முறையில் ஜீஜாபாய் பாகவத சேவைக்காகத் தன்னை அர்ப்பணித்தவள். அந்தத் தியாகத்தின் உச்சத்தை நினைத்துப் பார்த்துச் சிந்திக்க வைக்கிறது இந்நூல்.

துருவ, ஹரிச்சந்திரக் கதைகள் யாவும் எந்தெந்தக் கோணத்திலிருந்து பார்க்கப்பட வேண்டுமோ, அந்தந்தக் கோணத்திலிருந்து தீட்டப்பட்டிருக்கின்றன.

மீராபாயின் முழு உருவமும் தெரியும்படி அமைந்திருக்கிறது சரித்திரம். ஜனகர், சபரி போன்ற, என்றும் நம் மனத்தில் தவச் சிரேஷ்டர்களாகப் போற்றப்படும், உத்தமர்கள், மீண்டும் நம் முன் தோன்றி, பக்தி ஊற்றைப் பெருக்குகின்றனர்.

தியாகராஜரின் கிருதிகளை வைத்துக் கொண்டே ஆத்ம தரிசனத்தை விளக்குவது அருமையாக இருக்கிறது. சொற்களின் பொருளால் மட்டுமல்ல, ஒலியினாலும் ஆண்டவன் ரூபத்தைக் காணலாம் என்பது பிரம்ம ஞானிகள் ஆராய்ந்து கண்ட உண்மை. இதைக் "கண்ணில் தெரிகின்ற காலம்" என்ற அத்தியாயத்தில் நிரூபிக்கிறார் நூலாசிரியர்.

இறுதியாக நரஸிமேதாவின் வாழ்க்கையையும் சித்திரித்து அவருக்கு அநுபூதி கிடைத்த பெருமையை விளக்குகிறது நூல்.

" 'வைஷ்ணவ ஜனதோ' பாடலை நரஸிமேதா தம்மையே இழைத்து இழைத்து உருவாக்கினார். நரஸிமேதாவின் ஆன்மாவே அப்பாடலாக வெளிப்பட்டது" என்று குறிப்பிடுகிறார் ரா. கணபதி அவர்கள்.

இந்நூலைப் பற்றிக் கூற வேண்டுமானால், நூலாசிரியரும் தம்மையே இழைத்து இழைத்துத்தான் இந்நூலை இயற்றியுள்ளார் என்று தோன்றுகிறது.

வடமொழிச் சொற்கள் நிறைய வருகின்றன. அதிகமாக இம்மொழிப் பழக்கமில்லாதவர்களுக்கு ஒருகால் கஷ்டமாக இருக்கலாம்.

'ராவணனுல்' என்பதை 'ராவணனுல்' (பக்கம் 89) என்று அச்சிட்டிருப்பதைப் போன்ற சில அச்சுப் பிழைகள் உள்ளன. அவைகளையும் நீக்கிவிட்டால், இது ஓர் அருமையான புத்தகம்.

நம் நாட்டுத் தந்தையான மகாத்மா காந்தி அவர்களின் மனத்தைக் கவர்ந்த 'வைஷ்ணவ ஜனதோ' என்ற இப்பாடலை மக்கள் புரிந்து கொள்ளும்படி கலையோடும், இலக்கிய நயத்தோடும் எழுதியிருப்பது பாராட்டத் தக்கது. குறி குன்றாமல், நீரூற்றைப் போன்ற சரளமான நடையில் எழுதியிருப்பது இதன் தனிப் பெருமை.

நூல் முழுவதும் துளஸி மணக்கிறது.

— அறந்தாங்கி

பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை - 4. விலை ரூ. 4-00.



# ஞானஸ்நானம்

சுட்டாந்தரையில் "ரோட்ரோலர்" உருளுவதைப் போன்ற உறுமலோடு, கண்ணைப் பறித்தது ஒரு மின்வெட்டு. அதே சுருக்கில் 'டும்' மென்று அழுக்கமான கனத்துடன் ஓர் இடி. விளக்குகள் பொட்டென்று அணைந்தன. பிசுபிசுவென்று சோம்பேறித்தனமாகத் தூறிக் கொண்டிருந்த மழை கம்பித் தாரைகளாக வருஷிக்க ஆரம்பித்தது.

பாகீரதி தட்டுத் தடுமாறி நடந்து பூஜை அறையிலிருந்த குத்துவிளக்கிலிருந்து இரண்டு மெழுகுவர்த்திகளை ஏற்றிக்கொண்டுவந்துமுன் ஹாலில் வைத்தாள். பதின்மூன்று வயதுக் 'குழந்தை' பாபு, மெழுகுவர்த்தியின் சிமிட்டலில் கோணல் மாணலாக ஆடும் நிழல்களைத் தவிர்த்து, அப்பாவினருகில் ஒட்டிக் கொண்டு அவர் கையிலிருந்த 'ரேடியம் டயல்' கடிகாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கை கால்கள் ஜில்லிட்டிருந்தன. "பயம்மா இருக்குப்பா!" என்று முனுமுனுத்தான். வரதராஜனுக்குக் காதில் விழவில்லை. அவர் நினைவெல்லாம் வேறு எங்கேயோ இருந்தது. "சனியன் புடிச்சவ! வெத்தலையை வாங்கிண்டு நேர வரவேண்டியதுதானே? எங்கே போய்த் தொலஞ்சா?" என்று ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தார்.

"நீங்கசெஞ்சது கொஞ்சம்கூடச் சரியில்லே. தெறந்த பாதாளச் சாக்கடையைப் பத்தி உங்க பிள்ளைக்கு அத்தனை பாடம் சொன்னேளே? தெருவெல்லாம் சமுத்ரமா இருக்கு. அந்தச் சின்னஞ் சிறுசை அனுப்பிச்சது உங்களுக்கே நியாயமா இருக்கா? உங்க பிள்ளை கப்பல் விடறதுக்குக் கூடக் கீழே இறங்கக் கூடாது; நிமோனியா வந்துடும், காலரா வந்துடும். ஆறு, மத்தவா தேகமெல்லாம் இரும்பாலே அடிக்க வைச்சிருக்கு... இடி இடிக்கதே, காதிலே விழுந்துதா?"

வெளியே கொட்டுகிற மழையையும் மீறிக் கேட்கிறாற்போல் சற்று உரக்கவே பேசினாள் பாகீரதி. "கத்திப் பேசாதேம்மா. பயம்மா இருக்கு" என்றான் பாபு. வரதராஜன் எதையும் இலட்சியம் செய்யாமல் ஜன்னல் பக்கம் பார்வையை ஓட்டி மையிருட்டை ஊடுருவ முடிகிறதா என்று ஆராய்ந்தார். ஜன்னலைத் தாண்டி வாசல் வராந்தா. அதிலிருந்து சுமார் ஐம்பதடி தூரத்தில் காம்பவுண்டு கேட். வடக்கே சம்பாதிக்கும் இரண்டு பிள்ளைகள் அனுப்பும் பணத்தையும், சொந்த சேமிப்பையும், கிராமத்து நிலத்தை விற்ற பணத்தையும் திரட்டி, அசோக்நகரில் மேட்டுப்பாங்கான ஒன்றரை கிரவுண்டில், எண்ணூறத்துச் சொச்சம் சதுர அடி 'கார்ப்பெட் ஏரியா' வைக் கொண்டதும், சுற்றிக் காம்பவுண்டு சுவர்களால் அடைக்கப்பட்டதும், கற்கண்டு போல் இனிக்கும் கிணற்றைக் கொண்டதுமான தெற்குப் பார்த்த வீடு. உலகமே பிரளயத்தில் மூழ்கினாலும்கூடச் சொட்டுத் தண்ணீர் வீட்டு வாசலை எட்ட முடியாதவாறு உயரமான மனை.

வெள்ளை வர்ணம் அடித்திருந்ததால், 'கேட்' கண்களுக்குத் தெரிவது போலிருந்தது. மற்ற இடங்களெல்லாம் கரியை வைத்து மெழுகின மாதிரி இருள் அப்பி யிருந்தது. சற்றுக் கண்களை மூடிக் கொண்டார் வரதராஜன். மூடிய இமைகளுக்குள் சின்னப் பொண்ணு வந்து குதித்தாள். சொட்டச் சொட்ட நனைந்த கந்தல் உடையும், முகத்தை விழுங்கும் அகலமான வண்டு விழிகளும், இரத்தமில்லாது வெளுத்திருந்த உதடுகளும், கொதகொத வென்று ஊறிய கால்களுமாக, இரைக்க, இரைக்க வந்து "இந்தாங்க உங்க சுமாறு வெத்லெ" என்று கூறுவது போலிருந்தது.

தெருவில் 'சளக் சளக்' கென்று ஒலி கேட்டு இமைகளைத் திறந்தார் வரதராஜன். உஸ்ஸென்று சீறிக் கொண்டு ஒரு சைக்கிள் போயிற்று. தடாலென்று விழுந்தது. ''பார்த்துப் போவப்படாதாய்யா? இந்த அம்மாரி இருட்டுலே எதுக்கு இம்மா அவசரம்?''... ''ஆயா! நீயா... நீ எங்கே தண்ணிலே வந்து மாட்டிக்கினே... சாக்கடை மூடி யெல்லாம் தெறந்து கெடக்குது... சுத்திக்கிட்டு இந்தால வா...''

வரதராஜனுக்குப் பகீரென்றது. மழையையும் பாதாளச் சாக்கடையையும் சேர்ந்தாற்போல் நினைத்தாலே அவருக்கு மூச்சு முட்ட ஆரம்பித்து விடும். இன்று காலைப் பேப்பரில் கூடத் திருவல்லிக்கேணியில் மூன்று குழந்தைகளுக்கு ஏற்பட்ட பரிதாபத்தைப் பற்றிக் கொட்டை எழுத்துக்களில் போட்டிருந்தான். வரதராஜனுக்குக் குப்பென்று வியர்ப்பது போல் பிரமை தட்டியது. சின்னப் பொண்ணு பத்திரமாகத் திரும்பி வருவாளா? ஒருவேளை பக்கத்துக் கடை திறக்காமல் இருந்து, ரயில்வே கேட்டைத் தாண்டி அந்தப் பக்கம் போயிருப்பாளோ? அப்படி யிருந்தால்கூடத் திரும்புகிற நேரமாயிற்றே? இல்லை, வருகிற வழியில் தன் குடிசைக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வருகிறாளோ? சிறிசுதானே? விளையாட்டுப் புத்தி. எங்கேயாவது சுற்றிவிட்டு வரும்.

தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டு வெறும் சீவல் இரண்டை வாயில் போட்டு மெல்ல ஆரம்பித்தார். அருவி மாதிரி எச்சில் ஊறிற்று. ஆனால், 'கும்மாணம்' வெற்றிலை சேராத, மூளையைத் தாக்குகிறாற் போன்ற அதன் காரம் இல்லாத வெறும் சீவலின் துவர்ப்பு மட்டும் அவருக்குப் போதவில்லை. வெற்றிலைச் செல்லத்தைத்



பொன்னித்துறைவன்




துமாலி, காய்ந்து, சவுங்கிப் போன துண்டுகளைப் பொறுக்கி, அவைகளுக்கிடையில் ஒரு குந்துமணி அளவு சுண்ணாம்பை வைத்து எல்லாவற்றையுமாகச் சேர்த்து உருட்டி வாயில் அடக்கிக் கொண்டார். சிறிது நேரத்தில் கன்னத்துடன் உள்ள சதையில் துளை போடுகிற மாதிரி சுண்ணாம்புக் காரம் தைத்தது. கூடவே வாடல் வெற்றிலையின் 'அசடு வழியும் மணம் வாயெல்லாம் குப்பென்று பரவி உடலை என்னவோ செய்தது. அவசரம் அவசரமாகக் கொஞ்சம் புகையிலையை அடக்கிக் கொண்டும், வாடல் மணம் தாளாமல் சிலிர்த்துக் கொண்டார் வரதராஜன்.

இதுபோன்ற 'அசட்டுப் பிசட்டு'க் காரியங்களை வரதராஜன் தன் வாழ்நாளில் செய்ததில்லை. முன் யோசனையும் முன்னேற்பாடும் இல்லாத எந்தக் காரியமும் வரதராஜன் செய்ததாக இருக்க முடியாது. தும்பை விட்டு வாலைப் பிடிக்கிற கதை அவரிடம் கிடையவே கிடையாது. 'அது இல்லை', 'இது ஆகிவிட்டது' என்ற பங்கரை கெட்ட அசட்டுப் பல்லவியைப் போடும்படியான ஒரு நிலைமையை அவர் என்றுமே உருவாக்கிக் கொண்டு திண்டாடியதில்லை. ஆனால் இன்று அந்தக் 'கும்மாணம்' வெற்றிலை காலை வாரி விட்டது. அதை நினைத்துப் பாகாய் உருகினார். வெற்றிலை இல்லாமல் நாக்கு பரக்கப் பரக்க அலையும் வேதனை ஒரு புறமும், வாங்கப் போன விருத் தெரியாத பெண் என்ன ஆனாளோ என்ற கவலை இன்னொரு புறமுமாகக் குமைந்தார். விளக்கும் போய் விட்டது. இன்னும் பன்னிரண்டு மணிக்குள் புயலடிக்கப் போவதாக வேறு வானொலியில் அறிவித்திருந்தார்கள். எல்லாமாகச் சேர்ந்து ஆற்றுச் சுழலில் அமிழ்ந்து போவதுபோல் ஆகிவிட்டது வரதராஜனுக்கு.

ஒரு முறை கனைத்துக் கொண்டார் வரதராஜன். உதடுகளை இறுக்கிக் கொண்டு, ஜன்னல் வழியாக வராந்தாவையும் தாண்டி மண் தரையில் விழுகிற மாதிரி புகையிலை எச்சிலைப் பீச்சினார்.

"ஏய், தூங்கிப் போயிட்டியா ?"

" ஹாம் ?"

" தூங்கிட்டியான்னு கேட்டேன்?"

"என்ன பண்ணணும்?"

"இதோ பாரு, உன் பிள்ளையை. என் மடியிலேயே தூங்கி வழியறான்.... அவனுக்கும் படுக்கை போடு."

"மணி என்ன?"

"ஏழு."

"அதுக்குள்ளே என்ன படுக்கை?"

"இந்த இருட்டிலே வேறே என்னதான் செய்யச் சொல்லறே ?"

" அந்தக் குட்டி வந்துதோ ?"

"ஹூஹூம்......"

" என்ன செய்யறதா, உத்தேசம் ?"

" என்ன செய்யலாம் ?"

"மழை விட்டிருக்கோ ?"

"விட்டிருந்தா.....?"

"நான் வாணா ஒரு நடை போய் உங்களுக்குக் கும்மாணம் வெத்தலை வாங்கிண்டு வரேன்."

பாரேதியின் குரலிலிருந்த ஏளனம் வரதராஜனுக்கு நன்றாகப் புரிந்தது.

வாசலில் காம்பவுண்டு கேட் திறக்கும் ஒலி கேட்டது. ஜன்னல் வழியாக வரதராஜன் எட்டிப் பார்த்தார். கறுப்பாக, இருட்டிலிருந்து பிடுங்கி எடுத்ததைப் போல், மீசையோடு ராணுவக்காரன் மாதிரி ஒருவன் ஜன்னலருகில் வந்து, "ஐயா இருக்காருங்களா ?" என்றான்.

"என்ன வேணும் ?"

"இல்லை, ஐயாவைப் பார்க்கணும்....!"

"நான்தான் சொல்லு."

"சின்னப் பொண்ணைக் கமாறு வெத்தலை வாங்கியாறச்சொன்னது நீங்கதானுங்களா?"

வரதராஜனுக்கு ரத்தம் உறைந்தது. பதில் சொல்வதா வேண்டாமா என்று தடுமாறும் போதே நாக்கிலிருந்து, "ஆமாம்" என்ற ஒப்புதல் வாக்குமூலம் குதித்து விட்டது.

"நல்ல வம்புலே மாட்டிக்கினீங்க, போங்க !"

"என்னப்பா சொல்லறே...? நீ யாரு?"

"அங்கே குடிசையிலே ஒரே கூட்டம். போங்க....."

" விஷயம் என்னப்பா?"

" சின்னப் பொண்ணு சாக்கடையிலே வுளுந்துடுச்சுங்க...வெளியிலே இழுத்துப் போட்டிருக்காங்க. மூச்சு பேச்சில்லை... கொஞ்சம் நெனைப்பு வந்தபோது உங்க பேரைச் சொல்லி விஷயத்தையும் சொல்லிச்சு. இப்பவோ அப்பவோன்னு கெடக்குதுங்க.... ஜனங்களெல்லாம் கொதிச்சுக்கிட்டு இருக்காறுவ... அதுதான் உங்களைப் பார்த்துட்டுப் போகலாம்னு......"

பொத்தென்று ஒரு நிமிஷம் உட்கார்ந்தார் வரதராஜன். பிறகு நிதானித்துக் கொண்டு எழுந்து ஸ்விட்சைப் போட்டார். விளக்கு வந்தபாடில்லை. மெழுகுவர்த்தி ஒளியில் ஜன்னலுக்கப்பாலிருந்த அந்தக் கறுப்பு மனிதனின் முகமும் மீசையும் அச்சுறுத்தின.

"அந்தக் காட்டானுங்க வாயைக் கட்டறதுக்கு வழி பண்ணணுமுங்க... இல்லேன்னு ஐயாவுக்கு ஆபத்து....."

"நான் என்ன செய்யணும்?"

" கொஞ்சம் செலவாகும்.... இப்படி வெளியே வாங்க, சொல்றேன்....."

"இப்படியே சொல்லேன்....."

"சும்மா வாங்க. இதெல்லாம் வூட்லே எதுக்குத் தெரியணும் ?"

# இச்சிறுமி வளர்வதற்கு
# நீண்டகாலமாகும்போல்
# தோற்றுகிறது

## ஆனால் காலம் காற்றாய்ப் பறக்கிறது

### இன்றே ஒரு ஸேவிங்ஸ் பாங்க் கணக்குத் தொடங்குங்கள்

அலகாபாத் பாங்கிற்கு வந்து எங்களில் யாரிடமாவது கேளுங்கள் ரூ. 5 மட்டும் செலுத்தி, உடனே ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்கி விடலாம். அவ்வளவு சுலபம். நீங்கள் ஒழுங்காகச் சேமித்து வரும் சிறு தொகை எவ்வளவு சீக்கிரமாகப் பெருகி வருகிறது என்று ஆச்சரியப்படுவீர்கள். இன்னும் சௌகரியங்கள், சேவைகள்......

• ரெக்கரிங் டிபாஸிட்டுகள் • கரண்ட் அக்கௌண்ட் • பிரயாணிகள் செக்குகள் • ஃபிக்ஸட் டிபாஸிட்டுகள் • ஸேஃப் டிபாஸிட் லாக்கர்கள்
• விவசாயத்திற்கான பணவசதி • சிறு தொழில்களுக்கு கடனுதவி
• உத்தியோகஸ்தர்களுக்குக் கடனுதவி



## அலஹாபாத் பாங்க்

ஹெட் ஆபீஸ்: 14, இந்தியா எக்ஸ்சேஞ்ச் பிளேஸ், கல்கத்தா-1

நீங்கள் தாராளமாகப் பழகுவதற்குரியதென்று உணர்த்துகின்ற பாங்க்

# பெண்மையின் மென்மையை உணர ஆண்களைப் போல் 'ஷேவ்' செய்யாதீர்:

ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர் தடவி பெண்மை வழியிலே உரோமத்தை வழித்தெறியுங்கள். அது மென்மை யானது, இன்மணம் கொண்டது. உரோமங்களின் வேர்கள் வரை ஊடுருவிச் செயல் புரிகிறது. வெட்டுக்கள் இல்லை, உரோமத் துகள்கள் இல்லை. வாரக் கணக்கில் வழவழப்பான சருமம்.




## பட்டுப்போன்ற கரங்களுக்கும் கால்களுக்கும்.

## ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர்

ட்ரேட்மார்க்கின் ரெஜிஸ்டர்ட் யூஸர்: ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிட். 95-AF-172-Tam.

மெழுகுவர்த்தியோடு உயிரையும் கையில் பிடித்தவாறே கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார் வரதராஜன். வந்தவன் இவரை அழைத்துக் கொண்டு வராந்தா ஓரத்துக்குச் சென்று ஏதோ கிசுகிசுத்தான். அதற்குள் அரவம் கேட்டுப் பாகீரதி எழுந்து வந்து ஜன்னலருகில் நின்று அவர்கள் ரகசியத்தைப் பகிர்ந்துகொள்ளப் பார்த்தாள். அவள் வந்த கையோடு பாபுவும் எழுந்து வந்து அம்மாவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நின்றான். மழை யோசையில் அவர்கள் பேசுவது ஒன்றுமே பாகீரதியின் செவிகளில் விழவில்லை. கிட்டத்தட்ட அரை மணி நேரம் வந்தவனும் வரதராஜனும் சம்பாஷித்தார்கள். வரதராஜன் அடிக்கடி, ''முடியவே முடியாது'' என்பதுபோல் கையையும் தலையையும் ஆட்டிக் கொண்டிருந்தார். கடைசியில் வந்தவனை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு உள்ளே வந்தார். ''என்னவாம்? என்ன ஆச்சாம்?'' என்று பாகீரதி பாய்ந்து வந்தாள். ''பெட்டியைத் திற'' என்றார் வரதராஜன். அவர் முகம் பேயறைந்தாற்போலிருந்தது. ''எதுக்கு?'' என்று கேட்டாள் பாகீரதி. ''வாயைத்திறக்காமல் சொல்றதைச் செய்!'' என்று பல்லைக் கடித்தார் வரதராஜன். ''எனக்குப் பயம்மா இருக்குப்பா'' என்றான் பாபு. அவன் முதுகில் ஓர் அறை வைத்து அவனைப் படுக்கச் சொன்னார்.

அடுத்த சில நிமிஷங்களில் வரதராஜன் மீண்டும் வராந்தா ஓரத்தில் நின்று கொண்டிருந்தார். மீசைக்காரன் நோட்டுக்களை எண்ணிப் பார்த்துக் கொண்டு, சரியென்பது போல் தலையாட்டிவிட்டுத் திரும்பிச் சென்றான். கூடவே வரதராஜனும் நனைந்து கொண்டே கேட் வரையில் சென்று கேட்டைப் பூட்டிவிட்டு, வாசற் கதவையும் நன்றாக அறைந்து தாளிட்டு, உள்ளே வந்தார்.

தலையைத் துவட்டிக் கொண்டே, பதற்றம் தீராத நிலையில், ''புத்திக் கொள்முதல், புத்திக் கொள்முதல்'' என்று திரும்பத் திரும்பச் சொன்னார். ''இருநூறு ரூபாய்..... தெரியுமா?'' என்று ஒரு முறை கத்தினார். பாகீரதி சிலையாய் நின்றாள்.

**ம**ழையின் சீற்றம் தணிந்து பிசுபிசு வெனத் தூறிக் கொண்டிருந்தது. ஆனால் காற்றின் வேகம் அதிகரித்து, ஙொய் ஙொய் என்று ஓலமிட்டது. நடுநடுவே வானமும் உறுமிற்று.

பெரிய கம்பளிப் போர்வைக்குள் மூவரும் தூங்காமல் படுத்திருந்தனர். பாகீரதி வெகு நேரம் வரை பேசாமலிருந்தாள். பாபு பூனைக் குட்டிபோல் ஒன்றிக் கொண்டிருந்தான். அகல விரித்திருந்த வரதராஜன் கண்களுக்கு ரூபாய் நோட்டுகளும் வெற்றிலைகளும் பறப்பதைப் போல் பிரமை தட்டியது. பாகீரதிக்கு, சின்னப் பொண்ணு வந்து கிணற்றடி மண்ணில் இலுப்பச் சட்டியை வரட்டு வரட்டு என்று தேய்ப்பதைப் போல் தோன்றிற்று.

''தூங்கியாச்சா?''

'' என்ன வேணும்?''

'' சும்மாத்தான்.....''

''சொல்லித் தொலையேன்......''

''எங்கிட்டே ஏன் எரியறேள்?''

''அப்பா, பயம்மா இருக்குப்பா....''

'' நீ நடுப்பற வாடா.''

பாபு நடுவில் வந்து படுத்துக் கொண்டான். சிறிது நேரம் நிசப்தம் நிலவியது.

'' என்ன?''

''மளமளன்னு சொல்லேன்.....''

'' உங்க காதுக்குக் கேட்கறதோ?''

'' நீ என்ன சொல்றே?''

''நன்னா உத்துக் கேளுங்கோ.... ஹூம்.... இப்போ நன்னா கேக்கறதுக்குப் பாருங்கோ.''

''என்னன்னு விவரமாச் சொல்லித் தொலையேன்.......''

''அழற மாதிரி குரல் கேட்கல்லே?''

''உஸ்... சித்த பேசாமல் இரு....''

''ஆமாம்ப்பா.... நெஜமா கேக்கறது...''

''மடையா, கொஞ்ச நேரம் வாயடைச்சுக் கெடேன்......''

''சந்தேகமேயில்லே.... அழுகைதான்..... கேளுங்கோ.....''

''நல்லாப் படிடா. மெடிகல் காலேஜில் சேர்ந்து டாக்டர் பட்டம் வாங்கணும் என்கிறார் என் அப்பா. மாண்புமிகுவாக மாறின பிறகு டாக்டர் பட்டம் வாங்கிக்கறேன்னு சொன்னாலும் கேட்கமாட்டேங்கறார்!''





''இதென்ன தபால் பெட்டிக்குள்ளிருந்து சத்தம்?''

''பயப்படாமல் பெட்டியைத் திறவுங்கள். நான் உள்ளே விட்ட கண்டெயிலும், நோட்டும் எப்படி இருக்குன்னு பார்க்கலாம்!''




"வாயை மூடறேளா, இல்லே ஆளுக் கொண்ணு வைக்கட்டுமா?"

"எதுக்குப் பயப்படறேள்? தப்புச் சத்தம்கூடக் கேட்கிறது பாருங்கோ......"

"தப்புன்னு என்னப்பா ?"

" உங்களோடே மாரடிக்கிறது மஹா கஷ்டம்பா....."

"பயம்மா இருக்குப்பா....."

"கொஞ்சம் விபூதியை எடுத்துக் கொழுந் தைக்கு இடுங்கோளேன்....."

"பாத்ரூம் வரதுப்பா...."

வரதராஜனுக்கு எரிச்சலாக வந்தது. பாரேதிக்கு மனசு கொள்ளாமல் தவித் தது. பாபுவுக்கு, இருட்டில் யாராவது பேசிக் கொண்டேயிருந்தால் தேவலைபோல் இருந்தது.

வெளியே மழை துல்லியமாக நின்று, மடாத் தவளைகளின் கூட்டுக் கானம் தொடங்கிவிட்டது.

மணி பதினொன்று அடித்தது.

பனிச்சென்ற சூரிய உதயத்தோடு காலை வந்தது. வரதராஜன் அப்பொழுதுதான் சற்றுக் கண்ணயர்ந்திருந்தார். பாரேதி அடுக் களையில் பால் பவுடரைக் கொழகொழவென்று கரைத்துக் கொண்டிருந்தாள். காம்பவுண்டு கேட்டிலிருந்து 'அம்மா அம்மா' என்று குரல் கேட்கவே வாசல் வரையில் வந்தவள் மின் சாரம் தாக்கியதைப் போல் அதிர்ந்து நின்றாள். பிறகு பரக்கப் பரக்கப் படுக்கை அறைக்கு ஓடினாள். " சீக்கிரம் எழுந் திருங்கோ.... அவ வந்துட்டா...."

அலறி அடித்துக் கொண்டு எழுந்தார் வரதராஜன். கண்கள் ஜிவ்வென்றிருந்தன. தம்மை நிதானப்படுத்திக் கொள்ளச் சில விநாடிகள் ஆயின.

" வாசல்லே போய்ப் பாருங்கோ... அஞ்சலை வந்திருக்கா....."

"எந்த அஞ்சலை?"

" அதான், சின்னப் பொண்ணோட அம்மா......."

வரதராஜனுக்குத் தேகமெல்லாம் ஆடியது. எப்படியோ சமாளித்துக் கொண்டு ஜன்னல் அருகே போய்ப் பார்த்தார். பூட்டைத் திறக்குமாறு சமிக்ஞை செய்தாள் அஞ்சலை. அரை வேஷ்டியைச் சரி செய்து கொண்டு யந்திரம்போல் நடந்து கேட்டைத் திறந்தார் வரதராஜன். அஞ்சலை அவரை ஏறெடுத்தும் பாராமல் சர்ரென்று வீட்டுக்குள் நுழைந் தாள். அவளுக்கு வழிவிட்டு ஒதுங்கி நின்றாள் பாரேதி. பின்கட்டில் நின்று கொண்டு, "வார்கலை எடுத்துப் போடுங்க" என்றாள். வாய் திறவாமல் அடுக்களையிலிருந்து விளக்கு மாற்றை எடுத்து அவள் கையில் கொடுத்தாள் பாரேதி. "பத்து ஒளிச்சிப் போடுங்க" என்று சொல்லிவிட்டு விர்ரென்று பெருக்க ஆரம்பித்தாள். பாரேதியும் வரதராஜனும் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள். அஞ்சலை யைக் கேட்பதா, எப்படிக் கேட்பது, என்ன கேட்பது என்றெல்லாம் குழம்பித் தவித் தார்கள். பெருக்கிவிட்டு அடுக்களைக்கு வெளியே நின்று கொண்டு, " பத்து போடுங்கம்மா" என்று மீண்டும் கூறினாள். முதலில் எண்ணெய்ப் பிசுக்கேறிய இலுப்பச் சட்டியைத் தூக்கிக் கொண்டு வந்து சத்தம் போடாமல் கீழே வைத்தாள் பாரேதி. குனிந்த நிலையிலேயே கொஞ்சம் நின்றாள். அஞ்சலையும் குனிந்து இலுப்பச் சட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு, "வெத்தலை வந்துதாம்மா?" என்றாள். 'வெத்தலை' என்ற ஒலியைக் கேட்டவுடன் வரதராஜனின் காது சுறுசுறுப்பாயிற்று.

"எம்மா.... உங்களுக்குத்தானே...?"

"இல்லையே......."

"மெய்யாலுமா ?"

பாரேதி தலையை நிமிர்ந்து அஞ்சலையைப் பார்த்தாள். அவளைக் கட்டிக் கொண்டு 'ஓ'வென்று அழவேண்டும் போலிருந்தது. வரதராஜன் கனைத்துக் கொண்டு இடையில் வந்து நின்றார்.

" வெத்தலையா ?" என்றார்.

"ஆமாங்க. கமாறு வெத்தலை."

"யார்கிட்டே அனுப்பிச்சே?"

# புதுமையின் பொலிவுக்கு
# ஹமாம்




நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள்.
ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள்
சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சி
யையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு
கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது.
நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம்
டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-203 TAM

''நான் அனுப்பலீங்க.....''

''பின்னே?''

''உங்களுக்கு வெவரம் தெரியாதுங்களா? நீங்க என் மவகிட்ட எட்டணு கொடுத்து சுமாறு வெத்தலே வாங்கியாறச் சொன்னீங்களா? அந்தப்புள்ளே அதெ தாரெ வாத்திடுச்சு.... அழுதுகிட்டே கடையாண்ட நின்னுகினு இருந்திச்சு... யாரோ புண்ணியவான் இவளெ அழுவாதேன்னு சொல்லி வெவரம் கேட்டிருக்காரு.... இது சொல்லிச்சு. 'நீ வூட்டுக்குப் போ, பாப்பா! நான் வெத்தலெ வாங்கிக் கொடுத்திடறேன்'னு சொல்லி இவள் கையிலே நாலு மிட்டாயும் ஒரு மொத்த வாளப்பளமும் வாங்கிக் கொடுத்து, 'பாப்பா, இருட்டிலே தண்ணிலே அலேயாதே'ன்னு புத்தியும் சொல்லி அனுப்பிச்சிருக்காருங்க... வெத்தலே வரலீங்களா?''

வாசலில் சைக்கிள் மணியோசையும், தொடர்ந்து, ''ரெடியா?'' என்ற குரலும் கேட்டது. வாசல் பக்கம் திரும்பிப் பார்த்தார் வரதராஜன்..... தர்ப்பைக் கட்டுடன் நின்று கொண்டிருந்தார் சாஸ்திரிகள்.

'' இன்னும் ஸ்நானம் பண்ணலேயா ? இன்னிக்கு அமாவாசை ஞாபகம் இருக்கோல்லியோ ?''

வரதராஜனுக்குத் தலை ஒரு முறை 'கிர்' ரென்று சுற்றிவிட்டு நின்றது. விஷயங்களெல்லாம் தெள்ளத் தெளிவாகப் புரிந்தன. உடலை ஒருமுறை சிலிர்த்துக் கொண்டார். அஞ்சலையைப் பார்த்தார். சாஸ்திரிகளைப் பார்த்தார். கொஞ்ச நேரம் மாறி மாறி இருவரையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

'' நான் வாணு அடுத்த தெருவுக்குப் போயிட்டு வந்துடட்டா ?''

''கொஞ்சம் இருங்கோ.''

''நிதானமா ஆகட்டும். நான் போய்ட்டு வந்துடறேன்.......''

''அதுவும் சரிதான்.... இன்னிக்குக் கொஞ்சம் நிதானமாகத்தான் இருக்கும்....ரெண்டு ஸ்நானம் பண்ணணுமில்லியா?''

''இரண்டு ஸ்நானமா ?''

''உங்களுக்குப் புரியாது. நீங்க போய்ட்டு வாங்கோ. சொல்றேன்..... தர்ப்பணம் கொஞ்சம் விஸ்தாரமாவே பண்ணும்படியா இருக்கும்.... நீங்க வரும்போது ஒரு பத்து பைசாவுக்கு வெத்தலே வாங்கிண்டு வந்துடுங்கோ.......''

''செஞ்சாப் போச்சு'' என்று தலையாட்டிவிட்டு சாஸ்திரிகள் சைக்கிளை எடுத்துக் கொண்டு கிளம்பினார். துண்டைக் கட்டிக் கொண்டு ஸ்நான அறைக்குள் புகுந்தார் வரதராஜன். ஒரு நொடியில் கதவை மடா ரென்று திறந்து கொண்டு வெளியே வந்தார். அதே கோலத்தில் வாசலுக்கு ஓடினார். கேட்டு வரையில் சென்றார். சாஸ்திரிகளைக் கைதட்டிக் கூப்பிட்டார். அவர் திரும்பிப் பார்த்த போது —

''வெள்ள வெத்தலே'' என்று கத்தினார்.

---

ஒரு தனி நபரின் சராசரி மாத வருமானம் 3750 ரூபாய். வரி கிடையாது !

வீட்டு வாடகை என்ன தெரியுமா? ரிப்பேர்க் கட்டணங்கள் உட்பட மாதம் முப்பத்தி ஆறு ரூபாய்தான். டெலிபோன் வைத்துக் கொள்ளலாம். இலவசமாகவே கிடைக்கும்.

வைத்திய வசதி இலவசம். கண்களுக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டால், அதுவும் இலவசமே. வெளிநாட்டு ரேடியோகிராம்கள், காமிராக்கள், ஃபிரிஜிடேர்கள் இன்னும் என்னவெல்லாம் நவீன சாதனங்கள் உண்டோ அத்தனை வகைகளையும், எந்தவித இறக்குமதி நிர்ப்பந்தமும் இல்லாமல், தாராளமாக வாங்கி உபயோகிக்கலாம். மாதம் இருமுறை வெளியாகும் பத்திரிகைகூட இலவசமாகவே கிடைக்கும்.

இவ்வளவு வசதிகள் இருந்தென்ன பிரயோசனம்? ஒரு தோட்டவேலைக்கூட நீங்கள் பார்க்க முடியாது. காரணம், யாரும் அந்த நாட்டுக்கு வந்து தங்கக் கூடாது என்ற நோக்கத்தினால் தான்! அந்த நாட்டினர் சர்க்கார் அனுமதி பெற்று உங்களைத் தங்கள் வீட்டு விருந்தாளியாக அழைத்தால் சில நாட்கள் நீங்கள் அங்கே போய்த் தங்கி வரலாம்!

சுமார் மூவாயிரத்து முந்நூறு நபர்களே வசிக்கும் இந்த இடம் 'நெளரு' என்ற பெயருள்ள சிறு தீவு. நியூயார்க் நகரில் உள்ள 'கென்னடி' விமான தளத்தின் விஸ்தீரணம்தான் ! கார்கள் ஓடுவதற்கான ரஸ்தாவின் மொத்த நீளமே பத்தொன்பது கிலோமீட்டர்கள்தான். ஆனால் இரண்டாயிரத்துக்கு அதிகமான கார்கள், மோட்டார் சைக்கிள்கள் இருக்கின்றன. கார்கள் பழுதடைந்தால் அவற்றை இங்கே ரிப்பேர் செய்வதில்லை. புதிதாகவே வேறு வாங்கி விடுகிறார்கள்.

ஃபிஜித் தீவுக்கு வடமேற்கே, ஆஸ்திரேலியா, நியூகினியாவுக்கு அருகில் இருக்கும் இந்தத் தீவு உலகத்திலேயே மிகச் சிறிய ஜனநாயக நாடு. அதன் ஜனாதிபதிக்கு ஆண்டு ஒன்றுக்கு 22,500 ரூபாய் செலவுகளுக்கென்று தருகிறார்கள். சம்பளம், தொண்ணூறாயிரம் ரூபாய் !

இத்தனை செல்வச் செழிப்புக்குக் காரணம், அந்தத் தீவில் உயர்ந்த ரக 'ஃபாஸ்பேட்' உரம் தோண்டி எடுத்து ஏற்றுமதி செய்வதுதான். நெஞ்சில் உரத்தோடு அந்நியர் வந்து புகுந்து குழப்பம் விளைவிக்காமல் தடுத்தும் வருகிறார்கள்.

---

நெடுந் தூரப் பயணத்தில் விமானங்களில் சினிமாப் படங்கள் காட்டுவதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். இப்போது பஸ்ஸிலும் சினிமாக் காட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். அமெரிக்காவில் டெக்ஸாஸ் மாநிலத்தில் ஹூஸ்டன், ஆஸ்டின் ஆகிய இரண்டு நகரங்களுக்கிடையில் பஸ் பிரயாணம் செய்ய மூன்று மணி நேரம் ஆகிறது. அந்த பஸ்ஸில்தான் சினிமா காட்டுகிறார்கள். அந்த அளவுக்கு ஆடாமல் அசையாமல் அந்தப் பஸ் செல்ல வேண்டுமென்றால் பஸ்ஸும் சாலையும் எவ்வளவு தரமானவையாய் இருக்க வேண்டும் !

ஆதாரம்: 'ஸ்கிரீன்'

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

ரெம்கோ
உங்களுக்கு
அளிக்கின்றனர்

# ஜனரஞ்சனி

சக்திமிக்க,
வலுவான, 3-பாண்ட்
வால்வ் ரேடியோ



ரூ. 245/-
மட்டுமே
எடுப்பான தோற்றம்.
அதிக விலையுள்ள பல
செட்டுகளுடன்
ஒப்பிடத்தக்க
தொனியும், இயக்கமும்.
4 வால்வுகள்,
முன்னேற்றமான
சர்க்யூட்ரி.

**ரெம்கோ**



**ரேடியோ &
எலெக்ட்ரிகல்ஸ்
மேன்யு:பேக்சரிங் கோ.லிட்.,**
மைசூர் ரோடு, பெங்களூர்.26.

மைசூர், கோவா, தமிழ்நாடு,
காரைக்கால் மற்றும்
பாண்டிச்சேரிக்கு
வினியோகஸ்தர்கள்:-
**ஹெகடே அண்ட் கோ,**
குப்தா மார்க்கெட், கெம்பகவுடா ரோடு, பெங்களூர்-9
அகர்சந்த் மென்சன், 35, மவுண்ட் ரோடு, சென்னை-2.

SISTA'S-RR 191 TAM

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது

# ஒகாஸா




வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின்
லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும்
கிடைக்கிறது. அல்லது நேராகவும்
பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**
P. O. BOX 396, BOMBAY-1.

# For Faster Boiling



# Racold

## ELECTRIC KETTLE

*DISTRIBUTORS FOR TAMIL NADU KERALA & MYSORE*

**THE ALUMINIUM & GLASSWARE EMPORIUM**

**Head Office.**
289, Netaji Road
Madras-1
Phone: 21776 - 21066

**Branch:**
No. 8, Ist, Cross
Kempegowda Extension
Bangalore - 9 Phone: 26905

# புதிய நாட்டின் இதயகீதம்

(பங்களாதேஷ் மக்களுக்கு விடுதலை உணர்ச்சியை ஊட்டிய ஓர் ஒப்பற்ற கவிதை மகாகவி ரவீந்திரநாத தாகூர் எப்போழுதோ யாத்த "அமர் ஸோனர் பங்களா" என்ற கவிதைதான். அதிலும், அந்தக் கவிதையின் சந்தங்கள் வங்க தேசத்து மக்களின் மனச்சாட்சியையே உறுத்தி அவர்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தி விறுகொண்டு எழச் செய்ததாம். அந்தக் கவிதை என்னதான் சொல்கிறது என்று பார்ப்போமே!)



என் பொன்னுன வங்கமே,
நான் உனக்கே அன்பாயினேன் !
என்றென்றும் உன் ஆகாயவெளியும், காற்றும்
என்உயிர்க்கு உவகையூட்டி மகிழ்விக்கின்றன.
பங்குனி மாதத்தில் பூத்துக் குலுங்கி
மணம் பரப்பும் உன் மாம்பூக்கள் என்னைப்
பித்துக் கொள்ளச் செய்கின்றன !
ஐப்பசி மாதத்து செழித்து வளர்ந்துள்ள பசும்
வயல்கள் உன் முகத்தின்
அழகிய புன்னகையாகப் பளிச்சிடுகின்றன !
ஆகா என்ன அழகான ஒளி! என்ன இதமான நிழல்!
அன்னையே, உன் முன்றுனைதான் என்ன அழகு !
நதிகளின் கரைகள்தோறும்
ஆலமரங்களின் கீழ் எல்லாம் விரித்துவிட்டாய் !
அன்னையே, உன் வாயினின்று உதிரும்
ஒவ்வொரு சொல்லும் அமுதமாக இனிக்கிறது !
அன்னையே !
உன் முகம் வாட்டமுற்றால்
என் கண்களில் கண்ணீர் முட்டி நிற்கிறது.
'உன்னுடைய இந்த மண்வீட்டில்தான்
என்னுடைய இளமைப் பருவம் கழிந்தது.
உன்னுடைய மண் என் மேனியில் பட்டால்
மெய்சிலிர்த்து மகிழ்கிறேன்.
என் வாழ்க்கை பயனுற்றதாக எண்ணிக் களிக்கிறேன்!
அந்தி மாலை நேரத்திலே, ஆகா !
என்ன அழகான விளக்கினை ஏற்றி வைக்கிறாய் !
அதைப் பார்த்ததும் திரும்பி ஓடிவருகிறேன் –
உன்னை அணைத்துக் கொள்ள !
என் வாழ்நாளை,
மாடுகள் மேயும் மைதானங்களிலும்
படகுத் துறைகளிலும்
நெல்மணிகள் சிதறிக் கிடக்கும் களத்துமேடுகளிலும்
கழித்து விடுகிறேன் !
என் அன்னையே !
என் சகோதரர்கள்,
உன் மாடு மேய்க்கும் சிறுவர்களும்
வயலில் வேலை செய்யும் உழவர்களுந்தான் !



அன்னையே, உன் பாதார விந்தங்களில்
என் தலை தாழ்த்தி வணங்குகிறேன்.
உன் பாததூளி, என் மகுடத்தில்
பதிக்கும் மாணிக்கமாகும்.
நான் என்னுடையவை என்பவை யாவையும்
உன் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன்.
நான் எவ்வளவு ஏழையாயினும்
உன்னை அலங்கரிக்க என்று
அந்நியர் செல்வப் பகட்டில் மயங்கித்
தற்கொலைக்கொப்பான காரியம் செய்யமாட்டேன்!

தமிழாக்கம் : எஸ். வி. எஸ்.




☐ சுதந்திரம் பெற்றபிறகு நமது நாடு நடுநிலைக் கொள்கையைக் கடைப்பிடித்து வந்ததால் பெரியதொரு போரைச் சந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது என்ற கருத்தில் நமது ராணுவம் விஸ்தரிக்கப்படாமல் இருந்தது. 1962ல் சீனா திடீரென்று நம்மைத் தாக்கிய போது பயிற்சியின்றி, நவீன போர்க் கருவிகள் இல்லாமல் மிகவும் வருந்தத்தக்க நிலைக்கு ஆளாக்கப்பட்டார்கள். வீரத்தில் நமது படைவீரர்கள் உலகில் யாருக்கும் பின்தங்கியவர்களல்ல. ஆனால் சற்றும் எதிர் பாராத வகையில் நம் மீது போர் திணிக்கப் பட்டபோது தாங்கள் செயலற்ற தன்மைக்கு ஆளாக்கப்பட்டதை நினைத்து நமது ராணுவ வீரர்களின் உறுதி சிறிது தளர்ந்தது.

சீனத் தாக்குதலுக்குப் பிறகுதான் இந்திய அரசு நமது ராணுவ நிலை குறித்துச் சிந்திக்கத் தொடங்கியது. அதன் விளைவாக முப்படைகளும் வலுப்படுத்தப்பட்டன. ராணுவ தளவாட உற்பத்தி தீவிரமாயிற்று. சீனத் தாக்குதல் பண்டிட்ஜியை மனமுடைந்து போகச் செய்துவிட்டது. அவர் மறைவினை இது துரிதப்படுத்தியதாகக்கூடச் சொல்லப் படுவதுண்டு. ஆனால் சீனத் தாக்குதலினால் ஒரு நன்மையும் விளைந்தது. முடங்கிக் கிடந்த நமது ராணுவம் உயிர் பெற்றெழுந்தது அப் போதுதான் !

☐ 1965ல் பாகிஸ்தான் நம்மைத் தாக்கிய போது முதன் முறையாக நமது விமானப் படை போரில் ஈடுபடுத்தப்பட்டது. உள் நாட்டில் தயாரிக்கப்பட்ட விமானங்களைப் பயன்படுத்தி எதிரியைத் திணற அடித்தார்கள் நமது வீரர்கள். சக்தி வாய்ந்த பாட்டன் டாங்குகளைத் தகர்த்து அதிசயிக்கத்தக்க வகையில் வீரத்தைக் காட்டினார்கள். சீனப் போரில் ஏற்பட்ட அவமானத்தினால் சற்றுக் குனிந்திருந்த நமது ராணுவத்தின் தலை இந்தப் போரில் நிமிர்ந்தது. இந்தப் போரினால் விளைந்த பெரிய நன்மை இது.

இந்தப் போரில் நமக்குச் சொந்தமான 'பிரம்மபுத்ரா' என்ற கப்பலைப் பாகிஸ்தான் மூழ்கடித்துவிட்டதாகப் பொய்ப் பிரசாரம் செய்தது. அயல்நாட்டுப் பத்திரிகையாளர்களை அழைத்து 'மூழ்கடிக்கப்பட்ட' பிரம்மபுத்திராவைக் காட்டினோம்!

இந்தப் போரில் கப்பற் படை பங்கு கொள்ளவில்லை. சப்மரீன்கள் வாங்கினால் இந்தியா போர் வெறி கொண்ட நாடு என்ற எண்ணம் வருமோ என்று அவற்றை வாங்காமலேயே இருந்தோம். சமீபத்தில் தான் சப்மரீன்கள் வாங்கப்பட்டன.

☐ நடந்து முடிந்த போரில் முப்படைகளும் நல்ல ஒற்றுமையோடு செயல்பட்டு எதிரியைத் திக்குமுக்காடச் செய்து விட்டன! ராணுவத் தளபதிகளுக்கும் அரசாங்கத்துக்கு மிடையே நல்ல ஒருங்கிணைப்பு இருந்தது. இந்தப்போரில் வங்காளதேசத்தை விடுவிக்க வேண்டும் என்பதுதான் நமது நோக்கம். மற்றபடி மேற்கு முனையில் நடந்த போர் தற்காப் புக்காகத்தான்!

☐ பாகிஸ்தான் பெரும்பாலும் வெளிநாடுகளிலிருந்து பெற்ற ஆயுதங்களைப் பயன்படுத்தியது. சரியான பராமரிப்பு வசதி இல்லை. எனவே, தளவாடங்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் அவற்றை முழுமையாகப் பயன்படுத்த முடியவில்லை. நம் நிலை அப்படி இல்லை. நாம் பெரும்பாலும் நமது தயாரிப்புக்களையே பயன்படுத்துகிறோம். பராமரித்துப் பழுது பார்க்க வசதி இருக்கிறது. நமது விஜயந்தா டாங்குகள் சிறந்த ரக டாங்குகள். அவை இந்தப் போரில் நமது வெற்றிக்கு உறுதுணை செய்தன.

☐ இந்தப் போரில் கடற்படையின் பங்கு மகத்தானது. எதிரிக்கு யுத்த தளவாடங்கள் வரும் வழிகளை அடைத்து கராச்சி, சிட்டகாங் போன்ற துறைமுகங்களை எப்படித் திட்டமிட்டுத் தாக்கினோம் என்பதைச் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்த திரு கிருஷ்ணன் என்னிடம் விவரித்தார். கமாண்டர் பறூன் யாதவ், ஆக்டிங் காப்டன் மூல்லா (மகா வீரச் சக்கர விருது பெற்றவர்கள்) போன்றவர்களின் வீரச் செயல்களைப் பற்றி அவர் சொன்ன போது மெய்சிலிர்த்தது. மூழ்கிக் கொண்டிருக்கும் கப்பலில் மற்றவர்களைத் தப்பிக்க வைக்க காப்டன் மூல்லா எடுத்துக் கொண்ட நடவடிக்கை, அவர் காட்டிய பொறுமை, தீரம் — இவையெல்லாம் நமது இளைய தலைமுறையினர் அறிந்து பயன்பெற வேண்டியவை !

☐ போர்க்காலங்களில் மட்டும் நாம் ஜவான்களை நினைத்து ஏதோ தர்மம் செய்வதுபோல் உதவுவது சரியல்ல. ராணுவ வீரர்களுக்கும், அவர்தம் குடும்பங்களுக்கும் தேவையான உதவியை நமது கடமையாக நினைத்துச் செய்ய வேண்டும். கடுங் குளிரிலும் வெண் பனியிலும் அவர்கள் நமக்காக அயராது பணியாற்றுகிறார்கள்.

மற்ற தொழில்களைப் போல் ராணுவமும் கருதப்பட வேண்டும். இளைஞர்கள் பெருமளவில் ராணுவத்தில் சேர்ந்து பணியாற்ற முன்வர வேண்டும். என்னுடைய ஒரே மகன் அவனாக விரும்பிக் கடற்படையில் சேர்ந்து இன்று நல்ல பதவியை வகிக்கிறான்.

இத்தனை காலமும் நாம் ராணுவத்துக்குச் செய்த செலவு வீண் போகவில்லை என்பதைச் சுதந்திர வங்காளத்தைப் பெற்றுக் கொடுத்து நமது வீரர்கள் நிரூபித்துக் காட்டினார்கள்.

நம்பற்குரியர் அவ்வீரர். அவர் சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க !

(ஓய்வுபெற்ற கடற்படை அதிகாரி கமோடார் விசுவநாதன் ரோடரி கிளப் சார்பில் சமீபத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.) —எஸ்ஸார்

# அம்மா

ரா. கணபதி

## 15. "திவ்யாலங்கார பூஷிதா"

ஓம் ரணத்கிங்கிணி மேகலாயை நம:
(ஒலிக்கும் கிங்கிணி கொண்ட மேகலை அணிந்த வளுக்கு வணக்கம்)

ஓம் முக்தாஹார விபூஷிதாயை நம:
(முத்து மாலை அணிந்தவளுக்கு வணக்கம்)

ஓம் முக்தாமணி அங்கித சாரு நாசிகாயை நம:
(முத்து மூக்குத்தி அணிந்த அழகிய நாசியுடைய வளுக்கு வணக்கம்)

ஓம் ரத்னவலய பூஷிதாயை நம:
(ரத்தின வளை அணிந்தவளுக்கு வணக்கம்)

— ஸ்ரீ சாரதா தேவி அஷ்டோத்தர சத நாமாவளி

குரு சிஷ்ய உறவு வறட்சியாக நிற்க வில்லை. இவள் அவருக்குப் பார்த்துப் பார்த்துச் சமைத்துப் போட்டாள்; வெற்றிலைச் சுருள் மடித்துக் கொடுத்தாள். அன்பைக் கலந்து பணிவிடைகள் செய்தாள். அவரும் இவளைக் கண்ணின் மணியாக அருமையுடன் நடத்தினார்.

குடித்தனம் செய்ய மனைவி வந்த வுடன், ஆதியில் அம்மா குறைப்பட்டுக் கொண்டதை நிறை செய்தார் ராம கிருஷ்ணர். கலியாணமான புதிதில் லாஹா வீட்டு இரவல் நகையைக் குழந்தை சாருவிடமிருந்து அவர் 'பறி முதல்' செய்தபோது அன்னை சந்திரா அழுது துடித்தாள் அல்லவா? பிறகு சாருவிடம், "கதாயீ இதைவிட நல்ல நகையெல்லாம் உனக்குப் பண்ணிப் போடுவான்" என்றாள் அல்லவா? இப்போது மாத்ரு வாக்ய பரிபாலனம் செய்தார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணர் எண்ணிறந்த பாவங்களில் இறைவனை அநுசந்தானம் செய்தாரல்லவா? அவற்றில் அவர் அம்பிகையின் சேடியாகத் தம்மை பாவித்ததும் ஒரு சாதனையாகும். இன்னொரு சமயத்தில் தம்மை ராதா ராணியாகவே கருதி கிருஷ்ண பரமாத்மாவை அன்பு செய்தார். இவ்விரு சாதனைகளின் போதும் அவர் சேலை உடுத்தியும், பின்னலிட்டும் பெண்ணாகவே வாழ்ந்தார். அந்த உணர்வு அடர்த்தியில் அவரது சரீரத்தில் பெண்களுக்குரிய தன்மைகளே ஏற்பட்டு, ஆடவர் சரீரத்திலுள்ள தனித் தன்மைகள் மறைந்தும் விட்டன. இந்தக் காலங்களில் அவர் அணிவதற்கென ஹாரம், நத்து, கங்கணம் முதலிய ஆபரணங்களை அர்ப்பணித்தார் மதுர்பாபு.

இப்போது ராமகிருஷ்ணர் அந்த ஆபரணங்களை சாரதாமணிக்கு அன்புடன் அளித்தார். பொன்னையும் மண்ணையும் சமமாகப் பாவித்த சந்நியாசச் சக்கரவர்த்தி, பரிபக்குவம் வாய்ந்த பத்தினிக்குப் பொன்னுபரணங்களைத் தந்தார்!

அதோடு நிற்கவில்லை. ஹ்ருதயரை அழைத்தார். "இங்கே வருகிற பல பேர் நான் எத்தனை மறுத்தாலும் கேட்காம பணக் காணிக்கை செலுத்தறதை எடுத்து வைச்சப்பியே, மொத்தம் எவ்வளவு சேர்ந்திருக்கு பாரு" என்றார்.

பணம் என்றாலே பதறும் மாமா, தவறிப்போய்ப் பணத்தைத் தீண்ட நேர்ந்தால் உடல் கொப்புளித்துப் போகும் மாமா, கணக்குப் பார்க்கச் சொல்வது ஹ்ருதயருக்கு வியப்பாக இருந்தது. கணக்குப் பார்த்தார். முந்நூறு ரூபாய் இருந்தது.

"சரி, மாமிக்கு அதிலே பொன் காப்புப் பண்ணிப் போடு. அந்தக் காப்பு முனையிலே வைரக் கல் பதிக்கணும். ஏன் தெரியுமா? ஸீதை அப்படிப் பட்ட கங்கணம்தான் போட்டுண்டு இருந்தா. ராவணன் தூக்கிண்டு போகச்சே ஸீதா தேவி எல்லா நகைகளையும் கழட்டிப் போட்டாலும் கூட, இந்த மங்கள கங்கணத்தை மட்டும் கழட்டல்லே. ஆமான்டா, நான் முதல் முதல்லே கண்ணைத் திறந்துண்டே தரிசனம் பண்ணின அசோக வனத்துப் புழுதி ஸீதை கையிலே இந்தக் கங்கணம் மட்டும் பளிச்சினு மின்விதது" என்றவர் முகம் வழியச் சிரித்துக் கொண்டு "எனக்கும் உன் மாமிக்கும் இதுதான் உறவு" என்றார்.

லௌகிகமாகத் தோன்றுகிற ஒன்றுக்குள்ளே எத்தனை புனிதம்!

திருமணத்தின்போதே கங்கணச் சரட்டை எரித்துக்கொண்ட ராமகிருஷ்ணர், தமது ஸீதா தேவிக்கு வைரம் பதித்த கங்கணத்தை அளித்தார்.

"ஹ்ருதூ, இதுக்கு என்ன செலவு ஆச்சு?" என்று கேட்டார்.

"இருநூறு ரூபாய்" என்று பதில் வந்தது.

"அப்படீன்னு பாக்கி நூறு ரூபாயையும் மாமிகிட்டக் கொடுத்துடு. அவதானே இனிமே இங்கே யஜமானியம்மா?" என்றார்.

பற்றி எரிகிற இதயத்துடன் ஹ்ருதயர் அந்தப் பணத்தை மாமியிடம்

கொடுத்தார். அவள் அதைத் தனக்காகச் செலவழித்துக் கொள்ளவில்லை. பரம ஏழைமையிலிருந்த தன் பிறந்தகத்துக்கும் அனுப்பிவிட வில்லை. ஹிருதயர் உள்ளிட்ட ராமகிருஷ்ண பக்தர்களுக்காகவே உணவுப் பண்டம் முதலியன வாங்கிப் போட்டாள்.

அகலமாகச் சிவப்புக் கரை போட்ட மங்கள வஸ்திரம் உடுத்தி, வகிட்டிலே செங்குங்குமம் அப்பிக் கொண்டு, மூக்கிலே நத்தும், கழுத்திலே காசு மாலையும் மின்ன, கரங்களில் கங்கணங்கள் கிணுகிணுக்க, முழங்காலை எட்டும் அடர்ந்த பின்னலுடன் தேவி சாரதாமணி நஹவத்தின் மாடிக்குச் சென்று மாமியாரின் பாதத்தில் பணிந்தாள்.

அந்த ஸர்வ மங்களையைக் கண்டு சந்திரமணியின் கண்கள் பனித்தன.



எத்தனையோ காலத்துக்குப் பின் இப்போது கற்பிதமாக எண்ணும் போதே நம்முடைய கண் பனிக்கிறது எனில், அந்த இனிக்கும் கோலத்தை நேரில் கண்ட சந்திரா ஏன் கரைய மாட்டாள்?

''தீர்க்க ஸுமங்கலி பவ'' என்ற வார்த்தைகளைச்

சொல்லவும் முடியாமல் தடுமாறினாள் அவள்.

ஆஹா, அந்தப் புண்ணியவதி தடுமாறாமல் அப்படி ஆசீர்வதித்திருக்கக்கூடாதா?... சரி, மங்கள வேளையில் அதை ஏன் நினைக்க வேண்டும்?

மங்களமும் கரித்தது ஹ்ருதயருக்கு. என்ன இருந்தாலும் மாமிக்கு இந்த நகை ஆசை வேண்டியதில்லை என்று தோன்றியது.

அவரிடம் ராமகிருஷ்ணர் — நம் காலத்து யுவதிகளுக்கே சொல்வது போல் — சொன்னார்: ''பெண்கள் நகை நட்டுக்களுக்கு ரொம்பவும் ஆசைப்படக் கூடாது. வண்டி நகையை வாரிப் போட்டுக்கப்படாது. ஆனா அதுக்காக மூளியாகவும் நிக்கக் கூடாது. மங்கள ஸ்வரூபமாயிருக்கணும். ஸரஸ்வதி தேவி ஒரே வெள்ளை, ஒரே எளிமைதான். ஆனா அவளுக்கு 'திவ்யாலங்கார பூஷிதா'ன்னு பேர் உண்டு தெரியுமா? அதனாலேதான் மாமியும் சந்தோஷமா நகை போட்டுக்கறா.''

சொல்லும்போதே அவரும் சந்தோஷப்பட்டார்!

சாரதை நஹவத்துக்குப் போன பின் அவள் ராமகிருஷ்ணரைச் சந்திப்பது மிக மிகக் குறைந்து போயிற்று. தக்ஷிணேசுவரக் காளி கோயிலுக்கும், ராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்கும் பகலெல்லாம் பலர் வந்தபடியிருந்ததால், வெகு கடுமையாக 'கோஷா' முறையை அநுசரித்த சாரதை, பதிதேவருக்கு உணவு எடுத்துச் செல்வது தவிர மற்றப் போதுகளில் தன் அறையை விட்டு வெளி வருவதை அடியோடு நிறுத்திக் கொண்டாள். ஆனால் ராமகிருஷ்ணரோ அவளுக்குப் பலவித மந்திரோபதேசங்களையும், வேறு பல போதனைகளையும் தர விரும்பிப் பக்கலில் வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. இவைதாம் அவர் அவளுக்கு அளிக்க விருந்த நிரந்தர ஆபரணங்கள். சாரதைக்குப் பகலில் பயிற்சி தர முடியாததால் வெளியுலகம் எண்ணிப் பார்க்கமுடியாத ஒரு புதுமை— அச்சமும் ஆனந்தமும் சேர்ந்த புதுமை— இவர்களது வாழ்வில் தொடங்கியது! இரவு வேளைகளில் ராமகிருஷ்ணர் சாரதையைத் தமது அறையிலேயே வைத்துக் கொண்டார்!

முதலில் அவள் வந்தபோது ஒரு கிழவியைத் துணை வைத்துக் கொள்ளச் சொன்னவர், இப்போது தங்கள் இருவரது மனங்களின் புனிதமே துணை இருக்க, வெளித் துணை எதற்கு என்று கருதினார்.

தாழிடாத அறையில் அந்த ஒப்பில்லாத தம்பதியரின் இரவுகள் கழிந்தன.

ராமகிருஷ்ணரைப் பைத்தியம் என்று சொன்னவர்கள் இருந்தார்கள். அவர் ஒன்றும் தெரியாத அப்பாவி என்று நினைத்தவர்கள் இருந்தார்கள். அவரது தெய்விக அவதாரத் தன்மையைப் புரிந்து கொள்ளாதவர்கள் அதைவிட ஏராளமாக இருந்தார்கள். ஆனாலும் எவருமே அவரது தூய்மையைப் புரிந்து கொள்ளாமல் இல்லை. பைத்தியம் என்றும் பேதை என்றும் அவரைச் சொன்னவர்களும், அவரைப் பிரம்மசரியத்தில் குறைந்தவராக ஒருபோதும் சொல்லவில்லை — இளம் மனைவியுடனேயே அவர் இரவுகளைக் கழித்த போதிலும். இப்படி ஒரு பேச்சு எழும்பாததொன்றே போதும் அவரது சீலத்தின் சிறப்புக்கு!

பக்கத்தில் மனைவியை வைத்துக் கொண்டே சந்நியாசத்தைக் காக்க வேண்டும் என்பதை அவர் காமார்புகுரில் நடைமுறையாக்கினாலும் அதில் அவ்வளவு விசேஷமில்லை. அப்போது சாரதை ஓரளவு குழந்தை நிலையிலேயே இருந்தாள். மேலும் பகல் நேரங்களில் பலருக்கிடையேதான் அவர்கள் பழகினர். இப்போதோ அவள் பத்தொன்பது வயதுப் பெண்மணி. இரவில் ஏகாந்தத்தில் அவர்கள் காந்தன்—காந்தை என்ற நினைப்பின்றி வாழ்ந்தது சமய சரித்திரம் கண்டிராத சாதனை.

சாதனையில் அவளைச் சோதனையும் செய்தார் ராமகிருஷ்ணர் ஒருமுறை.

''பிரியே! உன்னை நான் தொட்டுத் தாலி கட்டியிருக்கேன்! எனவே உனக்குத் தாம்பத்திய இச்சை இருந்தா அதைப் பூர்த்தி செய்யறது என் கடமை. என்னை லௌகிகத்துக்கு இழுக்கத்தான் நீ ஜயராம்பாடியிலேருந்து இங்கே வந்திருக்கேன்னா, நீ இழுத்த இழுப்புக்கு இசையத்தான் வேணும்...''

தன்மேல் தணலை வாரிக் கொட்டினாற்போல் துடித்துச் சாரதை இடைமறித்தாள்: ''என்னா இப்படிப் பேசறேள்? நான் ஏன் உங்களை லௌகிகத்துக்கு இழுக்கணும்? நீங்க உங்களுக்குன்னு ஒரு மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்திருக்கேளே, அதிலே உங்க பிரயாணத்துக்குச் சகாயம் பண்ணறத்துக்காகவேதான் வந்திருக்கேன்.''

'சகதர்ம சாரிணி'யாக முழுக்க முழுக்க அவருடன் தர்மத்தில் உடன் நடந்து உதவவே வந்தவள் அவள்.

தன்னைப் பார்த்து அவர் அந்த வார்த்தை சொன்னது அவள் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது

போதும்! ஒரு நாள் இரவு 'எதிர்த் தாக்குதல்' கொடுத்தாள்.

அவரது பாதங்களைப் பிடித்துவிட்டுக்கொண்டிருந்தாள் அவள். அவர் புன்முறுவலுடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்தப் புன்னகையின் புனிதம் புரியாததுபோல் சாரதாதேவி, ''என்னை எந்த எண்ணத்துடன் இப்படி உற்றுப் பார்க்கறேள்?'' என்று கேட்டாள்.

ராமகிருஷ்ணர் தணல் பட்டதுபோல் துடித்துப் பதில் சொல்லவில்லை. சாந்தமாக, பக்தி புஞ்சிதமாகச் சொன்னார்: ''கோவிலுக்குள்ளே ஒரு அம்மா இருக்கா. அந்த அம்மாவே இன்னொரு ரூபத்திலே வந்து என்னைப் பெற்றுப் போட்டுவிட்டு இப்போ நஹபத் மாடியிலே இருக்கா. சாக்ஷாத் அதே அம்மாதான் இன்னொரு வேஷத்தைப் போட்டுண்டு இதோ என் கால்மாட்டிலே உட்கார்ந்துண்டு பிடிச்சு விடறா. சத்தியமாச் சொல்றேன். உன்னை என் ஆனந்த மாதாவோட ஸ்வரூபமாகத்தான் பார்க்கறேன்.''

சாந்தமாக ஆரம்பித்தவர் விக்கினார். 'குடைய' எண்ணியவளும் விக்கினாள்.

இன்னோர் இரவு. அவள் ஒரே அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தாள். உழைத்துக் கொட்டிய களைப்பிலே நல்ல தூக்கத்தைத் தேகம் அனுபவித்தது. கண்டதை எண்ணிக் கலக்கத் தெரியாத மனமாதலால் அந்த நித்திரையில் நிர்மல நிம்மதி நிலவியது. சீராகச் சுவாசித்துக் கொண்டு தேவி உறங்கியது, ஏதோ சமாதி நிலையில் இருப்பதுபோலத்தான் இருந்தது.

ராமகிருஷ்ணர் அந்த உருவத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தார். 'ஹ்ம்' என்று தம் உடலைக் குலுக்கிக் கொண்டார். 'வெறும் மாமிசப் பிண்டமாகப் பார்த்தால் இதுதான் பெண் உடல் என்பது. இதை அனுபவிப்பதுதான் வாழ்க்கையில் தலை சிறந்த இன்பம் என்று கருதி மக்கள் இதன் பின் ஓடுகிறார்கள். ஆனால் இதை இன்பம் என்று ஏற்றுவிட்டாலோ, அப்புறம் தேக உணர்வு என்கிற பொறியிலே சிக்கிவிட வேண்டியதுதான். பிறகு சத்-சித்-ஆனந்த பரிபூரணமான பரம்பொருளை அடைவது முடியாத காரியம். ஏ, கதாயீ! உனக்கு நீயே போலித்தனம் பண்ணிக் கொள்ளாதே! உன்னுக்குள்ளே ஒரு நாட்டத்தை மறைத்து வைத்துக்கொண்டு வெளியே பொய்யாக இன்னொரு சித்தாந்தத்தைப் பின்பற்றாதே. நிஜமாகச் சொல்லடா, உனக்கு இந்தப் பெண் உடம்பு வேண்டவே வேண்டாம், பரம்பொருள்தான் வேண்டும் என்று சர்வ நிச்சயமாகத் தீர்மானம் இருக்கிறதா? இந்த உடம்பு வேண்டுமென்றால்-இதோ உன் முன்னே நீ அநுபவிக்கவே அது கிடக்கிறது. உன்னைப் பரம சந்நியாசியாக நினைத்துக் கொண்டுள்ள நீ அதை எந்த விகல்பமும் இல்லாமல் தொட முடியுமா, பார்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

பரீட்சித்துப் பார்ப்பதற்காகக் கையை நீட்டினார். அவ்வளவுதான்! பூமியின் ஆகர்ஷணத்தை மீறி விண்வெளியில் ஆயிரமாயிரம் காத வேகத்தில் பறக்கும் கலம் போல ராமகிருஷ்ணரின் உள்ளம் கிறுகிறுவென்று உயரே, உயரே அதற்கும் உயரே, அப்பாலும் உயரே, மேலும் உயரே பறக்கலாயிற்று.

'தொடுவதா? தொடுவதா? அப்படி யானால் தொடுகிறவன், தொடப்படும் வஸ்து, தொடுதல் என்ற பேதங்கள் உள்ளனவே. அண்ட சராசரங்கள் அனைத்திலும் பரவியிருக்கும் ஏக வஸ்துவான எனக்குப் புறம்பாக நான் தொட்டுப் பார்க்கும்படியாக எது இருக்கிறது?' ராமகிருஷ்ணர் அதி உன்னத சமாதி நிலைக்கு ஆரோகணித்து விட்டார்.

விகல்பமின்றி அவளைத் தொட முடியுமா எனப் பரீட்சை பார்த்தவர் நிர்விகல்ப சமாதியே எய்திவிட்டார்.

வழக்கம் போல் பின்மாலை நாலு மணிக்கு எழுந்த சாரதை, கணவர் பிரக்ஞையற்று ஆணி அறைந்தாற்போல் அமர்ந்திருக்கும் நிலை கண்டு நடுங்கி விட்டாள். பிரக்ஞையில்லையா? அதுதான் உண்மைப் பிரக்ஞை. 'பிரக்ஞானம் பிரம்ம' என்ற நிலை அது. ஆனாலும் வெளி வியாபாரம் ஒடுங்கி விட்ட அந்த நிலையில் கணவரைக் கண்டு கதிகலங்கி விட்டாள் சாரதை.

ஹ்ருதயர் வந்து 'மாமா'வின் காதில் ஏதேதோ பகவந் நாமங்களை நீண்ட நேரம் கோஷித்த பின்தான் ராமகிருஷ்ணரின் சமாதி கலைந்தது.

அதன் பின் ராமகிருஷ்ணர் தமது மனையாளுக்குத் தமது சமாதியின் பலவித பாவங்களை விளக்கி, தம்மிடம் புறத்தில் இன்னின்ன அடையாளங்களைக் கண்டால் அது இந்த வகை சமாதியைக் குறிக்கும் என்று விவரித்து, அவை ஒவ்வொன்றிலிருந்தும் தம்மைக் கலைத்தெழுப்ப என்னென்ன நாமங்களை அல்லது மந்திரங்களைக் காதில் ஓதவேண்டும் என்பதையும் சாங்கோபாங்கமாகச் சொல்லிக் கொடுத்தார்.



அதீத நிலை எய்தவே மந்திரோபதேசம் செய்வார்கள். இந்த விசித்திரக் கணவரின் அதீத நிலையைக் கலைப்பதற்கு அவரது காதில் மந்திரம் ஓதுவாள் அதைவிட விசித்திரமான மனைவி.

சாரதைக்கு ராமகிருஷ்ணர் சகல மந்திரங்களையும் உபதேசித்தார். முன்பு காமார்புகுரில் அவள் இருந்தபோது பூர்ணானந்தர் என்ற தேஜஸ்வியான உத்தம சாது அங்கு எழுந்தருளிப் பலருக்கு மந்திரோபதேசம் செய்தார். அவர் சாரதைக்கும், குழந்தை லக்ஷ்மிக்கும்கூட, சக்தி மந்திரத்தை உபதேசித்திருந்தார். மந்திரோபதேசம் என்பது மகான்களின் வாழ்வில் மிகவும் முக்கியமான ஒரு கட்டம். ஆனால் சக்தியவதாரமான சாரதை சக்தி மந்திரம் பெற்றதில் விசேஷமாக ஏதும் நிகழவில்லை. வித்தின் மீதும் பயிரின் மீதும் விழுந்தவுடன் பச்சை அற்புதத்தைப் புனையும் மழையானது நீர்ப் பரப்பின் மீது விழுந்தால் எந்த அற்புத மாறுதலையும் விளைவிப்பதில்லை! பல சாதகர்களின் உட்புகுந்து அற்புத மாற்றங்களைச் செய்யும் சக்தி மந்திரம், சக்தியவதாரமான சாரதையினுள் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை போலும்! அல்லது, நமக்குத்தெரியாமலே மாற்றம் உண்டாக்கி இருக்கலாம். அவளது பௌதிகமான குழந்தை ஆசை பஸ்மமாகி, அவள் ஜயராம்பாடியில் வாழ்ந்த பரம வைராக்கிய வாழ்வுக்கு அந்த மந்திரம்தான் காரணமோ என்னவோ?

சாரதையின் தாய்மையை அடக்கி வைக்க வேண்டுமென்று ராமகிருஷ்ணர் நினைத்த காலம் இப்போது போய்விட்டது. இப்போது அவளுக்குள் உள்ள தாய்மையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தட்டி எழுப்ப முற்பட்டார். அப்படித் தட்டி எழுப்பும் சாதனங்களாகவே பல மந்திரங்களை உபதேசித்தார். அவளது திருநாவிலும் ஒரு மந்திரத்தை எழுதியருளினார். தாம் திரட்டிய ஆத்மிகச் செல்வத்தையெல்லாம் இவ்வாறாகச் சாரதைக்குள் செலுத்தினார்.

மந்திரம் என்றால் என்ன? மனனம் செய்பவனைக் காப்பது எதுவோ அதுவே மந்திரம். மந்திரம் என்பது ஒலிகளின் சேர்க்கைதானே, அதை ஜபித்தால் எப்படி இறைவனை அடைய முடியும் என்று தோன்றலாம். ஒலிகளின் சக்தி அபரிமிதமானது. அசைவு ஏற்படும் இடங்களில் எல்லாம் ஓர் ஒலியும் உண்டாகும் என்பது விஞ்ஞானம். அசைவற்ற பிரம்மம் ஆகாயமாகவும், காற்றாகவும், தீயாகவும், நீராகவும், மண்ணாகவும், இன்னும் எண்ணிறந்த பொருட்களாகவும், சக்திகளாகவும், எண்ணங்களாகவும் தோன்றியபோதெல்லாம் வெவ்வேறு அசைவுகள் உண்டாகித்தானே இருக்க வேண்டும்? இந்த அசைவுகளின்போது ஏற்பட்ட ஒலிகளை ஒத்த மானுட சப்தங்களை மகரிஷிகள் கண்டு கொண்டார்கள். இந்தச் சப்தக் கோவைகளே மந்திரங்கள். அவை எந்த மொழியையும் சேர்ந்தவையில்லை. இந்தச் சப்தக் கோவைகளைச் சுத்தமாக மொழிவதன் மூலமே, மூல அசைவிலிருந்து பிறந்த சக்திகளையும் படிப்படியாகக் கிரகித்து, கடைசியில் அந்த சக்திகளுக்கெல்லாம் மூலமான அசைவற்ற ஏகத்தையும் பிடித்து விடலாம். செல்வத்தைத் தரும் சக்தி, வித்தையைத் தரும் சக்தி, ஞானம் தரும் சக்தி, அழகு தரும் சக்தி — இப்படி ஒவ்வொன்றுக்கும் ஏற்றபடி அதிர்வுகளை உண்டாக்கும் சப்தக் கோவைகளின் மூலம், ரேடியோப் பெட்டியில் அதிர்வுகளைக் கொண்டு பல நிலையங்களைப் பிடிப்பது போல், பலவித சக்தி அசைவுகளின் ஆதாரத்தைப் பிடிக்கலாம். நல்ல சக்தியைப் பிடிக்கவும் மந்திரம் உண்டு; தீய சக்தியைப் பிடிக்கவும் மந்திரம் உண்டு. நல்லது — அல்லது என்ற வேற்றுமை அற்ற ஞான நிலை எய்தவும் மந்திரம் உண்டு. ராமகிருஷ்ணரோ சாரதையை ,நல்லதும் தீயதும் அற்ற எல்லை நிலத்தைத் தனக்குள்ளும், எது நல்லது எது தீயது என்று பிரித்துக் காணும் பாங்கை வெளியிலும் காண்பதற்காகவே மந்திரங்களை உபதேசித்தார். அதோடுகூட, அவளது ஜீவாசாரமாக, வெளியில் நன்மை தீமை மாறுபாட்டைக் கண்ட போதிலும் அவளைப் பொறுத்தமட்டில் எவ்வித பேதமுமின்றி வெளி உலகம் முழுவதற்கும் நல்லது மட்டுமே செய்வதற்கும் மந்திரங்களைக் கொடுத்தார். எல்லா மகா புருஷர்களிடமுமே இந்த விசித்திரக் கலவையைக் காண்கிறோம். அவர்கள் நன்மை தீமை இரண்டும் கலந்த மாய உலகைக் கடந்தவர்கள்; ஆயினும் உலகில் எது நல்லது எது தீயது என்று அவர்களுக்குத் தெரிகிறது; அதே சமயத்தில் நல்லவர் தீயவர் இரு சாராரையும் அவர்கள் ஒரே போல் அன்புடன் அரவணைக்கிறார்கள்; உலகுக்கு நல்லது மட்டுமே புரிகிறார்கள்.

இந்த உத்தமச் சிறப்புக்கள் மந்திரோபதேசத்தால் சாரதைக்குக் கிட்டின என்பது சரிதானா? அவளது சுபாவத்திலே அவை இருக்கவில்லையா?



சுபாவத்தில் இருந்ததையே மந்திரங்கள் நிலைப்படுத்தின எனலாம்.

அவள் பலவிதமான மந்திரோபதேசம் பெற்றதற்கு இன்னொரு காரணமும் உண்டு. எதிர்காலத்தில் அவள் தன்னிடம் வந்தோரில் ஏராளமானவருக்கு அவரவருக்குரிய மந்திரங்களை உபதேசித்து நல்வழிப்படுத்தப் போகிறாள். இதற்காகவே முதலில் அவற்றைத் தானும் மந்திரமூர்த்தியான நாயகனிடமிருந்து பெற்றாள் போலும்!

சாரதை தனக்கே உரிய சிரத்தையுடன் மனம் குவிந்து அந்த மந்திரங்களை ஜபித்தாள். நாள் முழுதும் ஓயாத வேலையாதலால், காலையில் மூன்று மணிக்கே எழுந்திருந்து, சுமார் ஒன்றரை மணி ஜபயோகத்தில் கரைந்திருந்தாள். பின் மாலையிலிருந்து இவ்விதம் தீவிர ஜபம், ஓயாத உழைப்பு என்றிருப்பினும் அவள் எப்போதும் புது நிலவாகவே இலங்கியதுதான் அதிசயம்!

பவதாரிணியின் அருள் பொலியும் தக்ஷிணேசுவரத்திலே பாலாக நிலா காய்ந்து கொண்டிருந்தது. கங்காதேவி க்ஷீரசாகரமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

சந்திரன் தன் வெண்மையால் மௌனம் பரப்புவதாயும், தாவரம் தனது பசுமையால் கவிதை பொழிவதாகவும் டாகூர் பாடினார். இங்கு சந்திரனின் வெண் மௌனத்தை கங்கை வாங்கிக் கொண்டு தன் வெள்ளலைகளாலேயே கவிதை பாடினாள். அந்த கவிதைக்குள்ளேயே மோன சௌக்கியமும் திகழ்ந்தது. வம்பிலேயே மௌன சுகம் தரும் ராமகிருஷ்ணர் கங்கைக் கரைக்கு சாரதாதேவியுடன் வந்தார்.

ஞான சந்திரனான ராமகிருஷ்ணர், சில கங்கையான சாரதைக்கு முழுமதியைக் காட்டினார்.

அந்த ஒளியில் தாய்மையின் தண்மையையும், ஒழுக்கத்தின் வெண்மையையும் ஒருங்கே அநுபவித்த தேவி, சந்திரனைக் கை எடுத்துக் கும்பிட்டாள். ''நானும் உன்னைப் போலவே ஆகணும். உனக்கும்கூடக் களங்கம் இருக்கு. அந்தக் களங்கமும் இல்லாம நான் பரிபூரண சந்திரனாகவே ஆகணும்'' என்று பிரார்த்தித்தாள்.

''என்ன பேசறே! குழந்தை 'அம்புலி மாமா வாவா' கூப்பிடறதா?'' என்று கேட்டார் ராமகிருஷ்ணர்.

சாரதை மௌனம் சாதித்தாள்.

ராமகிருஷ்ணரே பேசினார். ''அம்புலி மாமா, சந்தமாமா இப்படி எல்லாம் சந்திரனுக்குப் பேரு. இந்தியா தேசம் முழுக்க எல்லாப் பிரதேசத்திலேயும் சந்திரனை 'மாமா' 'மாமா'ன்னே குழந்தைகள் கூப்பிடறதுகள். இந்தக் குழந்தைகள் தங்களுக்குள்ளே எத்தனையோ வித்தியாசம் பாராட்டறதுகள். அதுகள் வெவ்வேறே பாஷை பேசறதுகள். அதிலே சில குழந்தைகள் பணக்கார வீட்டிலே சௌக்கியமா வளர்றதுகள், சில குழந்தைகள் சேரியிலே படாத கஷ்டமும் படறதுகள். ஜாதி, அந்தஸ்து, பாஷை எல்லாத்திலேயும் வித்தியாசம் இருந்தாலும் சந்திரனை 'மாமா'ன்னு உறவு கொண்டாடறதுலே மட்டும் அத்தனை குழந்தைகளுக்கும் வித்தியாசமே இல்லை. அப்படியேதான் ஈசுவரன் அத்தனை பேருக்கும் ஒரே உறவா இருக்கான். அந்த ஒரு உறவைப் புரிஞ்சுண்டா, உலகத்திலே இருக்கிறவா அத்தனை பேருக்கும் அவன் அதே உறவுன்னு புரிஞ்சுண்டா, அப்புறம் எல்லாரும் நமக்கு உறவுன்னு புரிஞ்சுடும்.''

முன்பு அவள் தாய்மைக்குத் தவித்த போது உலகிலிருப்பவர்களை எல்லாம் மாயையாக ஒதுக்கச் சொன்னவர் இப்போது அனைவரையும் அன்புடன் உறவு பாராட்டச் சொன்னது சாரதையின் அன்பு உள்ளத்தில் நிலவைப் பொல்லென்று பொழிந்தது.

வேண்டுமென்றே, ''ஜனங்கள் எல்லாம் உறவு என்றால் என்ன முறையில்? கூடப் பிறந்தவாளா, பெற்றெடுத்தவாளா, அல்லது....'' என்று அவள் கேட்கும் போதே அவளை ஊடுருவித் துளைத்துப் பார்த்துப் புரிந்து கொண்ட ராமகிருஷ்ணர் மனத்துக்குள், 'அடி கள்ளி! இந்த நாலு வருஷத்தில் நல்ல திட்பமாக வளர்ந்து என்னையே ஆழம் பார்க்கிறாயா' என்று நினைத்தார். அதில் அவருக்கு எல்லையில்லாத உவகை.

பிரியத்துடன் புகல்வார்: ''ஈசுவரன் நமக்கு எப்படி உறவு — மநுஷ்யாள் எப்படி உறவு — ங்கிறதை எப்படி விவரிக்க முடியும்? எந்த உறவா வேணாலும் வைச்சுக்கலாம். அன்பு பூரணமாச் செழிச்சு நிக்கற உறவு அது. பொதுவாக ஈசுவரனை அம்மான்னு நினைச்சுண்டாலே இப்படி அன்பு முழுமையாச் செழிச்சு நிக்கும்; அதே மாதிரி மற்ற மநுஷ்யாளைக் குழந்தைகள்னு, ஆமாம், குழந்தைகள்னுதான் சொல்றேன்....''

சாரதாமணியின் அந்தராத்மாவுக்குள் குறுகுறுத்துக் கொண்டு பாய்ந்தன அந்த வார்த்தைகள். 'நாலரை வருஷங்களுக்குப்பின் அவர் என் வழிக்கு வந்து விட்டார்; இல்லை, இல்லை, என்னை என் வழிக்கே தகுதியுள்ளவளாக்கி அதில் சேர்க்கிறார்!'

குபுக்கென்று அழுதுவிட்டாள் தேவி சாரதாமணி.

(தொடரும்)

திரு கோவி மணிசேகரன் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான எழுத்தாளர். ஏராளமான சரித்திர, சமூகச் சிறுகதைகளையும், நாவல்களையும் எழுதியிருப்பவர்.

திரு மணிசேகரனின் நூறாவது புத்தகம் விரைவில் வெளியாகப் போகிறது.

அவருடைய வாழ்க்கைத் துணைவி ஸ்ரீமதி சரஸ்வதி.

கும்பகோணத்தில் 'டெபுடி சூபரெண்ட்டெண்ட் ஆஃப் போலீஸ்' ஆகப் பதவியில் சேர்ந்து பணியாற்றத் தொடங்கியவர் திரு பொன். பரமகுரு, எம். ஏ., பி. எல்.

மாவட்டப் போலீஸ் அதிகாரியாகவும், பாண்டிச்சேரி மாநிலம் ஏற்பட்டதும் அதன் இன்ஸ்பெக்டர் ஜெனரலாகவும் இருந்து, இன்று தமிழ்நாடு அரசின் டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் (டி. ஐ. ஜி.) ஆக உயர்ந்திருப்பவர்.

அவருடைய வாழ்க்கைத் துணை ஸ்ரீமதி கமலா.

நுங்கம்பாக்கம் லேக் வியூ தெருவில் வசித்து வரும் திருபொன்.பரமகுருவின் இல்லத்தில்இல்லத்தரசிகள் சந்தித்தனர். அறிமுகம் ஆன பிறகு இருவரும் சகஜமாகப் பேச ஆரம்பிக்கிறார்கள்.

# வணக்கம், சௌக்கியமா?



இவ்வாரம் உரையாடலில் பங்கு கொள்பவர்கள்:

ஸ்ரீமதி சரஸ்வதி மணிசேகரன்

ஸ்ரீமதி கமலா பரமகுரு

*இரு இல்லத்தரசிகளின் சந்திப்பு*

ஸ்ரீமதி கமலா பரமகுரு: உங்களுக்குக் கல்யாணம் ஆகும்போது உங்கள் கணவர் என்ன வேலை பார்த்து வந்தார்?

ஸ்ரீமதி சரஸ்வதி மணிசேகரன்: 'கலையரங்கம்'னு ஒரு மாசப் பத்திரிகையிலே ஆசிரியராக இருந்தாங்க.

க. ப.: உறவிலே கல்யாணமா?

ச. ம.: அவரு தூரத்து உறவுதான்...உங்க கல்யாணத்தின்போது உங்க வீட்டுக்காரர் என்ன 'போஸ்ட்'டில் இருந்தார்?

க. ப.: எனக்குக் கல்யாணம் நடக்கிறபோது அவர் கும்பகோணத்திலே டெபுடி சூப்பரெண்டா வேலை பார்த்து வந்தார். கல்யாண விஷயமாப் பேச்சு வார்த்தை நடந்துக்கிட்டிருந்தது. என் உறவுக்காரங்க கும்பகோணம் போயிருந்தாங்க. ஆனால் அவரோ ஓர் இரட்டைக் கொலைக் கேஸ் விசாரணைக்காக வெளியூர் போயிட்டாரு. 'நேரமுந்தூர் கொலைக் கேஸ்'னு பரபரப்பாய்ச் செய்தியெல்லாம் வந்ததே, அதன் விசாரணைக்காகத் தான் போயிருந்தாராம்.

ச. ம.: ஆமாம், கொலை, கொள்ளை கேஸ்னு விசாரணைக்கு அவர் அடிக்கடி போகிறப்போ உங்களுக்குக் கவலையாக இருக்குமே...?

க. ப. (சிரித்துக்கொண்டே): மிரட்டல் கடிதாசுங்ககூட வீட்டுக்கு வரும். பெரியவங்க ஆசியாலே எல்லாமே நல்லபடியாத் தான் நடந்துக்கிட்டு வருது.

ச. ம.: இப்படிப் பயங்கரமான கேஸுக்குப்போய் வந்ததை யெல்லாம் உங்ககிட்டே சொல்றதுண்டா?

க. ப.: போலீஸ் அதிகாரிங்கிறதையே அவர் வீட்டில் காண்பிச்சுக்க மாட்டார். யூனிபாரம் போட்டுக்கிட்டார்னு அடியோடு மாறிவிடுவார். அப்போ நாங்க அவருகிட்டே பேசவே பயப்படுவோம். ஆபீஸ் ரூம் பக்கமே போக மாட்டோம்! 'டூட்டி'க்குப் போய் வீடு திரும்பி, போலீஸ் உடுப்பைக் கழற்றி விட்டு மிக சாதாரண உடையோடு சாந்தமா இருக்கச்சேதான், நானும் குழந்தைகளும் அவரோடு பேசப் போவோம்!...அது சரி, உங்களுக்கு எத்தனை குழந்தைகள்? அவர்கள் பேர் என்ன?

(இந்தக் கட்டத்தில் திரு பொன். பரமகுருவும், கோவி. மணிசேகரனும் உரையாடல் நிகழும் அறைக்குள் பிரவேசிக்கிறார்கள். "நீங்க பேசறதை நாங்களும் கேட்கலாமா?" என வினவியபடியே.)

ச. ம.: மூத்த பிள்ளைக்கு 'அம்பிகா பதி'ங்கற பேரை வச்சுட்டாரு. 'கல்கி'யை மானசீகக் குருவா வணங்கி வர்றதால் அவருடைய சிவகாமியின் சபதத்தில் வரும் மாமல்லரை இரண்டாவது பிள்ளைக்கும், குமுதத்தில் 'மயிலிறகு' தொடர்கதை எழுதும்போது பிறந்த பெண்ணுக்குப் 'பிலிவலா'ன்னு தொடர்கதையில் வருகிற கதாநாயகியின் பெயரையும் வச்சிருக்காங்க. சமயபுரம் மாரியம்மனைத் தவிர வேறு எந்தச் சாமியையும் கும்பிட மாட்டார். அதனால் ஒரு பெண்ணுக்குச் சமயபுரின்னு பேரு. இன்னும் மூன்று பெண்ணுங்களுக்கும் காரணத்தோடேயே பெயர் வச்சாங்க...

உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?

க. ப.: இரண்டு பிள்ளைகள், இரண்டு பெண்கள். எங்கள் குழந்தைகளுக்குப் பெயர் வச்சதுக்குப் பின்னணியா பெரிய விளக்கமே சொல்லணும்... சுருக்கமாச் சொல்லிடறேன். என் கணவர் பெரியவங்க சொன்ன சொல்லை மீறவே மாட்டாரு. அவங்க தந்தை தவத்திரு பொன்னையா சுவாமிகள். இல்லறத்தில் நல்லறம் கண்டு துறவறம் பூண்டவர். அவர் சொன்னதெல்லாம் குடும்பத்திலே பலிக்கக் கிட்டு வருகிறது. இரண்டு பிள்ளை, இரண்டு பெண்கள்தான் பிறக்கும்னு அவங்க அடக்கமாறதுக்கு முன்னாலே சொல்லிவிட்டாங்க. அப்படித்தான் குழந்தைகள் பிறந்தாங்க... பத்ராசலத்திலே இருக்கறப்போ மூத்த பிள்ளை வயிற்றிலே வளர்ந்தான். தாத்தா பெயரோடு ராமன் பெயரும் சேர்த்துப் 'பொன்னுராம்' என்று பெயர் வைச்சிருக்காங்க... பௌர்ணமியிலே பிறந்த பெண்ணுக்குக் 'கலா' என்ற பெயருடன் என் மாமியாரின் பெயரில் உள்ள கோமதியில் உள்ள 'மதி'யையும் சேர்த்து 'கலாமதி' எனப் பேர் சூட்டினோம்... மூன்றாவது முத்துக்குமார், நாலாவது மீனாகுமாரி...இவங்களும் காரணத்தோடேயே பேர் வெச்சிருக்காங்க!...

ச. ம.: உங்களுக்கு ஏற்பட்ட மறக்க முடியாத அனுபவம் என்ன?

க. ப.: கல்யாணம் ஆனதுக்கப்புறம் பத்ராசலம் போயிருந்தோம். அங்கே மாற்றலாகியிருந்தது. பத்ராசலத்திலேயிருந்து ராஜமகேந்திரபுரம் வரையிலும் கோதாவரியில் படகு வீடு வாசம், இரண்டு மாதம்!... காஷ்மீரில் இருக்கிற படகு வீடுகள் மாதிரி கோதாவரியிலும் உண்டு. ஒரு படகில் வேலைக்காரங்க, சமையல் சாமான்கள். இன்னொரு படகில் நாங்க மட்டும்...

கரையோரமாக ஒவ்வொரு ஸ்டேஷனாகப் போய்ப் பார்த்துவிட்டு வருவார். அந்தப் பெரிய நதியிலேயே வாசம் பண்ணினோம். இரண்டு பக்கமும் மலைங்க... அடர்ந்த மரம் செடிகள். பார்க்க ரம்மியமா யிருக்கும். படகு வீட்டிலே இருக்கிற மாதிரியே தோணுது. பொழுது போக நிறைய நாவல்களையும் எடுத்துப் போனேன். அதுவும் கல்கியின் சரித்திர நாவல்கள்னு எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கும்... என்னைக் கேட்டீங்களே, உங்க அநுபவத்தைச் சொல்லலியே...?

ச. ம.: எங்க வீட்டுக்காரர் முதலில் பரம நாஸ்திகர். சாமி படத்தையே பார்க்க மாட்டார்! தி. மு. க.விலே ரொம்பத் தீவிரமா யிருந்தார். கோயிலுக்கே போக மாட்டார். எதிலும் நம்பிக்கை கிடையாது. அரசியல் தான் அதிகமா யிருந்தது.... இரண்டு குழந்தைகள் பிறந்து விட்டன.... திடீர்னு கண் தெரியாமல் போயிட்டுது. என்னென்ன வெல்லாமோ வைத்தியம் பார்த்தும் குணமாகல்லே. ஒரு நாள் திருத்தணி போயிருந்த போது சமயபுரம் மாரியம்மனை வேண்டி, 'நீ சக்தி உள்ளவளாக இருந்தால் என் கண்ணைக் கொடு!...' என ஒரு பெரிய விரதமும் அன்னிக்கு எடுத்துக்கிட்டாரு .... பெரிய வேண்டுதலையும் செய்துக்கிட்டாரு. திருத்தணியில் ஒரு விசேஷத்துக்குப் போய், ஒரு வீட்டில் தங்கி யிருந்தோம். அன்றைக்கு இரவு படுத்து மறுநாள் காலையில் எழுந்த போது கண் பார்வை வந்து விட்டது! அதிலிருந்து சமயபுரம் மாரியம்மனிடம் ரொம்ப பக்தி ஏற்பட்டு விட்டது! அதனால் வெள்ளிக்கிழமை தோறும் மௌன விரதம் வச்சிருக்காரு... அன்றைக்கு முழுதும் யாரோடும் பேசமாட்டாரு... எழுதித்தான் பதில் சொல்வார், — கேட்டதற்கெல்லாம்.

க. ப.: எத்தனை புத்தகங்கள் எழுதியிருக்கிறார்? பரிசுகள் வந்திருக்கா?

ச. ம.: எழுபத்தைந்து சரித்திர நாவல்களும், இருபத்தைந்து சமூக நாவல்களும்.... எழுநூறு எண்ணூறு சிறுகதைகளும் எழுதியிருக்கார். சாதாரண ஆண்டின் சிறந்த கதை என்று கல்கியில் பரிசும், சரித்திரத் தொடர்கதைப் போட்டியிலே 'தினமணி கதி'ரில் முதல் பரிசும் வாங்கியிருக்கிறார்....

உங்க வீட்டுக்காரருக்கும் பெரிய விருது வந்திருக்கணுமே?

க. ப. பாண்டிச்சேரியில் ஐ. ஜி.யாக இருந்தபோது ஜனாதிபதியின் மெடல் கிடைத்தது. அப்போது ஒரு பாராட்டுக் கூட்டம் கூட அவருக்கு நடந்தது. இருபதாயிரம் பேர் கூடிய பெரிய கூட்டம். பொதுமக்கள் மாலை மாலையாகப் போட்டு மலையாகக் குவிச்சுட்


திரு பொன் பரமகுரு


திரு கோவி. மணிசேகரன்

டாங்க!...உங்க கணவர் கதையோ, நாவலோ எழுதறப்போ எப்படி இருப்பாங்க?

ச. ம.: கதை எழுத ஆரம்பிச்சுட்டா யாரும் தொந்தரவு கொடுக்கக் கூடாது. குழந்தை அழுதால் ருத்ரமூர்த்தியாக மாறி விடுவார்! சில சமயம் ராத்திரியிலே எழுத ஆரம்பிக்கிறபோது சின்னக் குழந்தை 'அப்பா'ன்னு கூப்பிட்டுப் போகும். அப்போ பார்க்கணுமே... பூனைக் குட்டியின் காதைப் பிடிச்சுத் தூக்கிறாப்போல் குழந்தையைப் பிடிச்சுத் தூக்கிப் படுக்கையிலே எறிவார்! அவ்வளவு கோபம் வந்துவிடும். குழந்தைக்காகப் பரிஞ்சு பேசினால் ''நான் பத்தாம் நூற்றாண்டிலே இப்போ இருந்துக்கிட்டிருக்கேன். இருபதாம் நூற்றாண்டை எனக்கு ஞாபகப்படுத்தாதே'' அப்படின்னு அதட்டல் போடுவார். அப்புறம் 'கப்சிப்'னு ஆயிடுவோம்!

க. ப. (சிரித்தபடியே): ஆமாம்... கதா நாயகர்களைப் பற்றி புஜபல பராக்கிரம சாலின்னு எழுதற எழுத்தாளர்கள் சிலர், நிஜத் தோற்றத்தில் வேறாக இருக்காங்களே!

ச. ம.: சரியாச் சொன்னீங்க! எங்க வீட்டுக்காரர் அப்படித்தான். உடம்பைப் பற்றிக் கொஞ்சமும் கவலையே படறதில்லே. வேளா வேளைக்குச் சாப்பிடறதேயில்லே! இலக்கியக் கூட்டம்னு வெளியே போனால் நடு நிசிக்கு வந்து கதவைத் தட்டுவார்... கற்பனை உலகத்தில்தான் வீரமெல்லாம்... நிஜ வாழ்க்கையிலே அவரு ரொம்பப் பயந்த சுபாவம்! (புன் சிரிப்புடன் தம் கணவர் பக்கம் பார்க்கிறார்.)

('ஆமாம். அல்சேஷியன் நாயைக் கண்டால்கூட எனக்கும் பயம்தான்!' என்று சிரித்துக்கொண்டே கூறுகிறார், கோவி மணிசேகரன்.)

க. ப.: உங்க வீட்டுக்காரர் எழுதியிருக்கிற கதைகள், நாவல்களை யெல்லாம் படிச்சிருக்கீங்களா?

ச. ம.: உண்மையைச் சொல்றேன்! முழுக்கப் படிச்சதே இல்லே! பாதிக்கு மேல் படிச்சிருக்கேன்......எங்கே? வீட்டு வேலே, குழந்தைங்களைக் கவனிக்கவே நேரம் சரியாய்ப் போயிடறது...

க. ப.: எந்த நாவலே எழுத அதிக காலம் செலவு செய்திருப்பார்?

ச. ம.: 'சேரன் குலக்கொடி'தான் எழுதின நாவல்களில் பெரிசு. எண்ணூறு பக்கம். ஒன்னரை வருஷம் ஆச்சு, அதை எழுதி முடிக்க....

உங்க வீட்டுக்காரருக்கு மகான்களிடம் ரொம்ப பக்தி உண்டுன்னு எங்க வீட்டுக்காரர் சொன்னாங்க. அதைப் பற்றிச் சொல்லுங்களேன்.

க. ப.: ஆமாம். ஆன்மீகத்திலே ரொம்பப் பற்று உண்டு. பெரிய துறவிகளிடம் பக்தி வெச்சிருக்காரு.

தென்னூர்க்காட்டிலே இருந்தப்போ, திருக்கோயிலூர் ஞானானந்த சுவாமிகளிடம் தொடர்பு கொண்டாங்க. அவர்கிட்டே ரொம்ப ஈடுபாடு. மாசம் ஒரு தடவை அவரைத் தரிசிக்காமல் இருக்க மாட்டார். ஞானானந்தருக்கு நூற்றறுபது வயது ஆகிவிட்டதாம். பக்தர்களுக்கு ஏற்படும் சோதனைகளை அவர் தீர்த்து விடுகிறார். அவருக்காக, அரும்பாக்கத்தில் (சென்னைக்கு அடுத்த ஊர்) வசிப்பதற்கேற்பக் கட்டடம் ஒன்று கட்டிவருகிறார்.

(இன்னும் சற்று நேரம் எழுத்தாளர் மனைவி போலீஸ் அதிகாரி மனைவியிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டு விடைபெறுகிறார்.)

[உரையாடல் தொகுப்பு: ஏ. சுவாமிநாதன்]

# வட்ட மேஜை

சென்ற வாரம் திருவண்ணாமலைக்கு அருகில் உள்ள ஒரு கிராமவாசி இங்குள்ள ஸ்டேட் பாங்கில் ஆயிரம் ரூபாய் பணம் கட்டி டிராப்ட் வாங்குவதற்குச் சென்றார். அவர் கொடுத்த நோட்டுக்களில் ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்கள் கள்ள நோட்டுகள் என்பதால் போலீசில் ஒப்படைக்கப்பட்டார்.

போலீசாரிடம் அந்த நபர், தாம் ஒரு மண்டி வியாபாரியிடம் புரோ நோட் எழுதிக் கொடுத்துக் கடனுகப் பணம் வாங்கி வந்ததாகக் கூறவே, சி. சுப்பிரமணியம் என்கிற அந்த மண்டி வியாபாரியையும் போலீசார் கைது செய்தார்கள்.

அதைத் தொடர்ந்து போலீசார் ஒரு தி.மு.க. கவுன்சிலர் உட்படப் பலரைக் கைது செய்துள்ளார்கள்.

இதனால் நகரத்தில் பெரிய பரபரப்பும் கிலியும் ஏற்பட்டுள்ளன. நகை வியாபாரி, ஹோட்டல் முதலாளி இப்படிப் பலரை அழைத்துப் போய் விசாரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதன் காரணமாக நல்ல நூறு ரூபாய் நோட்டைக்கூட யாரும் வாங்கப் பயப்படுகிறார்கள். பாங்குகளில் கொண்டு போய்ச் சில்லறை மாற்றுவதற்கும் பொதுமக்கள் பயப்படுகிறார்கள்.

கள்ள நோட்டு பிடிப்பதற்கு முன்னால் மண்டித் தெருவில் கிச்சிலி நெல் மூட்டை அறுபது ரூபாயாக இருந்தது. இப்பொழுது ஐம்பத்தைந்து ரூபாய்க்குக் கேட்பாரில்லே.

இந்த நேரத்தில் சர்க்கார் கள்ள நோட்டுக்கும் நல்ல நோட்டுக்கும் உள்ள வித்தியாசத்தை விளக்கிச் சொல்லிவிட்டால் பொது மக்கள் நல்ல நோட்டு எது, கள்ள நோட்டு எது என்று கண்டுகொள்ள முடியும்.

சர்க்கார் இதை உடனடியாகச் செய்ய முன்வர வேண்டும். இல்லாவிட்டால் நாட்டில் பொருளாதாரச்சீர்குலைவுதான் ஏற்படும்.

திருவண்ணாமலை
28–12–71 கே. வி. ராமதுரை

ஜனவரி 2ல் கல்கி இதழில் பிலாசபி வகுப்பு கிடையாதென்றால் ஒரு மணி நேரம் தூக்கம் போய் விட்டது என்று ஒரு மாணவர் வருந்துவதாக ஒரு சிரிப்பு இருந்தது. பிலாசபி வகுப்பில் மட்டும் ஒரு மணி நேரம் மாணவர்கள் தூங்குகிறார்கள்; மற்ற வகுப்புக்களில் மாணவர்கள் கண்ணில் விளக்கெண்ணெய் போட்டா கவனிக்கிறார்கள்? பிலாசபி அப்படியொன்றும் போர் அடிக்கிற விஷயம் அல்ல.

சென்னை–4
31–12–71 இரா. கோபாலகிருட்டிணன்

# அன்னத்தின் மென்னழகு மின்னிடும் உங்கள் முகத்தில்...

SKYLARK

...மென்துகிலாய் பொலியும் போலிமி புடவைகள், ஜார்ஜெட்டுகள், நைலான்கள் - சாதாரண மற்றும் பிரிண்டுகள் - போலிமி புடவைகள் – பெண்மைக்கழிக்கும் சீர் வரிசைகள், மதிமயக்கும் உடுப்புத் துணிகள் - ஆண்களுக்கும் பெண்களுக்கும் போலிமியின் கைவரிசை.



**தி பாம்பே. ஸில்க் மில்ஸ் லிட்.,**

இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய்–12.

மெஸர்ஸ் G. I. மிர்பூரி, 137, பீமசேன கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4
மெஸர்ஸ் ரமண்லால் D. ஷா, மெஜட்டி பிரஹ்லாத ராய் பில்டிங், இரண்டாவது மாடி
11-25, 15, கொத்தபேட், விஜயவாடா - 1
மெஸர்ஸ் குலாப் K. ஷா, (மெஸர்ஸ் அனந்தலக்ஷ்மி ஏஜன்ஸீஸ்)
53, மார்க்கெட் தெரு, குகை, சேலம் - 6
மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை - 1
மெஸர்ஸ் யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், தேவராஜ மார்க்கெட், சிக்பெட், பெங்களூர்-2A
சர்வோதயா கார்ப்பொரேஷன், 12, கைலாஸ் மார்க்கெட், செகந்திராபாத் - 3

# கை கொடுத்த மண்டபம்!

கோமதி சுவாமிநாதன்

வெங்கடேசன் தம் பெண் கல்யாணத்தை நிச்சயம் செய்து விட்டார். ஜாதகக் கட்டுக்களைக் கையில் வைத்துக் கொண்டு ஊர் ஊராக அலைந்து வரன்களைச் சலித்துப் பார்த்துப் பொறுக்கினார் என்று சொல்லிவிடவும் முடியாது. அதற்காக 'ஆண்டவன் விட்ட வழி விட்டும். என் பெண் பாமாவுக்கு என்று ஒருவன் பிறக்காமலா இருப்பான்' என்று வேதாந்தம் பேசிச் சும்மா இருந்தார் என்று சொல்லி விடவும் முடியாது. அவ்வப்போது முயற்சிகள் செய்து கொண்டிருந்தார். நண்பர்களிடமும் சொல்லி வைத்திருந்தார். இந்த வகையில்தான் பசுபதியைப் பற்றிய தகவல் அவருக்குக் கிடைத்தது.

பசுபதி சென்னையிலேயே ஒரு தனியார் நிறுவனத்தில் பணியாற்றி வந்தான். தனிக் கட்டை என்ற முறையில் எழும்பூர்ப் பகுதியில் ஒன்றிரண்டு நண்பர்களுடன் ஓர் அறையில் வசித்து வந்தான். ஹோட்டல் சாப்பாடு.



ஒரு ஞாயிற்றுக் கிழமை யன்று பசுபதியை நேரில் பார்த்து ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்ள வெங்கடேசன் கிளம்பினார். எதிர்பாராத வகையில் பசுபதி மாத்திரம் அறையில் இருந்தான். நண்பர்கள் வெளியே போய் விட்டிருந்தார்கள்.

எடுத்த எடுப்பிலேயே வெங்கடேசனுக்குப் பசுபதியைப் பிடித்து விட்டது. பையன் பார்வைக்கு நன்றாக இருந்தான். தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு வெங்கடேசன் தாம் வந்த விஷயத்தையும் சொன்னார். பசுபதியின் பெற்றோர்களைச் சந்திக்க ஆவலாக இருப்பது பற்றியும் சொன்னார்.

''கல்யாணம் பண்ணிக் கொள்வது நான் சார்! என் தீர்மானம்தான் முடிவானது'' என்று அலட்சியமாக அவன் பேசியது வெங்கடேசனுக்கு என்னமோபோல் இருந்தது. ''ஏன் சார்! உங்க பெண் எப்படி இருப்பாள்?'' என்று அவன் அடுத்தாற்போல் கேட்டவிதமும் அவரால் அவ்வளவு ரசிக்கக் கூடியதாக இல்லை. ஆனாலும் பொறுமையுடன், ''என் பெண்ணைப் பற்றி நானே சொல்வது உங்களுக்கு மிகையாகத் தோன்றும். நீங்கள் வந்து பாருங்கள். உங்களுக்குத் திருப்தியாக இருந்தால் நான் உங்கள் வீட்டுப் பெரியவர்களுடன் மற்ற விஷயங்களைப் பேசிக் கொள்கிறேன்'' என்று விடாப்பிடியாகச் சொன்னார்.

பசுபதி ஒப்புக் கொண்டான். அவன் தகப்பனார் மதுரை மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் இருந்தார். தாயார் இல்லை. ஒரே அக்கா, திருவாரூரில் கணவன் வீட்டில் இருந்தாள். பசுபதியை வளர்த்தவளே அந்த அக்கா அலமேலுதானாம். லௌகிக விஷயங்களை அவளிடமே பேசிக் கொள்ளலாம் என்று பசுபதி தெரிவித்தான்.

வெங்கடேசனுக்கு உள்ளூற மகிழ்ச்சி. பிக்கல் பிடுங்கல் இல்லாத குடும்பமாக அமையுமே பாமாவுக்கு என்று ஆனந்தம். பசுபதியை அந்த வாரத்திலேயே ஒரு நாள் தம் வீட்டுக்கு வர ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பினார்.

குறிப்பிட்ட நாளில் பசுபதி தன் அறை நண்பன் ஒருவனுடன் வெங்கடேசன் வீட்டுக்கு வந்தான். சம்பிரதாயமாகப் பெண் பார்த்தான். நாசூக்காகவே சில கேள்விகள் கேட்டான். பிறகு திருப்தி என்று தெரிவித்தான். தன் சகோதரியைப் போய்ப் பார்த்தாலே போதும் என்று பசுபதி அழுத்திச் சொன்னான். ஆனால் வெங்கடேசன் விடவில்லை. ''உங்கள் தகப்பனாரைப் போய் முதலில் பார்ப்பதுதான் முறை. நாளை ஒரு பேச்சுக்கு இடம் கொடுக்கக் கூடாது. அவரைப் பார்த்துவிட்டு அப்புறம் உங்கள் சகோதரியைச் சந்திக்கிறேன். நிச்சயதார்த்தத்தை இந்த மாதத்தில் வைத்துக் கொள்ள

விரும்புகிறேன்'' என்று அழுத்திச் சொன்ன பிறகுதான் பகபதி அந்த இரண்டு விலாசங்களையும் கொடுத்தான்.

அடுத்த வாரத்திலேயே வெங்கடேசன் ஒரு நாட் காலை மதுரை ரயில் சந்திப்பில் இறங்கினார். பஸ் பிடித்துப் பகபதியின் தந்தை சபேசன் இருந்த கிராமத்துக்குப் போய் அவர் வீட்டையும் கண்டுபிடித்து விட்டார்.

இந்தச் சந்திப்பு வெங்கடேசனுக்கு அவ்வளவு தெம்பளிப்பதாக இல்லை. சபேசன் சற்று சிடுமூஞ்சியாக இருந்தார். ''இதோ, பாரும், ஐயா! நான் அவன் தயவிலே வாழலே! எனக்குப் பென்ஷன் வருகிறது. அவனை அவன் அக்கா செல்லம் கொடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டாள். அவள் சொன்னபடிதான் ஆடுவான். அவன் கல்யாணம் பண்ணிக் கொண்டாலும் சரி, காஷாயம் கட்டிக் கொண்டாலும் சரி, எனக்குக் கவலையில்லை. பேரன் பேத்தி பிறந்து சீராட்ட வேண்டும் என்ற ஆசையும் இல்லை. ஒரு வேளை உம் பெண் அதிருஷ்டத்திலே இந்தக் கல்யாணம் நடந்தால் என் பெயரை அழைப்பிதழில் போட வேண்டிய நிர்ப்பந்தம் உமக்கு ஏற்படும். அதற்காக நான் முகூர்த்தத்துக்குத் தலையைக் காட்டிவிட்டு அடுத்த ரயிலில் திரும்பி விடுவேன்'' என்று சபேசன் நிர்த்தாட்சண்யமாகப் பேசினார்.

''பாவம்! அப்பா பிள்ளை இடையே அவ்வளவு சுமுகமான உறவு இல்லைபோல் இருக்கு! கிழவனார் பிள்ளைகூட வந்து தங்கித் தொண தொணக்கமாட்டார்'' என்று தம் மனத்தைச் சமாதானப்படுத்திக்கொண்டார். மதுரை திரும்பித் திருவாரூக்கு ரயில் ஏறினார் வெங்கடேசன்.

அக்கா அலமேலு சிரித்த முகத்துடன் வெங்கடேசனை வரவேற்றாள். காப்பி டிபன் உபசாரம் செய்தாள். அதன் பிறகு கல்யாணப் பேச்சு ஆரம்பமானவுடன் பிடி கொடுக்காமல் கெத்தாகப் பேசினாள். இடை இடையே, தம்பி பகபதிக்கு, தஞ்சாவூர் பக்கத்திலிருந்தும் திருச்சிராப் பள்ளிப் பக்கத்திலிருந்தும் தாராளமாகப் பணத்தை வாரி வீசும் சக்தியுள்ள சம்பந்தங்கள் வந்ததாகவும் தனக்குத் திருப்தியில்லை என்ற காரணத்தால் நிராகரித்து விட்டதாகவும், பகபதியின் அழகுக்கும் திறமைக்கும், எந்த லட்சாதிபதி வீட்டுப் பெண் கொடுத்து வைத்திருக்கிறதோ என்றும் சொல்லி வெங்கடேசனைப் பயமுறுத்தினாள்.

இந்தச் சவுடாலை வெங்கடேசன் புரிந்து கொண்டார். ஆகவே, நேரடியாக, ''இதோ பாருங்கள், அம்மா! பையனுக்குப் பெண் பிடித்து விட்டது. என்னால் செய்யக் கூடியதைச் சொல்லி விட்டேன். நீங்கள் சரி என்றால் கல்யாணம் நடக்கும். இல்லையானால் எனக்கு வேறு மாப்பிள்ளை கிடைப்பான்'' என்று சொல்லி எழுந்து விட்டார். அதற்கப்புறம்தான் அலமேலு பேரம் செய்ய ஆரம்பித்தாள். பத்து சதவிகிதத்துக்கு விட்டுக் கொடுத்துவிட்டு வெங்கடேசன் புறப்பட்டார். நிச்சயதார்த்தத் தேதி, முகூர்த்தத் தேதி எல்லாவற்றையும்கூட உறுதிப்படுத்தியாயிற்று.

நிச்சயதார்த்தத்துக்குச் சென்னைக்கு அலமேலு மாத்திரம்தான் வந்திருந்தாள். அவள் கணவனுக்கு லீவு கிடைக்கவில்லையாம். பகபதி கூட நண்பர்கள் யாரும் வரவில்லை. அவன் ஒருவன்தான். பேசிய பணத்தையெல்லாம் அன்றைக்கே கொடுத்துவிட வேண்டும் என்று ஆரம்பித்தாள் அலமேலு. வெங்கடேசன் திடுக்கிட்டார். ''அது எங்க வழக்கமும் இல்லை. முடியவும் முடியாது. என்னுடைய பிக்ஸட் டிபாசிட் பணம் முகூர்த்த நாளைக்கு ஒரு வாரம் முன்னாலேதான் கிடைக்கும்!

## கல்யாணக் கதை-1





இப்போ நூற்றி ஒரு ரூபாய்தான் தட்டில் வைக்கப் போகிறேன்'' என்றார் வெங்கடேசன். அலமேலு ஆயிரத்து ஒன்றிலிருந்து இறங்க மறுத்தாள். அப்புறம் பசுபதியே குறுக்கிட்டு அதை ஐந்நூற்றி ஒன்றாக ஆக்கினான். நிச்சயதார்த்தம் முடிந்தது. இருவரும் கிளம்பத் தயாரானார்கள்.

பசுபதி அப்போது வெங்கடேசன் அருகே வந்தான். ''சார்! புவனேசுவரி கல்யாண மண்டபத்தையே ஏற்பாடு பண்ணிடுங்கோ. எனக்குச் சிநேகிதர்கள் அதிகம். அந்த இடம் 'டீலண்ட்டாக' இருக்கும்'' என்றான். வெங்கடேசன் சரி என்று விடைகொடுத்தார்.

புவனேசுவரி கல்யாண மண்டபம் நகரில் ஒரு நடுத்தரமான கல்யாண மண்டபம்தான். ஓஹோ என்று வாடகை வசூலிக்கும் அமர்க்கள மண்டபங்களில் சேர்ந்ததல்ல. வெங்கடேசன் பல தடவைகள் அந்த மண்டபத்துக்குப் போயிருக்கிறார். மண்டப வாடகை மற்றும் மின்சாரச் செலவுகள் அறுநூறு ரூபாய் வரையில்தான் ஆகும். வேறு ஏதாவது ஆடம்பரமான இடத்தைச் சொல்லாமல்விட்டாரே மாப்பிள்ளை 'டெலிகேட்' என்று மகிழ்ச்சியடைந்தார்.

ஆனால் மறுநாட் காலை அவர் புவனேசுவரி கல்யாண மண்டபத்தில் போய் விசாரித்த போது அவருக்கு ஏமாற்றமே காத்திருந்தது. அந்த மண்டபத்தைத் தொடர்ந்து ஐந்தாறு முகூர்த்தங்களுக்கு யார் யாரோ பணம் கட்டி ஏற்பாடு செய்திருந்தனர். இன்னும் மூன்று மாத காலத்துக்கு மண்டபம் கிடைக்காது.

வெங்கடேசன் அன்று மாலையே பசுபதியைப் போய்ப் பார்த்து நிலைமையை விளக்கினார். பசுபதிக்குப் பிடித்த வேறு கல்யாண மண்டபத்தைக் குறிப்பிடும்படி வேண்டினார்.

பசுபதி அலட்சியமாக வழக்கம்போல் சிரித்தான். ''சார்! நீங்கள் இந்தக் கல்யாணத்தையே கான்ஸல் பண்ணிவிடலாம்! எனக்கு ஆட்சேபணை இல்லை! ஆனால் நான் விருப்பத்தைச் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தவாறு ரத்து செய்யும் நபர் இல்லை! என் கல்யாணம் புவனேசுவரி கல்யாண மண்டபத்தில்தான் நடக்க வேண்டும். அந்த மண்டபம் எப்போது கிடைக்குமோ, அப்போது இந்தத் திருமணத்தை வைத்துக் கொள்ளலாம். இதை உறுதிப்படுத்திக் கொள்ள நீங்கள் பேசிய தொகை முழுவதையும், நாம் முதலில் நிர்மானித்த முகூர்த்த நாளுக்கு முன்னதாகக் கொடுத்தால் நல்லது. நானும் சாதாரண மனிதன்தான்! அதைவிட ஒரு நல்ல இடம் வந்தால் என் மனம் மாறிவிடாது என்பது என்ன நிச்சயம்?'' என்று வியாபார ரீதியில் பசுபதி ஆரம்பித்தான்.

வெங்கடேசன் ஆத்திரத்தை வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு புன்னகை என்ற கவசத்தை மாட்டிக் கொண்டார். ''மிஸ்டர், பசுபதி! நான் குறிப்பிட்ட முகூர்த்தத்திலேயே புவனேசுவரி கல்யாண மண்டபத்திலேயே என் பெண் பாமா கல்யாணம் நடக்கும்'' என்று ஓங்கிச் சொல்லி விட்டுக் கிளம்பினார். அந்த வார்த்தைகள் நூற்றுக்கு நூறு பலிக்கும் என்று அப்போது அவர் எதிர்பார்க்கவில்லை. ஆனால் பசுபதியிடம் பேசிக் கொண்டிருக்கும்போதே ஒரு திட்டம் பற்றி யோசிக்க ஆரம்பித்திருந்தார். குறிப்பிட்ட நாளில் புவனேசுவரி கல்யாண மண்டபத்தை ஏற்பாடு செய்திருந்தவர்கள் காலில் விழுந்து, அதிக செலவானாலும் தாம் அதை ஏற்றுக் கொண்டு வேறு கல்யாண மண்டபத்தை அவர்களுக்கு அமர்த்திக் கொடுத்துவிடுவது; புவனேசுவரி மண்டபத்தைத் தாம் உபயோகப்படுத்திக் கொள்வது என்பதுதான் அந்தத் திட்டம்.

அன்றைய முகூர்த்தத்துக்குப் புவனேசுவரி மண்டபத்தை ஏற்பாடு செய்திருந்த ரங்கசாமி கோடம்பாக்கத்தில் இருந்தார். அந்த விலாசமும் கிடைத்தது. வெங்கடேசன் அவரைச் சந்திக்கக் கிளம்பினார்.

ரங்கசாமி இனிய சுபாவம் உள்ளவர். அவரைச் சந்தித்த பிறகுதான், அவர் கூடத் தம் மனைவி வகையில் தூரத்து உறவினர் என்று தெரிந்து கொண்டார். ரங்கசாமியின் மூத்த பையன் வேணு கல்லூரி ஒன்றில் உதவிப் பேராசிரியராக இருந்தான். பெண் கல்யாணத்தை நடத்திவிட்டுப் பையனுக்குப் பெண் பார்க்கத் திட்டமிட்டிருந்தார்.

''வெங்கடேசன்! சில பையன்கள் இந்தக் காலத்தில் இப்படித்தான் அர்த்தமில்லாமல் பிடிவாதம் பிடிக்கிறார்கள். உன் பெண் கல்யாணத்தையும், என் பெண் கல்யாணத்துடனேயே சேர்த்து நடத்த நான் சம்மதம் கொடுத்து விடுவேன். வாடகையைச் சமமாகக்கூடப் பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் இடம் சிறிது. இரண்டு சம்பந்தி வீட்டார் தங்க முடியாது. மேலும், ஓர் இடத்தை அமர்த்திவிட்டு, அதை வேறு இடத்துக்கு மாற்றுவதும் என் மனத்துக்கு அவ்வளவு திருப்தியாக இல்லை. நீ வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக் கூடாது'' என்றார் ரங்கசாமி.

இந்தச் சம்பாஷணையை வேணுவின் நண்பன் பாஸ்கரன் கவனித்துக் கொண்டிருந்தான். வெங்கடேசன் பார்த்திருக்கும் பையனைப் பற்றிப் பாஸ்கரன் முழு விவரமும் கேட்டுத் தெரிந்து கொண்டான். பிறகு வேணுவைத் தனியாக மாடிக்கு அழைத்துப் போய்ச் சில நிமிஷங்கள் ஏதோ சொன்னான். கீழே இறங்கி வந்த வேணு தன் தந்தை ரங்கசாமியைச் சமையலறைப் பக்கம் அழைத்துப் போய்ச் சில நிமிஷங்கள் ஏதோ பேசினான். மீண்டும் ரங்கசாமி கூடத்திலிருந்த வெங்கடேசன் பக்கம் வந்தபோது அவர் முகத்தில் சுரத்து இல்லை.

''வெங்கடேசா! ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணு என்று அந்த நாட்களில் சொல்லுவார்கள்! இப்போது நான் உன்னிடம் ஓர் உண்மையைச் சொல்லியாக வேண்டும். நீ அந்நியனாக இருந்தால் இதை உன்னிடம் சொல்லாமல் தவிர்த்திருப்பேன். ஆனால் நம் உறவு வகை தெரிந்த பிறகு எனக்குத் தெரிந்த – இப்போதுதான் தெரிந்த விஷயத்தைச் சொல்லாமலிருக்க முடியவில்லை'' என்று தொடங்கினார் ரங்கசாமி.

ஒரு மணி நேரம் கழித்து வெங்கடேசன் கிளம்பியபோது புதிய மனிதராகக் கிளம்பினார். உற்சாகம் மனத்தில் நிறைந்திருந்தது.

அன்று மாலையே ரங்கசாமி வீட்டார் வெங்கடேசன் வீட்டுக்கு வந்தார்கள். வேணு

சம்பிரதாயமாகப் பாமாவைப் பார்த்தான். ரங்கசாமிக்குத் தம் வீட்டு இரண்டு கல்யாணங்களும் ஒரே முகூர்த்தத்தில் நடப்பது பற்றித் திருப்தி.

மறுநாள் பசுபதியைச் சந்தித்தார் வெங்கடேசன். சந்தோஷமாகப் பேசினார். ''மிஸ்டர் பசுபதி! புவனேசுவரி கல்யாண மண்டபமே ஏற்பாடு செய்தாகிவிட்டது. ஒரு சின்ன விஷயம்! நான் கொடுத்த ஐந்நூற்று ஒரு ரூபாய் உங்களிடம் இருக்கிறதல்லவா? அதைக் கொடுத்தீர்களானால் நான் உங்களுக்குக் கொடுக்க ஒப்புக் கொண்ட முழுத் தொகைக்கும் இப்போதே செக் கொடுத்து விடுவேன்! எனக்கு வரவேண்டிய பணம் செக்காக வந்துவிட்டது. உங்களுக்கு 'என்டார்ஸ்' பண்ணி விடுகிறேன்'' என்றார்.

பசுபதி ஒரு கணம் திகைத்தான். ''பணமெல்லாம் பிரஸ்டீஜுக்காகச் செலவழிந்துவிட்டது! நீங்க செக்கைக் கொடுங்க! நான் மாற்றி மீதியை உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன்'' என்றான் நிதானமாக.

வெங்கடேசன் போட்ட திட்டம் பலிக்கவில்லை. கொடுத்த பணம் திரும்பாது என்று தெரிந்து கொண்டு விட்டார்.

''பசுபதி! நீங்கள் செக் மாற்ற வேண்டாம்! நான் மாப்பிள்ளையையே மாற்றிவிட்டேன்! எனக்கு ஐந்நூற்றி ஒரு ரூபாய் நஷ்டமானாலும் பரவாயில்லை. ஆனால் ஓர் அயோக்கியன் மாப்பிள்ளையாக வரவில்லை என்று சந்தோஷப்படுகிறேன். நீ இப்படி ஐந்தாறு இடங்களில் நிச்சயதார்த்தம் செய்து, கிடைக்காத கல்யாண மண்டபங்களைக் குறிப்பிட்டு, பிறகு வேறு இடத்தில் உனக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டதாகப் பெண் வீட்டார்களிடம் சொல்லி வாங்கின பணத்தைச் 'சுவாகா' பண்ணியிருக்கிறாய். இதை ஒரு தொழிலாக நீ வைத்துக் கொண்டிருக்கிறாய். இதற்கு உன் அக்கா அலமேலு உடந்தை. இது பிடிக்காமல்தான் உன் தந்தை ஒதுங்கி விட்டார்! நல்ல மனிதர்! நீ இதோடு தொலை! ஏதாவது வாலை ஆட்டினால் உன் பழைய கேஸ்களை எல்லாம் சேகரித்துப் போலீசுக்குப் போவேன்'' என்று எச்சரித்துவிட்டுக் கிளம்பினார்.

புவனேசுவரி கல்யாண மண்டபத்திலேயே குறிப்பிட்ட கல்யாண முகூர்த்தத்தில் பாமா-வேணு திருமணம் நடந்தது. சரியான நேரத்தில் யதேச்சையாக, பசுபதி பற்றித் தகவல் கொடுத்த பாஸ்கரனை விசேஷமாகக் கவனித்தார் வெங்கடேசன்!

''எனக்குப் பேத்தி பிறந்தால் அவளுக்குப் புவனேசுவரி என்றுதான் பெயர் வைப்பேன். அந்த மண்டபத்துக்காக அலைந்தபோதுதான் ஓர் அயோக்கியனிடமிருந்து ரங்கசாமி என்னைத் தப்புவித்தார்'' என்று வெங்கடேசன் தம் நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவருக்கு இன்னும் பேத்தி பிறக்கவில்லை. இரண்டு பேரப் பிள்ளைகளை அவ்வப்போது கோடம்பாக்கம் போய்க் கொஞ்சி வருகிறார்.

(இக் கதையில் வரும் சம்பவங்கள் முற்றிலும் உண்மை. பெயர்கள் மட்டுமே மாற்றப்பட்டுள்ளன.)

சென்னை

மிட்லண்ட் (ஏர் கண்டிஷண்ட்)

பிராட்வே

ராக்ஸி

மற்றும் தென்னாடெங்கும்



ரங்க ராட்டினம்

சௌகார் ஜானகி

அளிக்கும்

S.J. பிலிம்ஸ்

டைரக்ஷன்: கிருஷ்ணன் பஞ்சு

ELEGANT



# கல் மழை

கல்பனா

நிகழ்ச்சிகள் எல்லாம் முடிந்து, தலைமை உரையைப் பூமழையாய், கிண்கிணி நாதமாய் ஹால் முழுக்க உதிர்த்துக் கொட்டிவிட்டு, மாலை மரியாதைகளை ஒன்று பாக்கியில்லாமல் வாங்கிக் குவித்துக் கொண்டு கிளம்பும்போது மணி பதினொன்றரை ஆகிவிட்டது.

''மிகப் பிரமாதமாகப் பேசி விட்டீர்கள். இவ்வளவு அழகாக உங்களுக்குப் பேசத் தெரியும் என்று நாங்கள் நினைக்கவே இல்லை'' என்று ஸ்தாபனத்தின் தலைவியும் மற்றவர்களும் ஒருமுகமாகப் பாராட்டிக் கொண்டே வந்து வாசலில் வழி அனுப்புகிறார்கள்.

மேடையில் அவளுக்கு இட்ட பெரிய ரோஜா மாலையைப் பயபக்தியுடன், பெரிய பூமாலை மாதிரி மடித்துக் கொண்டு வந்து, முன் ஸீட்டில் வைக்கிறார்கள்.

திருப்தியும் மகிழ்ச்சியும், வெற்றிப் பெருமிதமும் மனத்தில் நிறைந்து வழிய, இளநகையுடன், 'டாடா' சொல்லி விட்டுத் தன் பச்சை நிற ஹெரால்டைக் கிளப்புகிறாள் இந்து.

கேட்டுக்கு வெளியே வந்ததும் ஆகாசத்தின் துல்லியம் தெரிகிறது. கரிய வானப் பட்டில் நட்சத்திரப் புட்டாக்கள் ஜாஜ்வல்யமாக ஜ்வலித்துக் கொண்டிருக்கின்றன. ஊர் அடங்கிவிட்டது. கடை முன் பலகைகளிலே வரிசையாக முடங்கிக் கிடக்கின்றன — பகல் முழுதும் உழைத்த உழைப்பாளர் இனம்.

மேலே, சின்னக் கண்ணாடியில் ரமேஷின் முகம் தெரிகிறது; சிரிக்கிறது. 'என்ன இந்து, கோபமா — நான் உன் நிகழ்ச்சிக்கு வரவில்லையே என்று? உம்....' என்று சிரிக்கிறது.

'க்கும்.... நீங்கள் ஒன்றும் என்னிடம் பேச வேண்டாம். போங்கள்!' என்று நிஷ்டூரமாக முகத்தை, பார்வையைத் திருப்புகிறாள் இந்து. 'என்மீது உண்மையான அன்பு இருந்தால், வராமல் இருந்திருப்பீர்களா ?'

' கோபித்துக் கொள்ளாதே, இந்து டார்லிங்.....'

' என்னை அவர்கள் இன்று எவ்வளவு கொண்டாடினார்கள் தெரியுமா? எனக்கு இன்று மூன்று பெரிய வெற்றிகள், ரமேஷ்.

' அப்பாவாவது வந்திருக்கலாம். ஆனால் அம்மா போனதிலிருந்து அப்பாவுக்கு எதிலுமே பிடிப்பு இல்லை. கிளப் என்று ஒன்று இருக்கிறதோ, பிழைத்திருக்கிறாரோ ?

'விமலா வந்திருக்கலாம். ஆனால் அவள் வந்து என்ன பண்ணுவது?'

புறப்படும்போது விமலா சொன்னது காதில் ஒலிக்கிறது :

''எனக்கு இப்பவே உங்ககூடப் பறந்து வந்து, உங்க நிகழ்ச்சி முழுவதையும் பார்க்கணும்னு மனசு துடிக்கிறது, அக்கா ! ஆனால் 'எதையுமே பார்க்க உனக்கு யோக்கியதை கிடையாதும்மா.' என்கிறமாதிரி ஸ்வாமி என் பார்வையைப் பிடுங்கிக் கொண்டு விட்டாரே.''

''ஆனால் நான் அந்த ஸ்வாமியைப் போல் அத்தனை கிராதகி அல்ல. நானே உனக்குக் கண்களாக என்னையே கொடுத்திருக்கிறேனே'' என்றாள் இந்து.

''அந்த ஆறுதலினால்தான், அக்கா, இப்போது உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். உங்கள் மூலமாகத்தான் உலகத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறேன்.''

''உன் அருமையையும், பெருமையையும் நன்றாக உணர்கிற வேறு இரு புருஷக் கண்கள் வருகிற வரையில் நான் உனக்குக் கண்ணாக இருப்பேன்.''

''போங்கள், அக்கா ! இந்தக் குருடியையாவது, ஒருவர் வந்து ஏற்றுக் கொள்கிறதாவது ? எனக்கு அந்த மாதிரி நம்பிக்கையும் கிடையாது; ஆசையும் கிடையாது. எதற்கு இந்த உபயோகமற்ற பேச்சு ? — நீங்கள் திரும்பி வந்ததும் அங்கே நடந்ததையெல்லாம் ஒன்றுவிடாமல் வர்ணிக்க வேண்டும்.''

''ஓ — ஷ்யூர், ஷ்யூர், வரட்டுமா விமல் ?''

''போயிட்டு வாங்கோ அக்கா— ஜெயத்தோடு வாங்க.''

அப்பாவி ஏழைப் பெண்! நாளைக்கே ரமேஷிடம் சொல்லி, இவளுக்கு ஏதாவது வழி செய்தாக வேண்டும். அவர் கட்டாயம் செய்வார்.




'நம்ப விமல், ரமேஷ். நீங்கள் எத்தனையோ தடவை, எங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம், எங்கள் அவுட் ஹவுஸில் அவளைப் பார்த்திருக்கிறீர்களே, ஞாபகமில்லே? என் தூரத்து அக்கா ஒருத்தியின் பெண் விமல், ரமேஷ்? நான் உயிருக்கு உயிராக நேசிக்கிற விமல்.... அவளுக்குத் தான் சொல்கிறேன்.'

சாலைகள் வெறிச்சோடிக் கிடக்கின்றன.

எபனேசர் தெருவில் திரும்பி நேராகப் போனால் வீட்டுக்குப் போய்விடலாம். ஆனால் அப்பாவைப் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது. சட்டி வந்திருக்கிற வெற்றிகளையெல்லாம் அவர் முன்னால் கொட்டி, அவருடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் போலிருக்கிறது.

இடப் பக்கம் திரும்பி, ரேஸ் கோர்ஸ்ஸைச் சுற்றிக் கொண்டு போகையில், ஜில் என்ற காற்று, முன் நெற்றியில், எல்லா இழைகளையும் கொண்டு வந்து கவிழ்க்கிறது. 'அட, போக்கிரி' என்று அதைச் செல்லமாகக் கடிந்து கொண்டு, கையால் அவற்றை ஒதுக்கிக் கொள்கிறாள் இந்து — இதோ அப்பாவின் கிளப் வந்துவிட்டது.....

ஜன்னல்களில் வெளிச்சம் தெரிகிறது. மெல்லிய இசையும், 'டிக்—டிக்' என்று மேஜைப் பந்தின் நர்த்தன ஒலியும் கலந்து வருகின்றன. ஓ, அதோ, அப்பாவே, வாசல் புறத்தில், தோட்டத்தில், ஒரு செடியருகில் நிற்கிறாரே!

ஓசைப்படாமல் வண்டியை நிறுத்திவிட்டு, அவர்கள் தனக்கிட்ட அதே ரோஜா மாலையுடன், அவள், அவர் அருகில் செல்லும்போது, அவரே, ''இந்துக் கண்ணு—'' என்று ஆர்வமும் பரபரப்புமாக அவளை நோக்கி விரைந்து வருகிறார்.

மாலையை அவர் கழுத்திலிட்டு, சட்டென்று குனிந்து நமஸ்கரித்து, ''அப்பா! என்னை ஆசிர்வாதம் பண்ணுங்கோ, அப்பா. இன்றைக்கு மூன்று பெரிய வெற்றிகள் கிடைத்திருக்கின்றன, அப்பா எனக்கு'' என்கிறாள் இந்து.

மங்கிய வெளிச்சம்தான் இருக்கிறது, அங்கே. அருகிலும் யாரும் இல்லே. நட்சத்திர ஒளியில் அடங்கிய சுடராக நிற்கும் பெண்ணின் கையை ஆர்வத்துடன் பிடித்துக்கொள்கிறார் தந்தை. ''மகராஜியா இரு அம்மா; தீர்க்காயுசா இரும்மா'' என்று ஆசிர்வதிக்கிறார்.

''பிரமாதமாகப் பேசினயாமே, அம்மா. நம்ப சபேசன் சித்தே முந்தி வந்து சொன்னான்'' என்கிறார்.

''அது ஒரு வெற்றியே இல்லே அப்பா! அதைவிடப் பெரியதாக இரண்டு வெற்றிகள் என்னைத் தேடி இன்று வந்திருக்கின்றன, அப்பா! — அப்பா, சமாசாரம் தெரியுமா, உங்களுக்கு? 'மகிழ மலர்' சிறுகதைப் போட்டியில், என் கதைக்குத்தான் முதல் பரிசு அளித்திருக்கிறார்கள், அப்பா!''

"அப்படியா?" என்று குதூகலமாகக் கேட்கிறார் தந்தை.

"அப்புறம், வியன்னா எக்ஸிபிஷனுக்கு அனுப்பிச்சேனே, என் ஓவியம் ஒன்று. அதுவும் முதல் பரிசைத் தட்டிக் கொண்டு வந்திருக்கிறது, அப்பா."

"ஓ... கங்ராஜுலேஷன்ஸ்... கங்ராஜுலேஷன்ஸ்" என்று சிறு குழந்தை மாதிரி ஆர்ப்பரிக்கிறார் அப்பா. நட்சத்திர வெளிச்சத்தில் அவர் முன் வழுக்கை பளபளக்கிறது.

"ஏன் அப்பா, வெறும் கங்ராஜுலேஷன்ஸ் மட்டும்தானா?"

"வேறே என்னம்மா, வேண்டும்?" என்கிறார் அப்பா. புரியாமல் விழிக்கிறார்.

"இதைவிடப் பெரிய வெற்றி ஒன்றை உங்களிடம் யாசித்துக்கொண்டு நான் ரொம்ப நாட்களாகக் காத்துக் கொண்டிருக்கிறேன், அப்பா."

"ஓ.... அதுவா?" என்று துயரச் சிரிப்பு சிரிக்கிறார் அப்பா. பக்கத்துச் செடியிலிருந்து ஓர் இலையைக் கிள்ளி முகர்ந்து பார்க்கிற மாதிரி திரும்பிக் கொள்கிறார்.

"என்னப்பா, பதிலையே காணோம்?"

"நான் அதைக் கொடுத்தால, அது உன் வெற்றியாக இராதோ என்று பயமாக இருக்கிறது அம்மா" என்கிறார் தந்தை நடுங்கும் குரலில். 'அவனைப் பற்றி யாருமே இதுவரையில் நல்லதாக ஒரு வார்த்தை சொல்லவில்லை, அம்மா' என்று மனசுக்குள் புலம்பிக் கொள்கிறார்.

"ஆதாரமற்ற பயம், அப்பா" என்கிறாள் இந்து வேதனையுடன். முகத்தின் மகிழ்ச்சி எல்லாம் விநாடிப்போதில் குறைந்துவிட்டன. இருள் வந்து கவிழ்ந்துவிட்டது — சோகப் படலமாய்!

"ஆதாரமற்ற பயமாகவே அது போய்விட வேண்டும் என்றுதான் நானும் ஆசைப்படுகிறேன், அம்மா!" என்கிறார் தந்தை.

"ஈசுவரன்தான் அப்பா, உங்கள் பயத்தைப் போக்க வேண்டும்" என்று கண்களைத் துடைத்துக் கொள்கிறாள் இந்து. நீர் பொங்கிவிட்டது அதற்குள்.

"அப்படிப் போக்குகிற நாள் நம் வீட்டில் திருநாளாக ஆயிடும் அம்மா. நானே உன் ரமேஷைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு வந்து, உன் முன் நிறுத்தி, தாலியைக் கையில் கொடுத்து, 'கட்டுடா' என்று சொல்லிவிடுவேனே, அம்மா!" என்று அவள் கையை ஆதரவாகத் தடவிக் கொடுக்கிறார் தந்தை.

"அப்படி அந்த நாள் வருகிறபோது — நிச்சயமாய் வரத்தான் போகிறது அப்பா, — ஆனால் அன்றைக்கு, 'எத்தனை நல்லவர்களை எத்தனை நாட்கள் வீணாகச் சந்தேகித்து, பிரிக்க வைச்சோம்'னு நிச்சயமாக வருத்தப் படவும் போகிறீர்கள், அப்பா!" என்று நிஷ்டூரக் குரலில் சொல்லிவிட்டுக் கைகளை உருவிக் கொண்டு காரை நோக்கிப் போகிறாள் இந்து. கோபத்தில் நடையும் வேகமாக விழுகிறது.

பச்சை ஹெரால்ட் மிக ரோஷமாகக் கிளம்பிப் போகிறது — பாலாக வெளிச்சத்தை முன்னால் உமிழ்ந்து கொண்டு.

'ரமேஷ்... ரமேஷ்... நம் அன்பு, நம் சத்தியம், நம் பொறுமையெல்லாம் ஒரு நாள் நிச்சயமாக வெல்லும், ரமேஷ்' என்று மனத்தோடு புலம்பிக் கொண்டு போகிறாள், அதை ஓட்டிச் செல்கிறவள். 'இந்த அப்பாவை நாம் நம்முடைய தூய அன்பால், நடத்தையால், அசடாக்கிவிட வேண்டும், ரமேஷ். 'என் ரமேஷ் சத்தியசந்தன். ராமனைப் போன்ற உத்தமன் — இப்பவாவது உங்களுக்குத் தெரிஞ்சுதா அப்பா' என்று நான் ஒரு நாள் கேட்க வேண்டும், ரமேஷ் — அப்போது தான் என் நெஞ்சு ஆறும், ரமேஷ்.



'ஹனி, ரமேஷ் — டியர் ரமேஷ் — எவ்வளவு இனிமையானவன் !.....' — அடுத்த நிமிஷம் ரமேஷைப் பற்றிய இனிய நினைவுகள் வந்து மூடிக் கொண்டு விட்டன. அவன் இப்போது கூடவே உட்கார்ந்து கொண்டு வருவதாகப் பிரமை....

*    *    *

ஏழாவது கிராஸில் திரும்பி, 'சர்ர்' என்று வீட்டு வாசலில் காரை நிறுத்துகிறாள் இந்து.

இருளில் மூழ்கிக் கிடக்கிறது பங்களா, மதுரா பவனம். தென்னைகள் உயர உயரமாகத் தலை குனிந்து நிற்கின்றன, ஏதோ அவமானகரமான காரியம் நடந்துவிட்ட மாதிரி.

எங்கும் ஒரே நிசப்தமாக இருக்கிறது. காம்பவுண்டு ஓரத்தில் வேலிக் கொடியில் ஒரு சில் வண்டின் ஓசை துல்லியமாகக் கேட்கிறது.

அதோ தெரிகிறது, அவுட் ஹவுஸ் — வலப் பக்கத்தில். டென்னிஸ் கோர்ட்டுக்குப் பின்னால் பகலில் செக்கச் செவேர் என்று இருக்கிற அதன் கூரை ஓடுகள் எல்லாம் இரவின் சாம்பலை அள்ளிப் பூசிக் கொண்டு, ஆண்டிபூதி மாதிரி கண் சிமிட்டுகின்றன.

— விளக்குக்கூட எரிகிறதே !

— விமலா தூங்கவில்லையா, இன்னும் ? கதவு ஒருக்களித்திருக்கிறதே — தாத்தா எங்கே — விமலாவின் தாத்தா? கதை கிதை கேட்கப் போய்விட்டாரா ?

ஷெட்டில் காரை நிறுத்திவிட்டு, ரமேஷின் இன்ப நினைவுகளுக்கு 'குட்—பை' கொடுத்து ' என் தங்கராஜில்லியா? இனிமேல் நாளைக்கு' என்று செல்லமாய் மானசீகமாய்க் கன்னத்தில் தட்டி அனுப்பிவிட்டுத் திரும்பும்போது —

அவுட் ஹவுஸிலிருந்து, 'ம்மா... ம்ஹா!' என்று தாளாத் துயரத்தின் சரங்கள் அலை அலையாய் வருகின்றன. 'கடவுளே, விமலா குரல் மாதிரி இருக்கிறதே — நம்ம விமலா குரல் மாதிரி ?'

பதறிக் கொண்டு அவுட் ஹவுஸை நோக்கி ஓடுகிறாள் இந்து. தாழ்வாரத்தில் தாத்தாவின் கட்டை ஈஸிசேர் காலியாகக் கிடக்கிறது. ஓ, தாத்தா நிஜமாகவே கதை கேட்கப் போய்விட்டார். குருட்டுப் பேத்தியைத் தனியே விட்டுட்டு.—

'ம்ஹா... ம்ம்ம்ம்ம்மா, ம்ம்மா....' புழுவாய்த் துடிக்கிறது குரல் உள்ளே.

''விமல்... என் தங்க விமலா... ஓ, விமல்'' என்று அரற்றிக் கொண்டே ஒருக்களித்துக் கதவை எட்டித் திறந்து கொண்டு புயலாக உள்ளே பிரவேசிக்கிறாள் இந்து.

— கடவுளே இது என்ன கோரம் ?

கட்டிலில் எண் சாண் உடம்பையும் ஒரு சாணாகக் குறுக்கிக் கொண்டு, கைகளால் முகத்தைப் பொத்திக் கொண்டு, கேவிக் கொண்டு கிடக்கிறாள், விமலா. பாதாதி கேசம் பதறித் துடித்துக் கொண்டிருக்கிறது. உள்ளாடைகள் மட்டுமே இருக்கின்றன. அவையும் தோரணம் தோரணமாகக் கிழிந்து தொங்குகின்றன.

''விமலாக் கண்ணு — என்னம்மா, ஆச்சு?'' என்று தானும் பதறியவாறே அவளை அள்ளி மடியில் போட்டுக் கொண்டு முகத்தைத் திருப்புகிறாள், இந்து. மண்டையில் அடிபட்டு ரத்தம் வழிந்து கொண்டிருக்கிறது.

''அக்கா — அக்கா!'' என்று கதறி இந்துவின் கழுத்தைக் கட்டிக் கொள்கிறாள் விமலா. ''முதல்லே எனக்கு ஒரு புடவை எடுத்துக் குடுங்கோ அக்கா. எங்கே இருக்குன்னே தெரியலை அக்கா'' என்று கேவுகிறாள்.

பக்கத்திலேயே கிடக்கிறது ஒரு போர்வை. அதை எடுத்து அவள் மீது போர்த்திவிட்டு, ''எந்தப் பாவிடி, பண்ணினான், இப்படி?'' நாவும் உயிரும் துடிக்கக் கேட்கிறாள் இந்து.

''நான் வீணாகப் போய்விட்டேன், அக்கா. ஐயோ, வீணாகப் போய்விட்டேன்'' என்று கதறுகிறாள் விமலா.

''ஆங் — என்னமடி சொல்லறே?'' என்று நடுங்குகிறாள் இந்து.

''திடீரென்று ஒரு மனுஷ மிருகம் என் மேலே பாஞ்சு, என்னைக் குதறி எறிஞ்சுடுத்து அக்கா... நான் கதறக் கதற, போராடப் போராட, என் முகத்திலே ஓர் அறைவிட்டு, என்னை மூச்சுத் திணற வைச்சுட்டு....ஐயோ, அக்கா....'' என்று கேவுகிறாள் விமலா.

''யார், யார், அந்த மிருகம்?'' என்று துடிக்கிறாள் இந்து.

''எனக்கு எப்படித் தெரியும்? என்னாலே தான் பார்க்கமுடியாதே. சுவாமி என் இரண்டு கண்களையும் அவிச்சு வைச்சுட்டாரே!''

''குரல்கூடத் தெரியலையா? உறுமியிருக்குமே, மிரட்டியிருக்குமே?''

''வாயே திறக்கலையே அது? என் கையிலே கிடைச்சதெல்லாம் அதனுடைய 'டை'தான்; அந்த டையிலிருந்து உருவிக் கழன்று என் கைக்குள் விழுந்த இதுதான்.''

''என்னது, காட்டு, நன்றாய்?''

பரபரப்பாகக் கண்களைத் துடைத்துக் கொண்டு விமலாவின் கையைப் பார்க்கிறாள் இந்து. அங்கே பளபளக்கிறது, ஒரு 'டை-பின்' —தங்க டைப்பின்.

''ஓ, இது... இது... இது....'' குரலே அடைத்துப் போய்விட்டது, இந்துவுக்கு.

அது —

அவள், ரமேஷுக்கு இரண்டு வருஷத்துக்கு முன், ஒரு பிறந்த நாளின் போது, தன் அன்பளிப்பாக வாங்கிக் கொடுத்தது. 'இந்த இதயம்தானே என்னை சதா பூப் போலத் தாங்கிக் கொண்டிருக்கிறது? அதனாலே, அந்த ஹிருதயத்தின் மேலே என்றும் இலங்குவதற்காக, அதற்கு மகுடம் சூட்டுகிற மாதிரி இந்த டை பின்னை அணிவிக்கிறேன் ' என்றவாறே கொடுத்தது. ' ரமேஷ்! எப்பொழுதும் இதைப் பத்திரமாக வைத்துக் கொள்வாயா?'

'ஷ்யூர், டார்லிங்.... ஷ்யூர்.' —

''அக்கா, அக்கா! ஏன் பேசாமலேயே நிக்கறேள்?'' என்று விமலா கேட்பது காதிலேயே விழவில்லை. அண்ட பேரண்டங்களுமே தகர்ந்து தலையில் விழுந்துவிட்டாற்போல் இருக்கிறது. இடிந்து போய்ச் சிலையாய் நிற்கிறாள் இந்து. 'ஓ, ரமேஷ், யூ டர்டி டாக்! அக்லி ப்ரூட்.... கிரிமினல்....'

புயலாகத் திரும்பி, கார்ஷெட்டில் புகுந்து இடியாய் அதைக் கிளப்பி ... 'ஓ ரமேஷ்

பெரும்பாலான கட்டிடக் கலை நிபுணர்கள் சிபாரிசு செய்வது

# அரசு சிமெண்ட்

அதற்கு, மேலான மூன்று காரணங்கள்:

- பருவநிலை எப்படி இருந்தாலும், பெயிண்ட் உரிவதில்லை
- சிக்கனமாக உபயோகித்துச் சீராகக் கட்ட முடிகிறது
- கலவையில் அதிக மணல் ஏற்கிறது






தரத்தில் தலை சிறந்த அரசு உயர்ரக போர்ட்லண்ட் சிமெண்ட் இந்த அதிநவீன அற்புதக் கட்டிடத்தை வடிவமைத்த கட்டிடக் கலை நிபுணரின் உள்ளத்தில் முதலில் தோன்றியதற்கும், இவையே காரணங்கள். கட்டுமானங்கள் கட்டுறுதி குலையாமல் பல்லாண்டுகள் கட்டழகுடன் விளங்கச் செய்யும் சிமெண்ட் இது என்பதை அறிவார் அவர்.

விஷயம் அறிந்தவர்கள், தரமுயர்ந்த அரசு போர்ட்லண்ட் சிமெண்டையே உறுதியாக சிபாரிசு செய்கின்றனர். தமிழ்நாட்டில் அரசினர் துறையில் அமைந்த முதல் சிமெண்ட் ஆலையான தமிழ்நாடு சிமெண்ட்ஸ் உற்பத்தி செய்யும் இந்த சிமெண்டின் அருமையை உணர்ந்தவர்கள் அவர்கள். நாடு காக்கும் பணிகளுக்கும், நாட்டைக் கட்டி உருவாக்கும் காரியத்துக்கும் மிக அவசியமான இந்த சிமெண்ட் நான்கு லட்சம் டன் தயாரித்திடும் வகையில் உற்பத்தி முடுக்கிவிடப்பட்டிருக்கிறது.

## தமிழ்நாடு சிமெண்ட்ஸ்

(தமிழ்நாடு அரசுக்குச் சொந்தமான நிறுவனம்)

ஆலங்குளம், ராமநாதபுரம் மாவட்டம்.

## அரசு – வலிவும் வன்பும் வாய்ந்தது

AC-21R



# புகைப்படங்களில் பழமொழிகள்

**அசைபோட்டுத் தின்பது மாடு:**
**அசையாமல் விழுங்குவது வீடு!**

மேற்படி பழமொழியை விளக்குவதுபோல் ஒன்றுக்கொன்று தொடர்பான இரு புகைப்படங்களையோ அல்லது ஒரே புகைப்படத்தையோ எடுத்து அனுப்புங்கள். சிறந்த படம் அல்லது படங்களுக்குப் பரிசு ரூ. 50/= முடிவு தேதி: பிப்ரவரி 5ந் தேதி.

புகைப்படக் கலை நுணுக்கங்களில் கருத்துச் செலுத்தப்பட வேண்டும். படங்கள் தபால் கார்டு அளவினதாய் இருப்பது நலம். பரிசு பெறாவிடினும் பிரசுரமாகும் இதர படங்களுக்கும் வழக்கமான சன்மானம் உண்டு. உறையின் மேல் 'புகைப்படம் போட்டி' என்று குறிப்பிடவும். பிரசுரமாகாத புகைப்படங்களைத் திரும்பப் பெற விரும்புவோர் போதிய தபால் தலைகளுடன் கூடிய சுய விலாசமிட்ட உறையை உடன் அனுப்ப வேண்டும். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கடிதப் போக்குவரத்து கிடையாது.

நான் உன்னை விடமாட்டேன்... இலேசில்விட மாட்டேன்......'

ஆச்சரியமாக இருக்கிறது, ரமேஷுக்கு. 'என்னது இது? இந்துவா — இந்த அர்த்த ராத்திரியிலா?' என்று திரும்பத் திரும்பக் கேட்கிறான். இரவு உடையின் வாரைப் பிணைத்துக் கொண்டு, ஸ்லிப்பரில் கால்களை நுழைத்துக்கொண்டு அவசரமாகக் கீழிறங்கி வருகிறான்.

வாசலில் போர்டிகோவில் நிற்கிறது, இந்துவின் கார். அரை இருட்டில் நிற்கிறது. "ஓ, இந்து — என்ன அதிசயம்!" என்று அருகில் வருகிறான் ரமேஷ்.

மௌனமாக இடப் பக்கம் கதவைத் திறந்துவிடுகிறாள் இந்து. "உள்ளே வாங்கோ, ரமேஷ்!"

"என்ன இது, திடீரென்று வந்து?" என்ற வாறே வண்டியில் ஏறிக்கொள்கிறான் ரமேஷ். கலவரமும், அப்பாவித்தனமும் கலந்து பளபளக்கின்றன.

வாசலைக் கடந்து, கேட்டைக் கடந்து, வீதியைக் கடந்து, ஊருக்கு வெளியே போகிறது கார். பேசாமலே வருகிறாள் இந்து; அசுரத்தனமாகக் காரை ஓட்டிக் கொண்டு வருகிறாள்.

ஊர் பின்தங்கி விட்டது. தூரத்தில் சிப்பாய்கள் துப்பாக்கி சுட்டுப் பழகுவதற்கான ரைபிள் ரேஞ்ச் நெடு நெடு என்று நீளமாக, உயரமாக, நிற்பது, மங்கல் கவ ராகத் தெரிகிறது.

ஒரு பர்லாங் போய், வலப்புறம் சின்ன தார்ச் சாலையிலே திரும்பினால் ரைபிள் ரேஞ்ச்.

"என்ன இந்து, என் மேலே ஏதாவது கோபமா? பேசாமல் வருகிறாயே—" என்று ஆரம்பிக்கிறான் ரமேஷ். அரைக் கண்ணால் அவன் முகத்தை அளந்து பார்க்கிறாள் இந்து. சைட்பர்னும், சிலும்பிய மூன் ரோமமும், கள்ள விழிகளும், 'இவன் நல்லவன் இல்லை' என்று அறைகூவுகின்றன. 'நியாயம், தர்மம், பாப பயம் எல்லாத்தையும் விட்டவன்' என்கின்றன. மனம் கொதிக்கிறது, இந்துவுக்கு. ஆத்திரம் பொங்குகிறது.

"நான் உன் ஆபீஸ் வருஷாந்திர நாடகத்துக்கு வரலையென்று கோபமா இந்து?"

முதல் தடவையாக, ஆறுல் அக்னி அஸ்திரமாக இந்துவின் வாயிலிருந்து வார்த்தைகள் வருகின்றன. காரை ஓட்டிக் கொண்டே இந்து சொல்கிறாள்: "உங்களுக்குத்தான் அதை விடப் பெரிய நாடகமே ஒன்று இருந்ததே, எங்கள் வீட்டில்."

" நாடகமா? என்ன இந்து சொல்கிறாய்?"

"ஆமாம்" என்று காரின் வேகத்தை அதிகரிக்கிறாள் இந்து. "சாதாரண நாடகமில்லை. நயவஞ்சக நாடகம், திட்டமிட்ட நாடகம். 'குருட்டுப் பெண்தானே? ஊமை மாதிரி போனால் சாட்சியமில்லாமலே ஆறையாடி விட்டு வந்துவிடலாம்' என்று பல நாட்கள் கணக்குப் போட்டுப் பார்த்துத் தீர்மானம் செய்து, நம்பிக் கொண்டிருக்கிற இன்னொருத்தியை, நாடகம்னு வேறு இடத்துக்குப் போக்குக் காட்டி அனுப்பிவிட்டு, துணிச்சலாகப் போய், வெறிப் புலியாய்ப் பாய்ந்து, அவள் கதறக் கதற, துடிக்கத் துடிக்க, ரத்தம் குடித்த துன்மார்க்க நாடகம் — என்ன புரியவில்லையா, ரமேஷ்?"

'ரமேஷ்' என்கிற போது அவன் கன்னத்தில் அறைந்த மாதிரி, காரில் எதையோ ஓர் அழுத்து அழுத்தி அதை ஓர் உறுமல் உறும வைக்கிறாள் இந்து.

சாலை மரங்களெல்லாம் வாயு வேகத்தில் பின் வாங்கி மறைகின்றன. வலப்புறம் ரைபிள் ரேஞ்ச் சண்டமாருதமாய் எதிரே வந்து கொண்டிருக்கிறது.

" நிஜமாகவே எனக்கு ஒன்றும் புரியவில்லை, இந்து!" என்று அப்பாவிக் குரலில்

கேட்டு ஸ்டியரிங்கில் உள்ள அவள் இடக்கை மீது தன் கையை வைக்கிறான் ரமேஷ்.

''உங்க அழுக்குக் கையை முதலில் எடுங்கள்'' என்று கர்ஜிக்கிறாள் இந்து. பதறிப் போய் வைத்த கையை விருட்டென்று எடுத்துக் கொள்கிறான் ரமேஷ்.

சடக்கென்று வண்டியை ரைபிள் ரேஞ்சுக்குப் போகிற குறுக்குச் சாலையில் திருப்புகிறாள் இந்து. ''புரியவில்லையா? அடடா, எப்படிப் புரியும்?'' என்று ஓர் எகத்தாளம் அவள் குரலிலிருந்து புறப்படுகிறது.

சட்டென்று வண்டி நிற்கிறது. ஸ்டியரிங்கில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு புலம்புகிறாள் இந்து. ''நான் உயிருக்குயிராய் நேசித்த பெண் அவள், ரமேஷ். 'அக்கா அக்கா' என்று என்னை அரித்து அன்பைப் பொழிந்த என் தூரத்து உறவுக்கார அக்கா பெண் ரமேஷ். 'நீ அக்கா இல்லையடி, அவளுக்கு — அம்மாடி, சின்னம்மா. எனக்கப்புறம் அம்மா மாதிரியேதான் இருந்து அவளைக் காப்பாத்தணும்' என்று அக்கா என் கையிலே ஒப்படைச்சுட்டுப் போன என் அடைக்கலப் பொருள் ரமேஷ், அவள்! 'வாழ்வே கிடையாதடி, இந்தத் துர்ப்பாக்கிய கபோதிக்கு' என்று அக்கா குமுறுகிற போதெல்லாம், 'நான் அளிப்பேன் அக்கா, அவளுக்கு வாழ்வு — என்கிட்டே இருப்பதையெல்லாம் அவளுக்கும் கொடுப்பேன் அக்கா' என்று வாக்குக் கொடுத்து அழைத்து வந்த சத்தியம் அவள், ரமேஷ். அழைத்து வந்து ஒரு மாதத்துக்குள் இப்படிப் பாழ்படுத்திவிட்டதே ஒரு மிருகம்'' என்று கேவிக் குமுறுகிறாள்.

பதில் சொல்லவே தெரியாமல், ஆனால் கபடப் புன்னகையுடன் விழித்துக் கொண்டிருக்கிறான் ரமேஷ். மலங்க மலங்க விழிக்கிறான். எப்படி, எதைச் சொல்லிச் சமாளிக்கலாம் என்று விழிக்கிறான்.

''என்னைக் கேட்டிருந்தால், நானே மனம் உவந்து கொடுத்திருப்பேனே, ரமேஷ்?''— என்று இமைரென்று தலையை உயர்த்தி நீர் மல்கும் கண்களுடன் கேட்கிறாள் இந்து. ''ஒரு சத்திரத்தில், ஒரு கோயிலில், ஒரு சந்நிதியில் ஆனந்தமாய் ஒப்படைத்திருப்பேனே.''

''பூ, அசட்டுப் பெண்ணே! என்ன சொல்றாய்?'' என்று கோபமாகக் கேட்கிறான் ரமேஷ். ஆத்திரம் அவன் முகத்தைச் சிவக்க வைக்கிறது.

சாவியைத் திருப்பி, கியரைத் தள்ளி, வண்டியைக் கிளப்புகிறாள் இந்து. எடுத்த எடுப்பிலேயே பிரமாத வேகத்துடன் கிளம்புகிறது வண்டி.

''என்ன சொல்கிறேனா? நீ செய்த பாபச் செயலுக்கு உரிய தண்டனையை அடைந்துதான் தீர வேண்டும் என்கிறேன்!'' எப்படி மாறிவிட்டது இந்துவின் குரல்? எத்தனை உறுதியும் கடுமையும் வந்துவிட்டன? ஓ, கண்களில்தான் எத்தனை கனல்?

''முன்காலத்தில் இந்த மாதிரி குற்றத்தைச் செய்தால் ஒரு பெண்ணுக்கு என்ன தண்டனை கொடுப்பார்கள், தெரியுமா?.... ஒரு குழியிலே அவனைத் தள்ளி, ஊர் முழுக்கச் சுற்றி நின்று கொண்டு, கல் மாரி பொழிந்து, அவனை அடித்தே கொன்றுவிடுவார்களாம்.''

''இந்து... ஏய்...'' என்று கூவுகிறான் ரமேஷ்.

''அதோ, உங்களுக்கும் எதிரே கல் மாரி வருகிறது, ரமேஷ் — பாருங்கள் அங்கே!'' என்று எதிரே முகத்தாலேயே சுட்டிக் காட்டுகிறாள் இந்து. ரமேஷ் திடுக்கிட்டு எதிரே பார்க்கிறான்.

திடுதிடுவென்று பேயாய், பூதமாய், மாமலையாய், எமனாய் வருகிறது ரைபிள் ரேஞ்சின் நெடுஞ் சுவர் — எதிரே.

''இப்போ அந்த ரைபிள் ரேஞ்சு சுவர் பொடிப் பொடியாய்த் தகர்ந்து உங்க மீது கல் மாரி பொழியப் போகிறது, ரமேஷ்.... தயாராக இருங்க...''

'' இந்து, ஓ, இந்து. என்ன செய்யறே?'' என்று பீதியில் கூவுகிறான் ரமேஷ். சுவரையும் இந்துவையும் மாறி மாறிப் பார்த்தபடி. அவன் உடம்பெல்லாம் பதறவே தொடங்கிவிட்டது.

வண்டி படுவேகமாகப் பாய்கிறது, மரண விளிம்பை நோக்கி.

''ஓ, இந்து. நிறுத்து. உடனே நிறுத்து!''

''மாட்டேன்'' என்கிற மாதிரி ஓர் அலறல் அலறிவிட்டு, இன்னும் வேகமாகப் பாய்கிறது வண்டி.

அடுத்த கணம் ஸ்டியரிங்கில் பாய்ந்து அதை அவளிடமிருந்து கைப்பற்றி அவன் ஒடிப்பதற்குள் — அவளைத் தள்ளிவிட்டுக் கால் பிரேக்கை, அவன் கால் தடுமாறித் தேடி, அழுத்துவதற்குள் —

பேரிடியாய் ஒரு சத்தம்; கண்களுக்குள் கோடி மின்னல்களின் கீற்றுக்கள். ரைபிள் ரேஞ்ச் நூறாயிரம் பெரும் பாறைகளாய்த் தகர்ந்து, தலைமீது கல் மழையாகப் பொழிந்துவிட்டாற்போல்.........

''இந்து... இந்து... ஐயோ... இந்து.....''

* * *

''டாக்டர், டாக்டர். நான் எங்கே இருக்கிறேன், டாக்டர்? நான் மட்டும் பிழைத்துக் கொண்டுவிட்டேனா டாக்டர்....? இந்த விபத்துக்குக் காரணம், அந்தப் பாவிக்குத் தண்டனை அளிக்க நான் தீர்மானித்ததுதான்..

'' ஓ, டாக்டர், என்ன சொல்கிறீர்கள்? இப்படியெல்லாம் நான் பேசக் கூடாதா? வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டுமா? பேசினால் எனக்கு மூளை பிசகிவிட்டது என்று எழுதிவிடுவீர்களா?.... என்னைக் காப்பாற்றப் பார்க்காதீர்கள், டாக்டர்.... சட்டத்திடமிருந்து காப்பாற்றப் பார்க்காதீர்கள், எமனிடமிருந்தும் காப்பாற்றப் பார்க்காதீர்கள்.......

''நான் இனி வாழ முடியாது டாக்டர்...' வாழ்ந்தால் எனக்கு நானே ஏற்படுத்திக் கொண்ட தண்டனையாக என் வாழ்வு ஆகிவிடும், டாக்டர்.... என்னைக் கொன்றுவிடுங்கள், டாக்டர்.... என்னை இப்போதே இந்த விநாடியே ஏதாவது இன்ஜெக்ஷன் கொடுத்துக் கொன்று விடுங்கள், டாக்டர்— கொன்று விடுங்கள், டாக்டர்......''

# இதோ, ஒரு தீமையற்ற தலைவலி மாத்திரை!



# அவேதன்®

**அற்புத 'எபெப்' அடங்கியது.**

(என்-அஸிடில்-பி-எமினோஃபினோல்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக்கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகாமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.





அவேதன்—அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.

SQUIBB® SARABHAI CHEMICALS

® இ. ஆர். ஸகிப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டடின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காரம்சந்த் பிரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi HPMA 37A/70 TAM



புஷ்பராணி - ராஜகோபால்

# அச்சாணி

நாடகம் என்றால் நகைச்சுவை நாடகம் தான் என்ற நிலையை மாற்றி ஒரு புதிய நல்ல திருப்பத்தை ஏற்படுத்தியிருக்கிறது 'அச்சாணி' ஆகவே, அச்சாணி எழுதிய காரைக்குடி நாராயணன், அதனை அளிக்கும் என்னெஸ்ஸென் தியேட்டர்ஸ் நடிகக் குழுவினரான மேஜர் சுந்தரராஜன் முதலியோர் நமது பாராட்டுக் குரியவர்களாகிறார்கள்.

சாதாரண நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவராக (சுந்தரராஜன்) அவர் மனைவி புனிதா (சசிகலா) தம்பி பதி (சிவகுமார்) தங்கை உமா (பானுமதி) ஆகியோர் அடங்கிய சிறு குடும்பம். தம்பி ஒரு மெக்கானிக்காக வேலை பார்க்கிறான். தங்கை ஆசிரியையாக வேலை பார்க்கிறாள். இருவரும் இரண்டாம் தேதி வந்ததும் அண்ணனிடம் சம்பளம் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் பிறகுதான் அவரவர் செலவுக்கு அண்ணனிடம் கேட்டுப் பெற்றுக்கொள்ள வேண்டும். அண்ணன் வாகவோ வரவுக்குள் செலவு செய்ய வேண்டும் என்ற கண்டிப்புக்காரர். அதுமட்டு மில்லை. எவ்வளவு நெருக்கடியான நிலை ஏற்பட்டாலும் 'கடன் வாங்கக் கூடாது' என்ற லட்சியம் கொண்டவர்.

இப்படிப்பட்ட குடும்பத்தில் தம்பி ஊதாரிச் செலவுகளுக்கு ஆட்படுவதும், தங்கை பெரிய அந்தஸ்தும் செல்வமும் படைத்த இளைஞனின் காதல் வலையில் சிக்கிக்கொள்வதுமாகக் கதை பின்னிக்கொண்டு போகிறது.

முக்கியமான கட்டங்களில் வசனங்கள் மிக உயர்ந்த தரத்தில் அமைந்துள்ளன. கதாபாத்திரங்களுடைய குணசித்திரங்களை வெளிப்படுத்தும் வகையில் வசனங்கள் ஒன்றையொன்று மிஞ்சி உயர்ந்து செல்வதைப் பார்க்கும்போது வசனகர்த்தாவைப் பாராட்டுவதா அங்கங்களைப்பேசும் மேஜர் சுந்தரராஜன், சசிகலா, பானுமதி ஆகியோரைப் பாராட்டுவதா என்ற திகைப்பு ஏற்படுகிறது.

மிகச் சிறந்த நடிகர் என்று பெயர் எடுத்து விட்ட மேஜர் சுந்தரராஜன், தம்பிக்கு அன்னம் ஊட்டிக் கொண்டே கண்டிப்புச் செய்யும் காட்சியில் மனித மனத்தின் மிக நுட்பமான இயல்புகளை நன்குணர்ந்தவர் என்பதைப் புலப்படுத்துகிறார். இப்படி ஒருசில நல்ல இடங்களை இந்த நாடகத்தில் காணலாம்.

இந்த மிக 'சீரிய'ஸான நாடகத்தில் தோட்டம் முதலாளி மகன் மயில்சாமியாக நடிக்கும் ராஜகோபாலனும் அவரது ஜோடி கல்யாணியாக நடிக்கும் புஷ்பராணியும் நல்ல நகைச்சுவை விருந்து படைக்கிறார்கள். 'கடனை



சிவகுமார், சசிகலா, மேஜர், பானுமதி

வாங்காதே, கடனைக் கொடுக்காதே!' என்று ஷேக்ஸ்பியர் கூறிய லட்சியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று உறுதியோடு வாழ்ந்த ஒரு கதாபாத்திரத்தை மத்தியதர குடும்பத்தில் கண்டுபிடிக்கிறார் நாடக ஆசிரியர். அந்தப் பாத்திரத்தை மேஜர் சுந்தரராஜன் ஏற்று அருமையாக வழங்குகிறார்.

நூறு படங்களுக்கு மேல் நடித்து மேலும் பல படங்களில் நடித்து வரும் மேஜர் சுந்தரராஜனைச் சென்னை நகர சபாக்கள் சென்ற 23ம் தேதி திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சபா மண்டபத்தில் அமைச்சர் திரு கே. ராஜாராம் தலைமையில் பொன்னாடை போர்த்தியும், வாழ்த்து மடல் வாசித்தளித்தும் பரிசுகள் வழங்கியும் கௌரவித்தார்கள். வாழ்க அவரது நாடகக் கலை! — வெங்கு


மூன்று மந்திரவாதிகள்
அசுவபாபாவின் நிபந்தனையை இளவரசன் ஏற்று, மறுநாள் குதிரைகளுடன் மேய்ச்சல் வெளிக்குப் போனதும்...
ஐயோ! இதென்ன? இவைகள் இப்படிச் சிதறி ஓடி மறைகின்றனவே. இவைகளை எங்கே போய்த் தேடி, எப்படி ஒன்று சேர்ப்பது? ஈசா...
கதை: வாண்டுமாமா சித்திரம்: ராஜி. 16


இளவரசனே, ஏன் இப்படி வருத்தமுடன் இருக்கிறாய்?
அசுவபாபாவின் நிபந்தனையில் தோற்றுப் போவேன். குதிரைகள் எங்கோ ஓடி விட்டன. என் நிலையை இனி நீ கழு மரத்தில் தான் காண வேண்டும்.


உன் தர்மம் உன் கூடத்திலேயே இருக்கும். கவலைப்படாதே. அந்த மரத்தடியில் படுத்து இளைப்பாறு. விரைவில் நான் உன்னை வந்து சந்திக்கிறேன்.


இளவரசே, விடிந்து விட்டது. எழுந்திரு. குதிரைகளை லாயத்தில் சேர்த்து விட்டேன். இனி நீ பாபாவிடம் தைரியமாகப் போகலாம்.


ஏன் எல்லோரும் லாயத்துக்குத் திரும்பி வந்தீர்கள்?
திரும்பி வராமல் என்ன செய்வது? நாலா திசைகளிலிருந்தும் ராட்சதமான பறவைகள் எங்களைக் கொத்தி விழிகளைப் பிடுங்க ஆரம்பித்து விட்டனவே, பட்சி ராஜனை ஒரு கழுகின் தலைமையில்...


புல் வெளிக்குப் போனதிலே தானா இந்த கதி? நாளைக்கு அடர்ந்த கானகத்திலுள் சிதறி ஓடி மறைந்து விடுங்கள், என்ன?


மறுநாளும் அதே போலக் குதிரைகள் ஆனந்தனுக்கு அடங்காமல் கானகத்தினுள் ஓடி மறைந்தன. சோர்ந்து போன ஆனந்தன் கண்ண யர்ந்தான்.
இளவரசே, எழுந்திருங்கள். குதிரைகளையெல்லாம் லாயத்தில் சேர்ப்பித்து விட்டேன்.


இன்றைக்கு என்ன கேடு உங்க ளுக்கு? ஏன் திரும்பி ஓடி வந்தீர்கள்?
கானகத்து வீரன் புலியின் தலைமையில் காட்டுமிருகங்க ளெல்லாம் எங்களைக் கொன்று கிழித்துப் போடத் துரத்தியதும் பயந்து, ஓடி வராமல் என்ன செய்வது?


நாளைக்கும் இப்படி ஏமாந்து போகாதீர்கள். புல் வெளிக்கோ கானகத் துக்கோ போக வேண்டாம். கடலுக்குள் போய்த் தலையை மட்டும் வெளியே வைத்துக் கொண்டு நீந்திக் கொண்டிருங்கள். தெரிந்ததா?


மூன்றாம் நாள் குதிரைகள் பாபாவின் கட்டளைப் படியே ஓடி மறைந்தன.
இளவரசே! ஏனிந்தச் சோகம்?
பாபாவின் குதிரைகள் கடலுக் குள் சென்று மூழ்கிவிட்டன. நாளைக்கு என் தலையை அசுவபாபா அடமானமாக எடுத்துக் கொள்ளுவான்.


இதற்காகவா இவ்வளவு கவலை? பாபாவின் குதிரைகள் மாயா ஜாலக் குதிரைகள். அவைகள் கடலில் மூழ்காது. கவலைப் படாதீர்கள், இதோ வருகிறேன்.


ஐயோ, அப்பா... அம்மா! எத்தனை தேனீக்கள், எத்தனை குளவிகள்? ஐயையோ! என்ன மாய்க் கொட்டின? அம்மம்மா! என்ன வலி? என்ன கடுப்பு? உயிர் போகிறதே...


இளவரசே, பாபாவின் குதிரை களை லாயத்துக்கு விரட்டி விட்டேன். இன்னொரு விஷய மும் கூட. அங்கு போனதும் பாபாவின் பார்வையில் படா தீர்கள். லாயத்தில் எங் காவது ஒளிந்து கொண்டி ருங்கள்.















ஆத்திரமடைந்த காளாமுகன் நீலவேணியை விரட்ட அது ஆனந்தன் முன் போய் நிற்கிறது. நீலவேணியின் பலம் போன போது காளாமுகனின் மதிப்பும் போய் விடுகிறது. ஆனந்தனின் வாள் வீச்சின் முன்னே அவன் தோல்வியடைகிறான். அவன் மரணம் மேகலாவின் கை விலங்கைத் துண்டாடுகிறது. பிரிந்தவர் கூடுகின்றனர். மனோக்கிய நகரமும் தோன்றுகிறது.

தொடரும்

## கர்வாரே நைலான் வலையின் வலு முயற்சிகளைத் திருவினையாக்குகிறது

கர்வாரே தயாரிப்பான நைலான் ட்வின் இந்திய மீனவர்களின் வாழ்வில் வளமான புரட்சியை ஏற்படுத்தியுள்ளது. கர்வாரே நைலான் மீன்வலைகளை உபயோகித்து அவர்கள் தம் முயற்சிகளின் முழுப் பயனையும் அடைந்து வருகின்றனர். இந்த நைலான் வலைகள் கொண்டுள்ள நலங்கள் நாடறிந்த சேதியாகும்.

- அவைகள் தண்ணீரால் இற்றுப் போவதில்லை
- விரைவில் உலரும் தன்மை பெற்றிருப்பதால் அடுத்தடுத்து அதிக பிடிபாடுகளுக்கு ஏற்றவை
- வழக்கமான ட்வின் மீன்வலைகளைவிட நீடித்த உழைப்பாற்றல் கொண்டவை
- அரிப்புகளிலிருந்து தடுப்பு சக்தி பெற்றவை
- மீனின் பார்வைக்குப் புலப்படாதவை
- அடிக்கடிச் செப்பனிட வேண்டிய நேரத்தையும் பணத்தையும் தவிர்க்கின்றன.




கர்வாரே நைலான்ஸ் லிட்.
சேனாபதி சேம்பர்ஸ்,
லான்டர்ஸ்ட் பிரிட்ஜ், பம்பாய்-7.

Vision-714 TM



"டாக்டர்! நல்லா உட்கார்ந்து எழுதினீங்க! நேத்து நீங்க மயக்கமா விழுந்ததிலிருந்து நாங்க எல்லாம் எப்படிக் கவலைப் பட்டுட்டு இருக்கோம்? இன்னும் ஒரு வாரம் நீங்க எழுந்திருக்கவே கூடாது. சேவை செய்யறது ரொம்ப உயர்ந்ததுதான். அதுக்காக உடம்பைக்கூடக்கவனிக்காமலா செய்யறது?"

என் அஸிஸ்டெண்ட் பேசிக் கொண்டே போகிறாள். அவள் பார்த்துவிடக் கூடாது என்று நான் எழுதுவதை மறைத்துக் கொள்கிறேன். அவள் நினைப்பது போல் இது ஆஸ்பத்திரி சம்பந்தமான கடிதப் போக்குவரத்து அல்ல. ஓர் அவசியமான சொந்தக் கடிதம். நேற்று விதியின் மூர்க்கமான ஒரு விளையாட்டினால் சந்திக்க நேரிட்ட தம்பதிகளுக்கு. அஸிஸ்டெண்ட் நகர்ந்தவுடன் கடிதத்தைத் தொடருகிறேன்.

"...கர்மயோகி என்றும், மனித சேவைக்குத் தன்னையே அர்ப்பணித்துவிட்ட தியாகி என்றும் ஏதேதோ என்னைப் பற்றிப் போன மாதம்கூட எழுதியிருந்தனவே பத்திரிகைகள், அதைப் படித்தவர்கள் எல்லாம் பிறக்கும் போதே, நைட்டிங்கேலாகத் தேச சேவை தான் மூச்சு என்று பிறந்து விட்டேன் என்று




# முடிவிலே ஒரு தொடக்கம்

வசுமதி ராமசுவாமி

நினைக்கிறார்கள். அதற்காகத்தான் இப்படி ஆரம்பிக்கிறேன்:

''ஒரு மென்மையான இரவில் தனிமையின் இன்பமான உணர்ச்சியோடு அவர் மடியில் தலை வைத்து அழகானதொரு கற்பனை செய்து கொண்டிருந்தேன். என் கற்பனையை வாய் விட்டுச் சொல்லிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவர் என் காதருகே குனிந்து கேட்டார்: '' நினைவோடுதான் பேசுகிறாயா? இல்லை, கனவில் ஒரு பகுதியா?'' என்று. நான் திருப்பிக் கேட்டேன்: ''நான் சொல்வதென்ன, கனவில்தான் நடக்கக் கூடியதா? நீங்கள் அமெரிக்கா சென்று வந்ததும், நாம் சேர்ந்து குடும்பம் நடத்தும்போது இதெல்லாம் நிச்சயம் நடக்கப் போகிறது.'' அவர் செல்லமாய்க் கன்னத்தைத் தட்டினார்.

''மருத்துவக் கல்லூரி மாணவிகளுக்குக் கற்பனை, காதல் ஒன்றும் கிடையாது என்று நினைத்தேன்'' என்றார். ''காதல் உண்டு. ஞானதிருஷ்டியும் உண்டு. இதெல்லாம் நடக்கத்தான் போகிறது'' என்றேன்.

அவர் பதில் சொல்லாமல் சிரித்தார்.

அந்தச் சிரிப்புக்கு அப்பொழுது அர்த்தம் புரியவில்லை. ரொம்ப நாட்களுக்குப் பின்னால் புரிந்தது. பயனில்லாதபோது புரிந்தது.

மேலே குறிப்பிட்ட இரவு என் திருமணம் நடந்த மூன்றும் நாள் இரவு. என் அப்பா என் திருமணத்தைப் பற்றி என்ன கனவு கண்டு வந்தாரோ தெரியாது. நிறைய ஆசைகள் இருந்திருக்கும். அவர் சாதாரணமாக எதையும் வெளியில் சொல்ல மாட்டார். ரொம்பச் சின்ன வயதில் என் அம்மா இறந்து விட்ட பிறகு, என்னைத் தனியாக நின்று ஆளாக்கியவர்.

**நா**ன் சங்கரைக் காதலித்தேன் என்பதை விடச் சங்கரால் காதலிக்கப்பட்டேன் என்று சொல்வதுதான் சரி. எப்படி நடந்தது என்று தெரியாமலே நிகழ்ந்து விட்டது. எங்கள் காதலில் அப்படி ஒன்றும் புதுமை இல்லை. எங்கேயோ சந்தித்தோம்; பழகினோம். நான் பிறவி எடுத்ததே இந்த மனிதனைச் சந்திக்கத்தான் என்று தோன்றியது. யுக யுகமாய்ப்

பழியதாய்த் தோன்றியது. சாதாரணமாக என்னவெல்லாம் உணர்ச்சிகள் பூக்குமோ எல்லாம் பூத்தன.

நான் அப்போது கடைசி வருடம் மருத்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். படிப்பை முடித்து விட்டு, விஷயத்தை அப்பாவிடம் சொல்லலாம் என்று தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தேன். எல்லாவற்றுக்கும் மேலாகப் பறைசாற்றத் துணிச்சல் இல்லை. கல்லூரித் தோழிகள் கூட அறியாத ரகசியம்.

ஒரு நாள் திடுதிப்பென்று தான் இன்னும் ஒரு மாதத்தில் அமெரிக்கா செல்லவிருப்பதைச் சொன்னார் சங்கர். அழகாகப் பேசினார். அதிலெல்லாம் மன்னர்தான். ''உன்னுடன் ஒரு கணம் வாழ்ந்தாலும் போதும். அந்த நினைவின் நிறைவிலேயே அமெரிக்காவில் சில மாதங்களைப் பிடித்துத் தள்ளிவிட்டு ஓடி வந்து விடுகிறேன்'' என்றார்.

நான் ஒன்றுமட்டும் தீர்மானமாகச் சொன்னேன். ''என்னைத் தொடுவதாக இருந்தால் முதலில் தாலி கட்டிவிட்டுத் தொடுங்கள்'' என்றேன்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை. பக்கத்துக் கிராமத்தில் கூட்டமில்லாத ஒரு கோவிலில் தாலியைக் கட்டினார். தெய்வம், சந்நிதானம் என்பதெல்லாம் இருக்கட்டும். கழுத்தில் புரண்ட சாதாரண மஞ்சள் கயிறு எனக்கு மிக மிகப் புனிதமாகப் பட்டது. என்னுடைய இந்தத் 'திருமணம்' நடந்து நாங்கள் வாழ்ந்த நாட்கள் எட்டு.

சங்கர் அமெரிக்கா சென்ற ஒரு மாதத்துக்குப் பின்னர், எல்லோருடைய முன்னிலையிலும் தாலி கட்டித் திருமணத்தைப் பிரகடனப் படுத்தவேண்டிய நிர்ப்பந்தத்தை உணர ஆரம்பித்தேன். வாயைத் திறந்து பேசும் மனித வர்க்கத்துச் சாட்சிகளே இல்லாமல், கர்ப்பக்கிருகத்தில் வீற்றிருக்கும் கல்லுக்கு முன்னால் கட்டின தாலியை உலகம் அவ்வளவாக நம்பாது என்று அப்போதுதான் புரிந்தது.

என்னுள்ளே வளர்ந்து வந்த உயிர், நியாயமாய் நான் பெருமை கொள்ள வேண்டிய ஜீவன்தான். இருந்தாலும் சமூகத்தின் நியாய மற்ற கண்ணோட்டம் என் கதையை ரசிக்காது என்று பயந்தேன்.

அடுத்த சிலமாதங்களில் நான் அனுபவித்த வேதனையை மீண்டும் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை. மேற்குக் கோடியில் ஓர் ஒதுக்குப்புறமான கிராமத்தில் அந்நியர்களின் ஆதரவில் என் சுமையை இறக்கினேன்.

பெண் குழந்தை. அழகாகத்தான் இருந்தது. எல்லாம் நேரே இருந்துவிட்டால் வெற்றித் திருப்பம் என்று எண்ணி விடுவேனே. விதி ஒரு மைக் கோட்டைத் தீற்றி வைத்தது. பிரஸவம் பார்த்த நர்ஸ் ஜோஸபீனுதான் சொன்னாள்: ''ஆண்டவனுக்கு மகள்மேல் என்ன கோபமோ தெரியவில்லையே!'' என்று.

எனக்குப் புரியவில்லை.

'' ஊமைக் குழந்தையைக் கொடுத்திட்டாரே, அதைச் சொல்கிறேன்'' என்றாள்.

நான் விக்கித்துப் போனேன்.

அந்த வறண்டுவிட்ட மன நிலையில் எனக்குப் பிரசவம் பார்த்த ஜோஸபீனுவின் அன்புதான் நீரூற்றாக இருந்தது. என்மேல் ஒரு தாய்ப் பாசம் அவளுக்கு எப்படி ஏற்பட்டது; ஒருசில நாட்கள் பழக்கத்திலேயே நான் எப்படி அவளை நம்பி என் குழந்தையை ஒப்படைத்தேன் என்பதெல்லாம் இன்று வரையில் எனக்குப் புரியவில்லை.

நான் மீண்டும் கல்லூரியில் சேர்ந்து படிப்பை முடித்தேன்.

இளம் வயதில் நம்பிக்கை வெட்ட வெட்டத் துளிர்த்துவிடும். இத்தனை அடிபட்டும் சங்கர் வந்து சேருவார் என்று தீர்மானமாக நம்பினேன். நம்பிக்கை தேய்ந்து, மறையும் சமயம் அமெரிக்கா சென்று மேற்படிப்புத் தொடர எனக்கு வாய்ப்புக் கிடைத்தது.

அமெரிக்காவில் சங்கர் 'குடி'யும் குடித்தனமுமாகச் சௌக்கியமாய் வாழ்ந்து கொண்டிருந்தார். இன்னும் ஒரு சுற்றுப் பருத்துச் சிவந்திருந்தார். எல்லா நம்பிக்கைகளும் கரைந்து மறைய, சருகுதலை மாதிரி திரும்பினேன்.

என் மனத்தில் புதியதொரு துணிச்சல் பிறந்தது. இந்தியாவில் இறங்கியதும் முதல் காரியமாக அந்த மேற்குக் கோடி கிராமத்துக்குப் பயணமானேன். என் குழந்தையை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து விடுவது; தனியாக நின்று அதை வளர்த்து ஆளாக்குவதுதான் என் திட்டம்.

மீண்டும் ஓர் அடி.

முன்பு இரண்டு வருடங்களுக்கு முன்னால் கிராமம் இருந்த இடத்தில் இப்போது பூதாகாரமாய் ஒரு தொழிற்சாலை அமைப்பு வேலை நடந்து கொண்டிருந்தது. அந்தச் சின்னஞ் சிறு ஆஸ்பத்திரியின் வாசலில் ''தொழிலாளர்கள் கூட்டுறவு காண்டீன்'' என்று சிவப்பு போர்டு தொங்கிக் கொண்டிருந்தது. வாசலில் நாலைந்து பேர் பீடி புகைத்துக்கொண்டிருந்தார்கள்.

ஊரைச் சல்லடையாய்ச் சலித்ததில் ஜோஸபீனு காலமாகி விட்டது தெரிந்தது. குழந்தை என்ன ஆனாள்?... என் வாழ்க்கையின் ஒரே நம்பிக்கையும் பொடித்துவிட்டதா?

நான் கடிதத்தை நிறுத்திவிட்டு நிமிர்ந்தேன். என் அறைக் கதவை மெதுவாகத் திறந்தபடி என் அஸிஸ்டெண்ட் வந்தாள்.

நான் அசுவாரசியமாகத் தலையைத் திருப்பி,

''போகச் சொல். யாரா யிருந்தாலும் என்னால் பார்க்க முடியாது!'' என்றேன்.

என் அஸிஸ்டெண்ட் வியப்புற்றிருப்பாள் என்று நினைக்கிறேன். அவள் முகத்தை நான் கவனிக்கவில்லை. எந்த மனநிலையிலும் விடாமல் தொண்டு செய்து வருகிறேன் என்று அவளுக்கு என்மீது மதிப்பு. அவளுக்கென்ன? எல்லோருக்குமேதான்.

இத்தனை நாள்வரை இல்லாத சந்தேகம் திடீரென்று முளைக்கிறது. 'தன்னலமற்ற சேவை'தானா நான் செய்து வந்தது? அந்த அஸிஸ்டெண்ட் சொன்னது போல் ஒவ்வொரு முறை என் நர்ஸிங் ஹோமுக்குப் புதிதாக ஓர் ஊமைப் பெண் குழந்தை வரும்போதெல்லாம் ஏன் பரபரப்பு அடைந்தேன்?

ஊமைப் பெண் குழந்தையை அழைத்து வரும் பெற்றோர்களிடம் 'எங்கு பிறந்தாள்?' 'எப்போது பிறந்தாள்?' 'பிரசவத்தின்போது

'டச்சு டச்' இணைந்திட்ட **ஸிக்மா**

ஹாலந்திலிருந்து...

# தொழில்நுட்ப அறிவு

இந்தியாவிலிருந்து...

# பெயிண்டு




| | |
|---|---|
| எனாமல்கள் | ஸிக்மாரின் |
| | ஸாடேனேலட் |
| பிளாஸ்டிக் எமல்ஷன் | ஸிக்மாவால் |
| சிமெண்டு பெயிண்டு | ஸீல்ஸெம் |
| ஃப்ளாட் பெயிண்டு | ஸிக்மாட் |
| டிஸ்டெம்பர்கள் | ச்செரி பிளாஸம் |

பலதரப்பட்ட ஸிக்மா பெயிண்டு வகைகளிலிருந்து தேர்ந்தெடுங்கள். இந்தியாவிலே தயாரிக்கப்பட்டவை இக் கம்பெனியின் கூட்டுறவோடு: பீட்டர் ஷோன் & ஜூனே, N.V., ஸவிட்ஸர்லந்து/ஹாலந்து ... 1722 தொட்டே இத் துறையிலே வல்லுனர்கள். அந்த அலாதியான சிறப்புகளுக் காரணம் ஸிக்மாவின் 'டச்சு டச்'




விநியோகஸ்தர்கள்:
**இண்டோகெம் பிரை. லிட்.,**
பதிவு அலுவலகம்: 221, டாக்டர் D.N. ரோடு, பம்பாய்-1

**ஸிக்மா பெயிண்ட்ஸ் லிட்.,**
221, டாக்டர் D.N. ரோடு, பம்பாய்-1.

iam/tam.

என்ன நடந்தது, சொல்லுங்கள்' என்று குடைந்து குடைந்து கேட்கிறேனே, இதெல்லாம் எதற்காக? இங்கே வந்து ஊமைக் குழந்தைகளுக்காக நர்ஸிங்ஹோமும் பேச்சுப் பள்ளியும் நடத்துவது எதற்காக?

என் நெஞ்சின் ஆழத்துள் புதைந்து கிடக்கும் ஒரு வேட்கை - என் பெண் எப்படியாவது என்னை வந்து அடைந்து விடவேண்டும் என்ற தாபம்தான் என் சேவையை ஊக்குவித்ததோ?...

ஜன்னல் வழியே கீழே நோக்குகிறேன்.

என் நர்ஸிங் ஹோமைச் சேர்ந்த பயிற்சிப் பள்ளிச் சிறுவர்கள் காலைப் பயிற்சிக்காகப் புல்வெளியில் கூடியிருக்கிறார்கள். அவர்களுக்குப் பயிற்சி அளிக்கும் நர்ஸ் இன்னும் வந்ததாகத் தெரியவில்லை. நான்கு நாட்களுக்கு முன் என்றால் நானே ஓடிச் சென்றிருப்பேன். நேரத்தில் ஏன் வரவில்லை என்று நர்ஸைக் கடிந்து கொண்டிருப்பேன். இன்று எனக்கு எதிலும் சுவாரசியம் இல்லை. அக்கறையின்றி அவர்களை நோக்குகிறேன்.

மீண்டும் அறைக் கதவு திறக்கிறது.

அஸிஸ்டெண்டுதான்.

''டாக்டர்! நேற்று வந்த தம்பதி வந்திருக்காங்க!''

''உட்காரச் சொல். வருகிறேன்.''

மீண்டும் கடிதத்தைத் தொடர உட்காருகிறேன்.

''...நினைக்கும்போது வியப்பாக இருக்கிறது. நேற்று நீங்கள் சொன்ன தகவல்களிலிருந்து நான் பெற்றெடுத்த குழந்தையைத்தான் நீங்கள் வளர்த்திருக்கிறீர்கள் என்று தெரிந்தது. கடவுள் ஏன் இப்படிப்பட்ட ஒரு சந்திப்பை ஏற்படுத்தினார்? நான் முழுதும் மறந்துவிட்டதாக நினைத்த என் கடந்த கால வாழ்க்கையின் குருத்து மீண்டும் ஏன் முளைக்கிறது?

ஒன்று நிச்சயமாய் மனத்தில் தைக்கிறது. நான் புது வாழ்க்கை என்று செய்து வரும் சேவை, என் கடந்துவிட்ட வாழ்க்கை பற்றிய ஏக்கத்தின் ஒரு பிரதிபலிப்பு என்று படுகிறது. என் பெண் என்னிடம் வந்து சேரச் சாதனம் என்று என் உள் மனம் எண்ணியதால்தான் இந்த நர்ஸிங்ஹோமையும், பள்ளியையும் சுற்றி எனக்கே புலப்படாத ஒரு தன்னலத்தின் உருவாக நான் செயல்பட்டு வந்திருக்கிறேன்.



உங்கள் மகனை நீங்கள் இழந்துவிட்டதாகக் கண்ணீர் விட்டபோது, அது நான் பெற்ற மகள் என்று உங்களுக்குத் தெரியவில்லை. தெரிந்திருந்தால் உங்கள் இழப்புணர்ச்சி குறைந்திருக்கும் என்று நான் சொல்லவில்லை. பாசத்துக்கும் ரத்தத் தொடர்புக்கும் அதிக சம்பந்தமில்லைதான். ஆனால் அந்தச் செய்தி எனக்குப் புதியதோர் அதிர்ச்சியைத் தந்திருக்கிறது. திடீரென்று இன்று காலையிலிருந்து இந்த ஸ்தாபனத்திலிருந்த அக்கறையை இழந்து வருகிறேன். என் பெண் இனி என்னை என்றும் சந்திக்க முடியாது என்ற உண்மையின் சூட்டில் எனக்கு இந்த வேலையில் இருந்த ஆர்வம் வற்றிவிட்டது.

உங்கள் செல்வம் அனைத்தையும் இந்த ஸ்தாபனத்துக்கு வழங்குவதற்கும், இந்த ஊமைக் குழந்தைகளுக்குப் பணிவிடை புரிந்து உங்கள் வாழ்நாளைக் கழிக்கவும் திட்டமிட்டுள்ளதாகச் சொன்னீர்கள். நான் இனி இங்கு இருக்கத் தகுதி இல்லை. என் ரகசிய ஆசை நிறைவேறாது என்று தெரிந்தும்,— தொடர்ந்து பணி செய்து வருமளவுக்கு நான் உயர்ந்து விடவில்லை.

உங்கள் பெண் — இல்லை — நம் பெண் உமாவின் மனம் ரொம்ப உயர்ந்ததாகத்தான் இருக்கும். அவள் மரணமடைந்த செய்தி என்னை இந்தப் பணியிலிருந்து அகற்றிவிட்டாலும், அதே நிகழ்ச்சி உங்களை இந்த நற்பணியில் ஈடுபடுத்தி விருக்கிறதே; ஒரு பரப்பின் முடிவில்தான் மற்றொரு பரப்பின் தொடக்கமும் அமைகிறது.

இந்த ஸ்தாபனத்தைத் தொடர்ந்து நடத்தி வர ஆண்டவன் உங்களுக்கு அருளட்டும்.''

திகைத்துப் போய் நிற்கும் ஸ்பெஷலிஸ்டுகளையும் புதிதாய்வந்த அந்தத் தம்பதியையும் தாண்டி ஷெட்டைத் திறந்து காரை எடுக்கிறேன். அனைவரும் என்னையே வெறித்துப் போய்ப் பார்க்கிறார்கள். காரை நான் வேகமாக ஓட்டவில்லை. சிறிது தூரம் சென்ற பின் திரும்பிப் பார்க்கும்போது நர்ஸிங் ஹோம் கட்டடம் மிகச் சிறிதாய்த் தெரிகிறது. திடீரென்று சங்கரின் நினைவு புரள்கிறது. 'மீண்டும் அமெரிக்கா போய்ப் பார்த்தால் என்ன?' என்று விசித்திரமாய் ஓர் எண்ண அலை மோதுகிறது.

பெண், நம்பிக்கையின் உருவமா?

---

அன்புக்குரிய குழந்தைகளே!

ஆசிகள் பல.

இந்தப் பொங்கல் திருநாளில் கரும்பைக் கடித்துச் சுவைத்துக் கொண்டிருக்கும் உங்களெல்லோருக்கும் மற்றொரு இனிப்பான செய்தியைத் தெரிவிப்பதில் அளவற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் உள்ள சிறுவர் சிறுமியருக்கென்று கல்கி ஸ்தாபனம் ஒரு புதிய பத்திரிகையை ஆரம்பிக்கப் போகிறது என்ற மகிழ்ச்சியான செய்திதான் அது.

வருகிற தமிழ்ப் புத்தாண்டு தினத்திலிருந்து உங்கள் மனம் கவரும் விதத்தில் வண்ணக் களஞ்சியமாக வெளிவரப்போகிற இந்தப் பத்திரிகையில் வேடிக்கைக் கதைகளும் விளையாட்டு அம்சங்களும் விறுவிறுப்பான படக் கதைகளும் இன்னும் பலவும் உண்டு.

புதிய பத்திரிகைக்கு என்ன பெயர் வைப்பது என்று யோசித்தபோது தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்காக ஆரம்பமாக இருக்கும் பத்திரிகைக்குப் பெயர் சூட்டும் பொறுப்பை அவர்களிடமே விட்டு விடலாமே என்று தோன்றியது.

எங்கே, உங்கள் அபிமானப் பத்திரிகையாக விளங்கப்போகும் புதிய சிறுவர் சிறுமியர் மடலுக்கு, உங்களுக்குப் பிடித்தமான மடலுக்கு, உங்களுக்குப் பிடித்தமான ஒரு பெயரைச் சூட்டுங்கள் பார்க்கலாம்!

உங்கள் கடிதம் எங்களுக்கு ஜனவரி 31-க் தேதிக்குள் கிடைக்க வேண்டும்.

மிகவும் அழகான, பொருத்தமான பெயர் என்று நாங்களும் ஒப்புக்கொண்டு ஏற்கப்படும் பெயரை எழுதி அனுப்பிய குழந்தைக்குக் கல்கி பத்திரிகையின் காவல் தெய்வமான கணபதி ஆசி வழங்குவதோடு ஆறு கொழுக்கட்டைகளையும் அன்பளிப்பாக வழங்குவார். அவசரப்பட்டு அதை அப்படியே சாப்பிட்டுவிடக் கூடாது! விண்டு பார்த்தால் ஒவ்வொரு கொழுக்கட்டைக்குள்ளேயும் ஒரு பொற்காசு இருக்கும்!

எந்தக் குழந்தைக்கு இந்தக் கொழுத்த கொழுக்கட்டைப் பரிசு கிடைக்கிறதோ பார்க்கலாம்!



அன்புடன்,

சதாசிவம்

ஆசிரியர், கல்கி

# கலை வளர்த்த கலை

அன்புள்ள கல்கி ஆசிரியருக்கு,

'பொன்னியின் செல்வன்' மீண்டும் கல்கியில் தொடர்ந்து பிரசுரமாகப் போவதாக மூன்று வருஷங்களுக்குமுன் வெளியான அறிவிப்பைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி கொஞ்சம் நஞ்சமல்ல. நான் சிறுமியாக இருந்தபோது பெரியவர்கள் இந்தக் கதையைப் படித்துவிட்டுச் சொல்லக் கேட்டே என் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறேன். இப்போது நானே தொடர்ந்து படிக்கும் வாய்ப்புக் கிட்டியது. அதற்காகத் தங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

பாரதத்திலும் குறிப்பாகத் தமிழகத்திலும் சரித்திர காலத்தில் எத்தனையோ மாமன்னர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களைப் பற்றிய விவரங்களை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை எல்லாரிடமும் ஏற்படுத்தியது கல்கி அவர்களின் சரித்திரக் கதைகளே. உள்ளங் கவரும் கதைகளைச் சரித்திர நிகழ்ச்சிகளுடன் பின்னிப் பிணைத்து அதன் மூலம் நமது பண்டைப் பெருமைகளையெல்லாம் சுவைபட நமக்குக் கல்கி அவர்கள் எடுத்துச் சொன்னார்கள்.

கல்கி அவர்களின் சரித்திரக் கதைகளுள் பொன்னியின் செல்வனே தலைசிறந்தது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. கரிகாலன், சுந்தர சோழர், பொன்னியின் செல்வன் முதலியோரின் சாதனைகளைப் பாராட்டுவதா, அல்லது மூன்று வருஷங்களுக்கு மேல் இவர்களைப் பற்றித் தொடர்ந்து எழுதி அவர்களை நம்மிடையே உயிரோடு உலவி வரச் செய்து பேசவும் வைத்த கல்கி அவர்களின் மேதா விலாசத்தைக் கண்டு வியப்பதா என்று புரியவில்லை.

ஒவ்வொரு கதாபாத்திரத்தையுமே அவர் அற்புதமான முறையில்தான் படைத்திருக்கிறார் என்றாலும் நந்தினியை உருவாக்கியதில் அவரது திறமை முழுமையாக வெளிப்பட்டிருக்கிறது. நந்தினியை நாம் வெறுத்து ஒதுக்கவே நினைக்கிறோம். ஆனால் அனுதாபமே பொங்குகிறது உள்ளத்தில் !

இதேபோல் எல்லாக் கதாபாத்திரங்களுமே நமது இதயங்களில் நிலையான இடம் பெற்று விடுகிறார்கள். பொன்னியின் செல்வன் முதல் பாகம் பிரசுரமாகி முடிந்த பிறகு, என்னுடன் நெருங்கி உறவாடி வரும் கதாபாத்திரங்களைப் பொம்மைகளாக உருவாக்க வேண்டும் என்ற ஆர்வம் என்னுள் எழுந்தது. உற்சாகத்துடன் உடனடியாகச் செயல்பட ஆரம்பித்து


பொன்னியின் செல்வன்
வானதி


நந்தினி



அநிருத்தர்



பூங்குழலி



வந்தியத்தேவன்
குந்தவை தேவி

விட்டேனேயொழியக் கூடிய சீக்கிரமே இது எவ்வளவு கடினமான காரியம் என்பது புரிந்து விட்டது. ஒவ்வொன்றும் பதினாறு அங்குலம் உயரமுள்ள பொம்மை. அவற்றின் உருவத் தோற்றமும், ஆடை அணி அலங்காரங்களும் கல்கியில் வெளிவரும் சித்திரங்களுக்கு மாறு படாமல் இருக்க வேண்டும். சிரமத்தை உணர்ந்தாலும் என் ஆர்வம் குறையவே இல்லை. அதன் பயனாக இருபது கதாபாத்திரங்களைப் பொம்மைகளாகச் செய்துவிட்டேன். பொன்னியின் செல்வன் முதல் ரவிதாஸன்வரையில் பல்வேறு கதாபாத்திரங்களும் எழுத்தாகவும் ஓவியமாகவும் மட்டுமின்றித் தற்போது என்னிடம் பொம்மை வடிவிலும் இருந்து வருகிறார்கள். பேசியும், சிரித்தும், அழுதும், தங்கள் குறைகளைச் சொல்லியும், அபிலாஷைகளை விவரித்தும், மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டும் ஒட்டி உறவாடி வருகிறார்கள். அவர்களில் சிலரது புகைப்படங்களைத் தங்கள் பார்வைக்கு அனுப்பி வைத்திருக்கிறேன்.

சென்னை — 34 இப்படிக்கு,
22—12—71 சித்கலா

ஸ்ரீமதி சித்கலாவின் இலக்கிய ஈடுபாட்டைப் போற்றுவதுடன் கலை உணர்வையும் மெச்சுகிறோம். நமது இதயபூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீமதி சித்கலா தயாரித்துள்ள ஜீவகளை ததும்பும் பொம்மைகளைக் கல்கி வாசகர்கள் அனைவருக்கும் அறிமுகப்படுத்துவதில் பெருமிதம் அடைகிறோம். எழுத்துக் கலை வளர்த்த பொம்மைக் கலையை இந்தப் பக்கங்களில் காணலாம். - ஆசிரியர்

# சென்ட்ரல்

பி.வி.ஆர்

தீபம் அணைகிறது. இருள் சூழ்கிறது: உயிர் விளக்கு அணையும்போது?

## அத்தியாயம் 24

வியாழக்கிழமை.

மாலை மணி 6—45.

சங்கரி தனக்குள் மகிழ்ந்து கொண்டாள். மைசூர்ப்பாகு வெகு நன்றாக அமைந்து விட்டது. மூன்று வயதுக் குழந்தைகூட விண்டுவிடும். நல்லவேளையாக மூன்று வயதுக் குழந்தை இப்போது இல்லை.

இதுவரையில் எந்தக் குழந்தைக்குமே பிறந்த நாள் கொண்டாடி அறியாத வீட்டில் (முதல் ஆண்டு நிறைவைத் தவிர) இன்று ஒரே இரைச்சல். கும்மாளம். ஷங்கர் டைட்பாண்ட் போட்டுக் கொண்டு, 'டி' ஷர்ட்டை ஒரு தடவைக்கு நூறு தடவை கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். விசு பைஜாமாவும், லக்னோ ஜிப்பாவும் அணிந்து அழகு பார்த்தான். ராதா பட்டுப் பாவாடையில் காட்சி அளித்தாள். அனு ஆடையில் அக்கறை செலுத்தாமல் உருளைக்கிழங்கு போண்டாவில் கவனத்தைச் செலுத்தினாள்; மிக்ஸரில் முந்திரிப்பருப்பைத் தேடினாள். பாபு, கல்யாணம், ரவி ஆகியோர் ஸ்கூல் யூனிபாரத்தைப் போட்டுக் கொண்டார்கள்.

விழாவின் கதாநாயகி சுஜாவுக்கு ஒன்றும் புரியவில்லை. மற்றக் குழந்தைகளுக்கு, பள்ளிக்கூடத்தில் 'ஹாப்பி பர்த் டே' பாடிப் பழக்கப்பட்ட அவளுக்கு இன்று மற்றவர்கள் பாடினார்கள். மங்களா வாங்கிக் கொடுத்த பாரீஸ் மிட்டாய்களை அவள் வகுப்பு முழுதும் வழங்கி, பாக்கி யிருந்த இரண்டைத் தன் வாயில் அடக்கிக் கொண்டாள்.



ஆனால் மறுபடியும் எதற்கு இந்தச் கூத்து? மறுபடியும் 'ஹாப்பி பர்த் டே பாட்டுப் பாடப் போகிறார்களா?

பூப்போட்ட இள நீல 'ப்ராக்' அவளுக்கு எடுப்பாக இருந்தது. ஆனால் அவள் அவஸ்தைப்பட்டாள். தோள் பட்டையில் உறுத்தியது. மைசூர்ப் பாகுத் தூள்கள் வேறு ஃபிராக்கில் சிதறின.

கணபதி வந்தார். இன்னும் ரயில்வே உடுப்பைக் கழற்றவில்லை.

''மைசூர்ப்பாகு கொஞ்சம் ருசி பார்க்கிறீர்களா? நன்னா வந்திருக்குன்னு தான் நினைக்கிறேன்.''

மைசூர்ப்பாகுடன் சங்கரி அவர் முன்னால் நின்றாள். அவர் கண்டிப்பாகச் சர்டிபிகேட் கொடுக்க மாட்டார். அது அவருடைய பிறவிக் குணம். செத்துப் போன அம்மாவுக்கு இப்போது கொடுக்கிறவர், அவள் உயிரோடு இருந்த போது கொடுத்துச் சங்கரி கேட்டதில்லை.

''பாதி கொடு.''

மைசூர்ப்பாகுக் கட்டியை விண்டு நீட்டினாள்.

''ஜோர்... நெய் மணம் வீசறதே..''

''வாயிலே போட்டதும் ஐஸ்கிரீம் மாதிரி கரையறதா ?'' சங்கரிக்குத் துடித்தது.

''அந்தத் துண்டையும் கொடு.''

''நன்னாயிருக்கா?''

''இல்லேன்னு சொல்லலியே?''

''நெய் மணம் வீசினால், அது நெய்யின் தரம். என் கையின் தரம் எப்படி....?''

''அதுதான் அந்தப் பாதியையும் வாங்கிப் போட்டுக் கொண்டேனே.....''

சொன்னவர் உடுப்பைக் கழற்றச் சென்றார்.

சங்கரி ஏக்கத்தில் வாடிப் போனாள். ஒரு வார்த்தை.... ஒரு நல்ல வார்த்தை.... ஊஹூம்... வராது. இவர் வாயிலிருந்து வராது.... 'சங்கரி, நீ பண்ணின மைசூர்ப்பாகு பிரமாதமாக இருக்கு' இப்படிச் சொன்னால் அவளுக்குச் சொர்க்க பதவியே கிடைத்த



மாதிரி அல்லவா? அவளைப்போல் உள்ளவர்கள், கணவரிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறார்கள்? நகை, நட்டு, புடவை ரவிக்கைகளையா? சினிமா, நாடகம் எக்ஸிபிஷன்களையா? மனசு குளிரும்படியான வார்த்தைகள். இன்னும் நன்றாகச் செய்து போட வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும்படியான வார்த்தைகள். புகழ வேண்டாம். ஆனால் உண்மையையாவது சொல்லலாமே!

ஊஹூம். இவர் சொல்லமாட்டார். அவள் தலையெழுத்து.

* * *

மணி 6—50.

மங்களா ரேணுகாவுடன் வந்தாள். சங்கரிக்குப் பற்றிக் கொண்டு வந்தது. மூத்த பெண் இப்படிப் பொறுப்பு இல்லாமல், விருந்தாளியைப் போல், கையை வீசிக் கொண்டு வருகிறாள்! சம்பாதிக்கிற பணத்தையெல்லாம் வீட்டுச் செலவுக்குக் கொடுத்து விட்டால் பொறுப்பு தீர்ந்துவிடும் என்று அவள் நினைக்கிறாள். பெற்றவள் என்ன, சமைத்துப் போட்டு, சதா சர்வகாலமும் வீட்டுக்குள்ளேயே உழைத்துக் கொண்டிருக்க வேண்டிய மாடா? மங்களாவின் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை அறைந்தால் என்ன? ஆனால் இன்றைக்கு முடியாது. நாளுங்கிழமையுமா, வயது வந்த பெண்ணைக் கைநீட்டி அடிக்கக் கூடாது. மேலும் சிநேகிதியுடன் — பணக்காரச் சிநேகிதியுடன் இருக்கிறாள்.

''ஹலோ, மாமி....! ரொம்ப ஸாரி. லேட்டாப் போயிடுத்து....''

மன்னிப்புக் கேட்டது அவளுடைய பெண் இல்லை. ரேணுகா. சிநேகிதி. அவளுடைய பெண்ணுக்கு மன்னிப்புக் கேட்கக் கூடத் தெரியாது!

''அதனால் என்ன? பரவாயில்லை.''

''சுஜாவுக்கு இதை வாங்கினேன்.... நன்றாக இருக்கிறதா என்று பாருங்கள்.''

ரேணுகா நீட்டின பெட்டியைப் பார்த்ததுமே, சங்கரியின் மூச்சு ஒரு கணம் நின்றது. நகைப் பெட்டி!

விரல் நடுக்கத்துடன் திறந்தாள்.

புது மோஸ்தரில் மீனாட்சியம்மன் பதக்கத்துடன் ஒரு நெக்லஸ். அத்துடன் விரலுக்கு ஒரு நெளி.

''இருபத்திரண்டு காரட்!'' என்றாள் மங்களா.

''ரேணு, பிறந்தநாளுக்கு ஏதுக்கும்மா இவ்வளவு பணம் கொடுத்து..'' சங்கரியால் மேலே பேச முடியவில்லை. சிலிர்ப்பில் அவள் தன்னையே இழந்து விட்டாள்.

''ஐந்நூற்று இருபது ரூபாய்'' என்றாள் மங்களா.

''மட, பரிசின் விலையைச் சொல்லக் கூடாதுடீ, மண்டு!'' ரேணுகா மங்களாவின் கன்னத்தை நிமிண்டினாள்.

மணி 6—55.

சீஃப் புக்கிங் கிளார்க், வைரக் கடுக்கன் ரங்காச்சாரி ஒரு ஜதை வெள்ளிக் கொலுசுடன் வந்து, சோபாவில் உட்கார்ந்தார்.

அவரைத் தொடர்ந்து ஏற்கெனவே ஆர்டர் செய்திருந்த ஐஸ்க்ரீமை இரண்டு பெரிய பிளாஸ்கில் போட்டுக் கொண்டு வந்தான் மணி.

முத்து க்ரீம் ஷர்ட்டை அணிந்து, வெறும் கையை வீசிக்கொண்டு வந்து சேர்ந்தான்.

கேதாரம் வந்தான் ரயில்பரிசுடன்.

இன்னும் யார் யாரோ வந்தார்கள். உதவி ஸ்டேஷன் சூப்பிரண்டெண்ட் ஜோசப். ரயில்வே அண்டர்கார்டு ராமாமிர்தம். ரயில்வே காண்டீன் மானேஜர் பஞ்சாபகேசன்.

கடைசியாக மேரி வந்தாள்.

விசுவும் ராதாவும் சிறு சிறு மெழுகு வத்திகளை ரயில்கேக்கின் மேல் நிறுத்தி வைத்தார்கள். எஞ்ஜின் மேல் நான்கு வத்திகள். ஒவ்வொரு பெட்டிக்கும் இரண்டு இரண்டு. ஷங்கர் ஒவ்வொன்றாகப் பற்ற வைத்தான்.

சுஜா எல்லாவற்றையும் கூர்ந்து கவனித்தாள். டைனிங் டேபிளின் மேல் இருக்கும் கேக்கைப் பார்த்தாள். மெழுகுவத்திகளின் எரியும் நாக்குகளைப் பார்த்தாள்.

மணி அவளை டைனிங் டேபிளின் மேல் நிறுத்தி வைத்தான். சுஜா என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லிக் கொடுத்தான். தீபங்களை அவள் ஒவ்வொன்றாக ஊதி ஊதி அணைக்க வேண்டும். அணைந்தபின் கத்தியால், கையில் அடிபட்டுக் கொள்ளாமல் கேக்கை வெட்ட வேண்டும். அப்புறம்—அப்புறம்தான் ஒரு துண்டை அவள் தன் வாயில் போட்டுக் கொள்ள வேண்டும்.

எல்லோரும் குழுமி யிருந்தார்கள். சுஜாவின் குறுகுறுப்பான கண்களை ரசித்துக் கொண்டிருந்தாள் ரேணுகா. அவளுடைய நெக்லஸ் மின்னியது.

''ஸ்வீட் ஸ்மைலிங் கேர்ள்....'' என்றாள் ரேணுகா.

''யெஸ்!'' — கேதாரம்.

''ஃபானைச் சீக்கிரம் ஆஃப் பண்ணுங்கள்.... மெழுகுவத்தி அணைஞ்சுடும் போல இருக்கு.'' கூட்டத்தின் நடுவே

டபிள்-ஆக்டிங்

# டெக்வாடின்

## இருவழிகளில் செயல்புரிகிறது

**தொண்டைக்கரகரப்பு. இருமல் இவைகளிலிருந்து நிச்சயமான நிவாரணம் பெறுங்கள்.**

டெக்வாடின் ஆன்டிஸெப்டிக் லாஸெஞ்ஜஸில மட்டுமே டெக்வாலினியம் க்ளோரைட் என்னும் சக்திவாய்ந்த மருந்துள்ளது. அது தொண்டைக் கரகரப்பையும், இருமலையும் தணிக்கிறது—அதுவும் உடனடியாக.




**க்ளாக்ஸோவின் டெக்வாடின் ஆன்டிஸெப்டிக் லாஸெஞ்ஜஸ் நிச்சயமான நிவாரணம் அளிக்கிறது—உடனடியாக.**

GLO-2735

இருந்த மணி கத்தினான். ராமாமிர்தம் விசிறியை நிறுத்தினார்.

''ஹாப்பி பர்த் டே டு யூ....''

எல்லாரும் ராகம் இழுத்தார்கள். மேரியின் குரல் மட்டும் தனித்துக் கேட்டது. எவ்வளவு இனிமையான குரல். முத்து வாய் அடைத்து நின்றான். அவனுடைய பார்வையெல்லாம், ரயில் கேக்கின் மேலேயே நிலைத்திருந்தது. நாக்கில் ஜலம் ஊறியது. இவ்வளவு பெரிய கேக்கை அவன் அவனுடைய ஜன்மத்தில் பார்த்ததில்லை.

''சுஜா.....! இப்போ நீ இந்த மெழுகு வத்தியை யெல்லாம் ஊதி அணைக்கணும்'' என்றான் மணி.

''தெரியும்!'' — சுஜா.

முதல் மெழுகுவத்தியின் மேல் ஊதினாள்.... விளக்கு அணை...

* * *

கேரளா எக்ஸ்பிரஸ் ஓடிக் கொண்டேயிருந்தது.

ரொஸாரியோ ஓரிரண்டு ரிஜிஸ்தர்களில் என்னென்னவோ கிறுக்கினார். திருவள்ளூர் தாண்டியதும் நேரத்தைக் குறித்தார்.

சரியாக ஐந்து நாற்பதுக்கு ரயில் அரக்கோணத்தை அடைந்தது. இறங்கின ரொஸாரியோ டி. எம்.ஓ.வைப் பார்க்க விரைந்தார்; பார்த்தார். குசலம் விசாரித்து, சென்ட்ரலில் சந்திக்க முடியாமல் போனதுபற்றி மன்னிப்புக் கோரினார். டி. எம். ஓ. புன்னகையால் பதிலளித்து அனுப்பினார்.

திரும்பி வரும்பொழுது காப்பி சாப்பிட வேண்டும் போலத் தோன்றியது. பதினைந்து பைசா கொடுத்து அரை கப் காப்பி வாங்கினார். ஸ்டாலை விட்டு வெளியே வந்தபோது பழ வண்டி எதிரே வந்தது.

சாத்துக்குடி, திராட்சை, ஆப்பிள், மஞ்சள் வாழைப் பழம்.

சென்ட்ரல் ஸ்டேஷன் குழந்தை கண் முன் தோன்றியது. அந்தக் குழந்தை இந்த ரயிலில்தான் வருகிறது. இடீரென்று அதன் கருகருவென்றிருக்கும் கண்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஒரு வெறியாகக் கிளம்பியது. ஏன் என்று அவருக்கே தெரியவில்லை.

ரொஸாரியோ பாக்கெட் கடிகாரத்தைப் பார்த்தார். ஐந்து ஐம்பது. இன்னும் பதினைந்து நிமிடங்கள் இருக்கின்றன. பம்பாய் போகியை 'அட்டாச்' செய்து கொண்டிருக்கிறார்கள்.

ரொஸாரியோ நடந்தார். மேரி எஸ். எஸ். வீட்டுக்குப் போயிருப்பாள். எட்மண்ட் ஊர் சுற்றிக் கொண்டிருப்பான். சனிக்கிழமை தலையைப் பணயம்



''இன்றைக்கு என்ன சார் தேதி?''
''இன்னும் இன்றைய பேப்பர் வரல்லே! வந்ததும் பார்த்துச் சொல்றேன்....''

வைத்தாவது அவனை பம்பாய்க்கு ரயில் ஏற்றி அனுப்பிவிட வேண்டும். ஊஷி இன்றைக்கு வேப்பேரி கிளப்புக்குப் போகப் போகிறாளோ என்னவோ? போகாமல் இருக்க அவளால் முடியாது. அவன் எழுபது ரூபாய்க்காக அவளுடைய உயிரையே வாங்கினான். ஆனால் அவரிடம் ஏது பணம்? எதற்கு எழுபது ரூபாய் அவனுக்கு வேண்டும்? கேட்டால் அதைச் சொல்லவும் மறுக்கிறான்.

ரொஸாரியோ நடந்தார்.

த்ரீ டயர், டூ டயர், லேடீஸ் கம்பார்ட்மெண்ட்....

குழந்தையைக் காணோம்.

முதல் வகுப்புப் பெட்டி.

ஓரிரு பிரயாணிகள் வழியை அடைத்துக் கொண்டு நின்றார்கள். காரிடார் கம்பார்ட்மெண்ட். பிளாட்பாரத்துக்கு எதிர்ப் பக்கத்தில் அறைகள் இருந்தன. அவருக்கும் அறைகளுக்கும் நடுவே காரிடார் இருந்தது. ஏழு அறைகளில் மூன்றில் கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. மற்ற நான்கில் இரண்டு முழுக்கக் காலியாக இருந்தது. மீதி இரண்டு. ஒன்றில் இரண்டு ராணுவ அதிகாரிகள். இன்னொன்றில் இரண்டு பேர்.

'டி' கம்பார்ட்மெண்டில் டி. எம்.ஓ. அது 'கூப்பே'. அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்க்காமல் திரும்ப ரொஸாரியோவுக்கு மனம் வரவில்லை. ஏன் இப்படி ஒரு வெறி அவர் மனத்தில் புயலாக அடிக்கிறது என்றும் அவருக்குப் புரியவில்லை. ரோஜாவின் மணத்தை அனுபவிப்பதில் ஏற்படும் இன்பம். ஒரு நல்ல சங்கீதத்தைக் கேட்பதில் ஏற்படும் மயக்கம். சுழித்து ஓடும் நீரோடையின்

கரையிலே உட்கார்ந்து, தண்ணீரை விரலால் ஸ்பரிசிக்கும் ஓர் ஆனந்தம்.

குழந்தையைக் கண்ணால் பார்த்தால் இப்படி ஓர் இன்பம், மயக்கம், ஆனந்தம் உண்டாகிறது. இதற்காகத்தான் ரொஸாரியோ இப்படித் தேடுகிறாரோ!

'சி' கம்பார்ட்மெண்டின் கதவை இலேசாகத் தள்ளினார்.

''எக்ஸ்க்யூஸ் மீ.''

அவருடைய முயற்சி வீணாகவில்லை.

''ரெண்டு அப்பரும் காலிதானே?''

வந்த காரணத்தை மறைத்து, போலிக் காரணத்தைக் கற்பித்தார்.

''ஆமாம்!'' என்றார் குழந்தையின் தகப்பனார்.

கார்டு இடதுபுறமாகப் பார்த்தார். குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. கரு கருவென்ற கண்மணிகளை இமைகள் போர்த்தி யிருந்தன. ஒரு கணம் அதன் உதட்டில் தேனாக வழியும் புன்னகையில் தம்மைப் பறி கொடுத்தார்.

''நீங்க எந்த ஊர் வரை?...''

''திருச்சூர்!''

''உங்களுக்கு ஜோலார்ப்பேட்டையில் சாப்பாடு வேணுமா?'' ரொஸாரியோ இதையெல்லாம் வலியப் போய்க் கேட்க வேண்டிய அவசியமே இல்லை. அதற்கு என்று சிப்பந்திகள் இருக்கிறார்கள். ஆனால் அவர் கேட்டார்! ஏன்.... ஏன்.... இந்தக் குழந்தை... தூங்கும் இந்தக் குழந்தை....

''முன்னமே சொல்லியாச்சு, தாங்க்ஸ்...''

மீண்டும் தூங்கும் குழந்தையைப் பார்த்துவிட்டு, அறைக் கதவைச் சாத்தினார். இறங்கித் தம் இடத்தை நோக்கி நடந்தார்.

ரயில் புறப்பட்டது. பத்து நிமிடங்கள் தாமதம். காட்பாடி சேருவதற்குள் சரிக்கட்டி விடலாம்.

ஆனால் வழியெல்லாம் கோளாறு இருந்தது.

சித்தேரியில் நின்றது.

மழைத் தூறல்.

ஷோளிங்கரில், ஸ்டேஷன் சாவி வளையம் என்ஜினிலிருந்து நீட்டிய கரத்தினுள் சிக்கவில்லை. அசுரகதியில் ஓடிக் கொண்டிருந்த ரயிலில் திடீரென்று வேகம் குறைந்து, ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் நின்றது. ஸ்டேஷனிலிருந்து ஒருவன் சாவியைத் தூக்கிக் கொண்டு, ஓடோடி வந்து கொண்டிருந்தான்.

ஒரு வழியாக ரயில் மீண்டும் புறப்பட்டது.

தலங்கை.

மீண்டும் ரயில் நின்றது. ரொஸாரியோ அலுப்புடன் இறங்கினார். என்ன கோளாறு என்று அவருக்குத் தெரியவில்லை. இறங்கி நடந்தார். ஒவ்வொரு பெட்டியாகத் தாண்டிக் கொண்டே வந்தார்.

த்ரீ டயர் போகிக்கு முன் ஏழெட்டுப் பேர் பிளாட்பாரத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். யாரோ அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்திருக்கிறார்கள் என்பது மட்டும் ரொஸாரியோவுக்குத் தெரியும். யாருக்கு என்ன அபாயம்?

ஸ்டேஷன்மாஸ்டர், ஓரிரு ரயில்வே சிப்பந்திகள் த்ரீ டயர் முன்னால் வந்து நின்றார்கள்.

ரொஸாரியோ அந்த இடத்தை அடைகையில் ஒரு வயது வந்த ஸ்திரீ, ஓர் இள மங்கையுடன் மெதுவாக இறங்கிக்கொண்டிருந்தாள்.

பிரசவம்!

பெண் குழந்தை.

ரயிலில் பிரசவம்.

ரயில் பெட்டியை அவசரம் அவசரமாகச் சுத்தம் செய்தார்கள். தாயையும் சேயையும் ஸ்டேஷன்மாஸ்டர் அறையில் படுக்க வைத்து விட்டு, இருக்கிற பினாயில், டெட்டால் எல்லாம் எடுத்து வந்து, பெண்களுக்கு என்று ஒதுக்கியிருந்த அறையைக் கழுவினார்கள். ஏற்கனவே இருந்த மூன்று ஸ்திரீகளுக்கு வேறு இடம் கொடுக்கப்பட்டது.

அவசரம் அவசரமாய், சுறுசுறுப்புடன் எல்லோரும் இயங்கினார்கள். ரொஸாரியோ பிறந்த குழந்தையைப் பார்த்துவிட்டு, வயது முதிர்ந்த ஸ்திரீயிடம் இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டுப் பச்சை விளக்கைக் காட்டினார்.

ரயில் புறப்பட்டது.

ரொஸாரியோ விரைந்தார்.

மழைத் தூறல்.

ரயில் வேகம் எடுத்தது.

ரொஸாரியோ ஓடினார்.

அவர் பெட்டி எங்கோ தொலை தூரத்தில் இருக்கிறது. அது வருவதற்குள் மலை என்ஜின் பொருத்தப்பட்ட எக்ஸ்பிரஸின் வேகம் அவர் சக்திக்கு மீறியதாக வளர்கிறது.

ரொஸாரியோ ஓடினார்.

அப்பாடி! பரவாயில்லை. சமாளித்து விடலாம். எத்தனையோ தடவைகள் இதே வேகத்தைச் சமாளித்திருக்கிறார்.

கார்டு வான் வந்து விட்டது. கைப்பிடியையும் பிடித்து விட்டார்.

ஆனால் இடது கால் இழுத்தது. ஒரு மஞ்சள் தோலோடு அது ஓடியது. வலது கால் திண்டாடியது. கைப்பிடியிலிருந்து கையை எடுக்காமல் உடம்பின் சக்தியையெல்லாம் திரட்டிக் கால்களிரண்டையும் தூக்கப் பார்த்தார். வலது கைப்

பச்சை விளக்கு ப்ளாட்பாரத்தில் விழுந்து உருத் தெரியாமல் போயிற்று.

உடம்பின் சக்தியை ரயிலின் வேகம் துண்டித்தது. கை தளர்ந்தது. தளர்ந்து தளர்ந்து கைக்கும் கைப்பிடிக்கும் இருந்த தொடர்பு ஒரேயடியாய் அற்றுப் போயிற்று.

யாரோ அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்தார்கள்.



''உங்களிடம் நேற்று காலண்டர் கேட்டதின் பலன்!''

ரயில் நின்ற இடத்திலிருந்து பிரயாணிகள் கூட்டம் கூட்டமாய்ப் பின்னோக்கி ஓடி வந்தார்கள்.

அவர்கள் தேடி வந்தது ரயில்வே கார்டு ரொஸாரியோவை. அவருக்கு வயது ஐம்பதைத் தாண்டி விட்டது. மனைவியின் பெயர் ஜூலி. பெண் மேரி. பிள்ளை எட்மண்ட்.

அவர் நல்ல உயரம், கம்பீரமான தோற்றம்; நடை.

ஆனால் இப்போது...?

* * *

சீஜா மெழுகுவத்திகளை யெல்லாம் அணைத்தாகி விட்டது.

பலகாரத் தட்டுக்களை ஒவ்வொருவராக எடுத்துக் கையில் வைத்துக் கொண்டார்கள்.

பெரிய எவர்சில்வர் அடுக்கு நிறைய காப்பி நுரை ததும்ப இருந்தது. ஐஸ் கிரீம் கோப்பைகளில் ஸ்பூன்கள் நின்றன. காப்பிக்குப் பிறகு மணியே ஐஸ் கிரீமை வழங்குவான்.

ரேணுகா — மங்களா — கேதாரம்.
மணி — முத்து — ரங்காச்சாரி.
ராமாமிர்தம் — ஜோசப் — கணபதி.
ஷங்கர் — ராதா.
விசு — அனு.
சங்கரி — சுஜா.

மேரி தனியாக நின்றாள். அப்பா இல்லையே என்ற வருத்தம் ஒரு சுமையாக அவளுள் ஏறியது. அவர் இருந்திருந்தால், அவளுக்கு எவ்வளவு பெருமையாக இருந்திருக்கும்! கேதாரத்துக்கு அறிமுகம் செய்திருப்பாள்.

''ஏய், மேரி!''

மங்களா கூப்பிடுகிறாள்.

''ஐ ஆம் அட் தி போண்டா.''

''கம் ஹியர்.''

மேரி மெள்ள நடந்து சென்றாள்.

காப்பி இருந்த அடுக்கு காலியாயிற்று. ஐஸ்கிரீம் நாக்கில் கரையலாயிற்று.

எல்லோரும் சிரித்தார்கள். பேசினார்கள். பேசினார்கள். சிரித்தார்கள். மேரி தமிழில் பாட முயன்றாள். ரேணுகா கைகொட்டிச் சிரித்தாள்.

முத்து மௌனமாக எல்லாவற்றையும் ரசித்தான். கொழுகொழுவென்றிருக்கும் குமுதாவின் உருவம் கண்முன் நின்றது. அவளுக்கு ஐஸ்க்ரீம் பிடிக்கும். அவளுக்கு எதுவுமே பிடிக்கும். அவளுக்கு அவனைப் பிடிக்கும். இப்போது அவனுக்கு அவளைப் பிடிக்கிறது.

திடீரென்று எட்மண்ட் நுழைந்தான்.

''ஹலோ எட்மண்ட்!'' மணி அவன் அருகே போனான்.

''மாமி இன்னொரு பிளேட்... எட்மண்ட், பர்த்டே பார்ட்டி... எங்களோடு சேர்ந்துகொள்.... எஸ். எஸ். சார், எட்மண்ட் யார் தெரியுமா? ரொஸாரியோவின் பிள்ளை.''

மணியின் குரலுக்கு எஸ். எஸ். பதில் கொடுத்தார்.

''எனக்குத் தெரியும்...எட்மண்ட்! நீ வந்தது எனக்கு ரொம்பச் சந்தோஷம். டிபன் சாப்பிடு, வா!''

சங்கரி தட்டு நிறையப் பலகாரங்கள் கொண்டு வந்தாள்.

எட்மண்ட் ஒன்றை எடுத்து ருசி பார்த்தான். ''தாங்க்ஸ்... தாங்க்யூ... குழந்தைக்கு என் நல்வாழ்த்துக்கள்.''

''மேரி, இங்கே கொஞ்சம் வா!''

மேரி எட்மண்ட்டிடம் வந்தாள். 'இங்கேயும் பணத்துக்கு வந்துவிட்டானா?'

''உடனே புறப்படவேண்டும்'' என்று பிறர் காதில் விழாவண்ணம் எட்மண்ட் அவள் காதோடு கூறினான்.

''மன்னிக்கணும். நான் கொஞ்சம் அவசரமாகப் போகணும்'' என்றாள் மேரி.

''சீக்கிரம் திரும்பிடு!'' — ரேணுகா.

அதே சமயம் போன் அலறியது.

எஸ். எஸ். போனை எடுத்தார்.

முகம் ஒரு கணம் வெளிறியது. ''நான் வந்துட்டேன்!'' அவர் நாத் தழுதழுத்தது.

''மங்களா... நீ பார்த்துக்கோ, நான் போயிட்டு வந்துடறேன்!''

எஸ். எஸ். ஓடினார்.

வீட்டில் கும்மாளம்.

ஆனால் அவர் மனத்தில்!

ஒரு பெரிய இடி. ரொஸாரியோ... ரொஸாரியோ... ரொஸாரியோ...... ரொஸாரியோ! (தொடரும்)

கடந்த அரை மணி நேரமாக அங்கு ஒரே நிசப்தமாக இருந்தது. இராக்காலப் பூச்சிகளும் தவளைகளும் இடைவிடாமலும், இராக்காலத்துப் பறவைகள் அவ்வப்போது திடீர் திடீரென்று நினைத்துக் கொண்டாற் போலவும் எழுப்புகிற ஓசைகள் அந்த இடத்துக்கே உரித்தான சுபாவங்களுள் ஒன்றாக இருந்ததால் அங்கு நிலவிய நிசப்தத்தை அவை குலைப்பதாகத் தோன்றாமல் மிகைப்படுத்திக் காட்டுகிற மாதிரி இருந்தது.

இந்த நிசப்தம் எதன் அறிகுறி என்று அனுமானிப்பதற்கில்லை. இது எதை வேண்டுமானாலும் குறிக்கலாம். எதையுமே குறிக்காமல் வெறும் தற்செயலான விளைவாகவும் போய்விடலாம். ஒருவேளை எதிர்த் தரப்பில் கையிருப்பெல்லாம் சுத்தமாகத் தீர்ந்து போய் அவர்கள் வலுக்கட்டாயமாகப் பின் வாங்கிச் சென்றுவிட நேர்ந்திருக்கலாம். அல்லது இங்கிருந்து கும்மிருட்டில் குருட்டுத்தனமாகச் சுடப்பட்ட குண்டுகள் ஏதேச்சையாக எதிர்த்தரப்பினர் அனைவரையுமே வீழ்த்தி விட்டிருக்கலாம். இல்லாவிட்டால் இங்கிருப்பவர்களைக் கொஞ்ச நேரம் அயரச் செய்துவிட்டுத் திடீரென்று தாக்குதலைத் தொடங்கும் தந்திரத்தை எதிராளிகள் மேற்கொண்டிருப்பதை இந்த நிசப்தம் குறிக்கக் கூடும். இன்னதுதான் என்று எதைப் பற்றியும் நிச்சயிப்பதற்கில்லை.



# இலக்கு

மலர் மன்னன்

இந்த நிசப்தத்துக்கு எந்த விதமான அர்த்தத்தையும் சுயமாகக் கற்பித்துக்கொள்ளாமல், எதற்கும் தயாராக, இருந்த இடத்தில் கிடந்த நிலையிலேயே தொடர்ந்து பதுங்கிக்கொண்டிருப்பதுதான் புத்திசாலித்தனம் என்பதை இங்கிருப்பவர்களில் ஒவ்வொருவரும் மனப்பூர்வமாக உணர்ந்திருந்தார்கள். இருந்தாலும் வேட்டுச் சத்தங்கள் சட்டென்று அடங்கிப் போய் அரை மணி நேரமாக அமைதி நிலவுவது அவர்கள் அனைவருக்குமே ஒரு சகித்துக் கொள்ள முடியாத அவஸ்தையாகத்தான் தோன்றியது - முற்றிலும் எதிர்பாராத விதமாக. எந்த விதமான துர்ப்பாக்கியத்துக்கும் தங்களைத் தாங்களே ஒப்புக்கொடுத்துவிட்ட நிலையில் — சுட்டுப் போகக்குகிற சயக் குண்டுகள் உடலின் எந்தப் பகுதியிலாவது துளைத்துக்கொண்டு போகக் கூடிய கொடுமையை விட இந்த நிசப்தத்தை மிகக் கொடூரமானதாக அவர்கள் நினைக்க வேண்டி யிருந்தது.

''சீ, சனியன்!''—மிகுந்த எரிச்சலுடன் ஒரு முணு முணுப்பு. தொடர்ந்து, எதுவோ 'சளக்' கென்று சற்றுத் தொலைவில் போய் விழுந்த ஓசை.

அடுத்து, ''அட, நீ பக்கத்திலேதான் இருக்கியோ, முருகேசா?'' என்று மெல்லிய குரலில் சிறிது வியப்புடன் கூடிய ஒரு விசாரிப்பு.

உடனே, ''யாரு, சேதுவா? நீ கிட்டத்திலேதான் இருக்கேன்னு முன்னாடியே தெரியாமப் போச்சே! ஏதாச்சும் பேசிக்கிட்டாவது இருந்திருக்கலாம்'' என்று தணிந்த தொனியில் அதற்குப் பதில் குரல் கிளம்பியது.

அங்கிருந்தவர்களில் அந்த இரு குரல்களுக்கும் உரியவர்கள் மட்டும்தான் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள். இருவருமே இக்கட்டான நிலையில் வேறு வேறு படைப் பிரிவுகளிலிருந்து அண்மையில்தான் வந்து சேர்ந்






இருந்ததால் மற்றவர்களுடன் அவர்களுக்கு இன்னும் நெருக்கமான பிணைப்பு ஏற்பட்டாகவில்லை. 'புதியவர்கள்' என்ற பிறரின் பாவனை மறையாமல், தம்மைப் பற்றித் தாமே அன்னியராகக் கருதிக்கொள்ளும் உணர்வும் நீங்காத ஆரம்ப நிலையில் இருப்பவர்களுக்கே உரித்தான 'ஓரினப் பறவை' சுபாவத்துடன் இவர்கள் இருவரும் வந்து சேர்ந்ததுமே இணை சேர்ந்துமாயிற்று.

''யாரைத் திட்டறே?'' என்று சேது கேட்டான். குரலில் பரிகாசம் பொங்கியது.

''தேங்காயளவு ஒரு தவளை சேது! எப்படியோ கால் சட்டைப் பைக்குள்ளே புகுந்திடுச்சு...''

''தவளைதானே...? அப்பப் பரவாயில்லே; அட்டைப் பூச்சிங்களை விடத் தவளைங்க எவ்வளவோ மேல் இல்லையா?''

''அது சரி. ஆனால் அட்டைப் பூச்சிங்க மட்டும் நம்பளை விட்டு வெச்சுதா, என்ன? நேத்து ராத்திரி மட்டும் எட்டு அட்டைப் பூச்சிங்களை முழங்காலிலேயிருந்து பிடுங்கி எறிஞ்சிருக்கேன் தெரியுமா? இப்பெட்டியிலே இருந்த குச்சிகள் அத்தனையும் அதுக்கே சரியாப் போச்சு...''

''உனக்குத் தேவலாம்பா... எங்கணக்குக்கு நேத்து ராத்திரி பதினாலு! சனியன் வந்து ஒட்டறதே தெரிய மாட்டேங்குதே! கொஞ்ச நாழியானப்புறம்தானே ஏதோ உபத்திரவம் பண்ணுதுன்னு புரிய ஆரம்பிக்குது!'' என்று அலுத்துக் கொண்டான் சேது.

முதல் நாள் இரவை அவர்கள் கழித்த பகுதி முற்றிலும் அட்டைப் பூச்சிகளின் உறைவிடமாக இருந்தது. ஆறங்குல நீளத்துக்குக் குறையாமல் அதற்கேற்ற பருமனுடன் நெளிகிற வளுத்தராத்து அட்டைப் பூச்சிகள். நல்ல வேளையாக இங்கு அந்த உபத்திரவம் அவ்வளவாக இல்லை. ஆனால் தவளைகளின் தொந்தரவு அதிகமாக இருந்தது. அவை பாட்டுக்கு சுவாதீனமாக அவர்கள்மீது தத்தித் தத்திக்கொண்டு போவதும் சரீரக் கழிவுகளை வெளியேற்றிக் கொண்டிருப்பதுமாகச் சங்கடப்படுத்தின. கொசுக்களின் தொல்லையும் இங்கு கூடுதலாக இருந்தது.

இது நிலாக் காலமல்ல. வானிலிருந்து அதிக வெளிச்சத்தை எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால் நட்சத்திரங்கள் உமிழ்கிற மங்கலான ஒளியைக்கூடப் பெற விடாமல் மேகங்கள் வானில் ஆதிக்கம் செலுத்தியதால் அவர்கள் தங்களை மேலும் நிராதரவாக உணர்ந்திருக்கக் கூடும்....

''என்ன முருகேசா, பேச்சையே காணோம்? ஏதாச்சும் யோசனையா?''

''ம்...ம்... ஒண்ணுமில்லேப்பா...''

'' அட, சும்மா சொல்லு! எதுக்குத் தயங்குறே?''

''பிரமாதமா ஒண்ணுமில்லே சேது....! எங்க ஊர்லே நச்சு ஐயர்னு ஒருத்தர்; தேர் முட்டியிலே ஹோட்டல் வெச்சிருக்கார். கல்லாவிலே உக்கார்றதும் அவர்தான்; அடுப்படியிலே சரக்குப் போடறதும் அவர்தான். ரெண்டையும் மாத்தி மாத்திக் கவனிச்சுக்குவார். மத்தியானம் ரெண்டு மணியடிச்சதும் அவர் கடையிலே போடற கோதுமை அல்வாவும் பக்கவடாவும் திடீர்னு நினைப்பு வந்துச்சு...''

''இதுதானா? சரிவா நினைப்புத்தான் வந்துச்சாக்கும்னு பார்த்தேன்...'' — சேது சற்று உரக்கவே சிரிக்கத் தொடங்கிச் சட்டென்று நூல் அறுபட்ட மாதிரி அடங்கிப் போனான்.

முருகேசன் அந்தச் சிரிப்புக்குப் பதிலிறுக்காமல் மௌனம் சாதித்தான். துக்கம் அனுஷ்டிப்பது போல் சாதிக்கப்படுகிற மௌனம்.

அவர்கள் சரியாகச் சாப்பிட்டு நாலைந்து நாட்கள் ஆகின்றன. நான்கு நாட்களுக்கு முன்பு சப்ளை போக்குவரத்துடன் அவர்களுக்கு இருந்த தொடர்பு துண்டிக்கப்பட்டு விட்டது. கைவசமிருந்த சொற்ப உணவுப் பண்டங்கள் முழுவதையும் அவர்கள் தின்று தீர்த்து முப்பத்தாறு மணி நேரத்துக்கு மேலாகி விட்டிருந்தது.

எதிராளியின் ஆளுகைக்கு உட்பட்ட பிரதேசத்தில், எல்லைக் கோட்டிலிருந்து சுமார் ஐம்பது கிலோமீட்டர் தொலைவிலுள்ள ஒரு சாவடியைக் கைப்பற்றுமாறு மேலிடத்திலிருந்து அவர்களுக்கு ஆறு நாட்களுக்கு முன்பு உத்தரவு வந்தது. உத்தரவுப்படி செயல்படுவதற்குப் புறப்பட்டபோது அவர்கள் ஏறத்தாழ ஐம்பது பேர்களாக இருந்தார்கள். எதிர்ப்பட்ட பகைவர்கள் எதிர்பார்த்ததை விட எண்ணிக்கையிலும் தளவாட வசதியிலும் வலிமை மிகுந்திருந்ததால் இப்படிப் புறப்பட்டவர்களின் தரப்பில் சேதம் சிறிது கூடுதலாகவே இருந்தது. முன்னுக்கும் பின்னுக்குமாக அலைக்கழிந்து கொண்டிருப்பதிலேயே மூன்று நாட்கள் கழிந்துவிட்டன. சேதமும் உழைப்பும் கடினமாக இருந்த போதிலும் சீலத்துக்குச் சிறிதளவும் குந்தகம் விளையாததால் அவர்கள் தங்கள் இலக்கை நோக்கிச் சிறுகச் சிறுக முன்னேறிக்கொண்டு தானிருந்தார்கள்.

எதிர்த் தாக்குதலின் உக்கிரம் நீடித்ததால் போரிடுவதே அவர்களது முழு நேரப் பணியாகி, அவர்கள் மிகவும் களைத்துப் போய்விட நேர்ந்தது. ஆனால் மேலிடத்திலிருந்து அவ்வப்போது தொடர்ந்து முன்னேறிச் செல்லுமாறு கம்பியில்லாத் தந்தியாகத் தாக்கீது வந்து அவர்களைத் தூண்டி விட்டுக் கொண்டிருந்தது.

''சப்ளை போக்குவரத்தை எதிராளி துண்டித்து விட்டதால் உங்களைப் பராமரிப்பது சாத்தியப்படாமல் போய் விட்டது. அதற்காக மனம் தளர வேண்டாம். எப்படியும் சாவடியைக் கைப்பற்றி விடுங்கள். அது. உங்கள் உணவுப் பிரச்னைகளைத் தீர்த்து

---

விடும்'' என்றும் மேவிடம் அடிக்கடி அவர்களுக்கு அறிவுறுத்தி உற்சாகப்படுத்தியது. தொடக்கத்தில் இந்த விஸ்தாரமான விளக்கத்தின் முக்கியத்துவத்தை அவர்கள் அவ்வளவாக உணரவில்லை. கைவசமிருந்த உணவுப் பொருள்கள் முழுக்க முழுக்கத் தீர்ந்துபோன பிற்பாடு அடுத்தடுத்து வந்த உணவு உட்கொள்வதற்கான வேளைகள் வெறுமையாகக் கழியத் தொடங்கிய பிறகுதான் அந்த விளக்கம் எவ்வளவு அவசியமானது என்பது அவர்களுக்குப் புரிய ஆரம்பித்தது. அப்படிப் புரிய ஆரம்பித்த பிறகு மேவிடத்தின் தூண்டுதல் இன்றியே முன்னேறிச் செல்லும் நோக்கம் ஒரு வெறியுணர்வாக அவர்களை ஆட்கொண்டு விட்டது.

"இப்ப நாம மொத்தம் எவ்வளவு பேர் இருக்கோம் முருகேசா?'' என்று திடீரெனக் கேட்டான் சேது.

''பதிமூணு! ஏன், அபசகுனமாகத் தோணுதா?''

''நான் என்ன வெள்ளைக்காரனா? பதிமூணுன்னால் பயப்பட? எப்படியும் நாம அந்தச் சாவடியைப் பிடிச்சிடுவோம் என்கிறதிலே எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் இந்த பதிமூணு பேராவது அப்ப மிஞ்சியிருப்போமான்னுதான் யோசிக்கிறேன்...''

''இப்ப என்ன அதைப் பத்தி? வேறே எதைப் பத்தியாவது பேசு'' என்று பேச்சை மாற்றினான் முருகேசன்.

''எத்தனை நாழிதான் இந்தச் சேத்துக்குள்ளேயே எருமைகளாட்டம் படுத்துக் கிடக்கிறது? ஒரு வழியா முன்னேறிப் போகலாம்னு உத்தரவு குடுக்க மாட்டேங்கறாரே'' என்று தங்கள் படைத் தலைவனைப் பற்றி அலுத்துக் கொண்டான் சேது.

முருகேசன் வெறுமனே சூள் கொட்டி, அவனை ஆமோதித்தான்.

அவர்களது சலிப்பைப் புரிந்து கொண்டு விட்ட மாதிரி படைத் தலைவன் சற்று நேரத்துக்கெல்லாம் முன்னேறிச் செல்வதற்கான கட்டளைக் குரலை எழுப்பினான்.

இனி அவர்கள் முன்னேறிச் செல்லலாம். சேற்றில் உடம்பை ஊறப் போட்டுக் கொண்டிருக்கத் தேவையில்லை.... சகதியில் புதைந்து கிடந்த உடலைச் சிரமப்பட்டு மேலுக்கெழுப்பித் தட்டுத் தடுமாறியவாறு அவர்கள் முன்னேறத் தொடங்கினார்கள்.

கொஞ்ச தூரம் சென்ற பிறகு மண்ணின் ஈரப் பசை குறையத் தொடங்கியது. நிலம் மெதுவாக மேடேறத் தொடங்குவதையும் அவர்கள் உணர்ந்தார்கள்.

கையால் தள்ளியோ, விசையால் இயக்கியோ வழிநடத்திச் செல்லக் கூடிய ஐந்தாறு சிறு ரக பீரங்கிகள் அவர்கள் வசம் இருந்தன. விசைக் கருவிகள் பழுதடைந்து போய்விட்டதால் அவற்றைக் கைகளாலேயே தள்ளிக் கொண்டு போக வேண்டியிருந்தது. சகதியிலும் பிறகு மேட்டுப்பாங்கான நிலத்திலும் பீரங்கிகளைத் தள்ளிக் கொண்டு போவது அவர்களுக்கு மேலும் எரிச்சலைக் கிளப்பியது. பீரங்கிகளை முன்னேக்கி உந்திச் செல்ல அவர்கள் அனைவருமே கைகொடுக்க வேண்டியதாயிற்று.

''சதுப்பு நிலத்தைத் தாண்டி வந்துவிட்டோம். இந்த மேட்டையும் கடந்துவிட்டால் நாம் நமது இலக்கை எய்திவிட்டமாதிரிதான்: இந்த மேடு சம தளமாகிற இடத்தி



# உறவு

'நாணல்'

சாலை மரத்தில் ஏறிக் குருவி
    தலையைச் சாய்த்துக் கூவியது:
'ஏலே, உனக்கும் எனக்கும் என்ன
    உறவோ, சொல்' என்றுருகியது.
திகைத்து நின்றேன். காலை வெயில்
    சிரித்துச் சிவந்து குழம்பியது.
திகந்தம் எங்கும் குருவி எறிந்த
    தீராப் புதிரே சிலம்பியது.
'கண்ணித் பாசி படர்ந்தால், காலக்
    கடலும் வடிந்தால், கட்டிவைத்த
மண்ணும் இடிந்தால் நீ நான் என்ற
    மாயம் புலரும்' என்றுரைத்தேன்.
'அதற்குள் இங்கே உனக்கும் எனக்கும்
    ஆட்டம் முடியும். உயிர் துள்ளிப்
பதைக்கும் போதே பார்க்கா விட்டால்
    பார்ப்ப தேதோ' என்றெழுந்து
குருவி எங்கோ சென்ற ததனைக்
    கூட்டி நிறுத்த வழியில்லை.
உருவிச் செலும் இவ் வொளியின் மயக்கில்
    ஒன்றும் காண வகையில்லை.



**போருக்கு முன் யாஹ்யா கான்**
**இப்போது யாஹ்யா GONE!**

— எஸ்வலார்

லேயே அந்தச் சாவடி அமைக்கப்பட்டிருக்கிறது'' என்று இருளில் படைத்தலைவனின் உற்சாகமான குரல் விறிட்டு அவர்களை ஊக்குவித்தது. 'மேட்டைக் கடந்துவிட்டால், சாவடி.. சாவடியை அடைந்துவிட்டால் பிரச்னைகள் தீர்ந்து விடும்' என்று முருகேசன் திரும்பத் திரும்ப உருப்போட்டவாறு பிரங்கியைத் தள்ளியபடி முன்னேறிக் கொண்டிருந்தான்.

கடந்து சென்ற வழி நெடுகிலும் எதிரிகளின் சடலங்களும் அவர்கள் கைவிட்டுச் சென்ற பொருட்களும் கால்களில் இடறி அவர்களுக்கு மேலும் தெம்பூட்டிக் கொண்டிருந்தன.

'எதிரிகள் முறியடிக்கப்பட்டு விட்டார்கள். இனித் தாக்குதல் எதையும் எதிர்கொள்ள வேண்டியிருக்காது' என்ற நிச்சயத்துடன், அவர்கள் மேலும் விரைவாக முன்னேறத் தொடங்கியபோது, வானில் மேக மூட்டம் விலகி இலேசாக வெளிச்சம் படர்ந்தது. கீழ்த் திசை அடிவானமும் வெளிற ஆரம்பித்து, நல்ல சகுனம் போல் அவர்களுக்கு நகை மூட்டியது.

இப்போது அவர்கள் ஒருவரை யொருவர் நிழலுருவங்களாகப் பாவித்துக் கொள்ள முடிந்தது. மேட்டுப்பாங்கான வெட்ட வெளியில் அவர்களை எதிர்நோக்கியிருந்த பிரதேசம் கூடச் சற்றுத் தெளிவாகவே புலப்பட்டது. அவர்களின் நடை மேலும் துரிதப்பட்டது.

அப்போது அவர்கள் சற்றும் எதிர்பாராத விதமாக எதிர்த் திசையிலிருந்து வரவேற்பளிப்பது போல சரமாரியாகக் குண்டுகள் பாய்ந்து வர ஆரம்பித்தன. ஒரு கணம் என்ன நடக்கிறதென்றே புரியாமல் திக்கித்து நின்ற அவர்கள் சடுதியில் சுய உணர்வு வரப்பெற்றவர்களாய்ச் சட்டென்று குப்புற அடித்துப் படுத்துக்கொண்டு அப்படிப் படுத்த வேகத்திலேயே பதில் தாக்குதலைத் தொடங்கினார்கள்.

''இங்கே யாருக்கு ஒயர்லெஸ் பெட்டியைச் சமாளிக்கத் தெரியும்?'' என்று இடைரெனப் படைத் தலைவனின் குரல் பரபரப்புடன் அவர்களிடையே அலைபாய்ந்தது.

''ஏன், ஷாருலுக்கு என்ன வந்தது?'' என்று யாரோ திகைப்புடன் கேட்டார்கள்.

அவர்கள் கோஷ்டியில் ஷாருல்தான் ஒயர்லெஸ் ஆபரேட்டர். வேலையில் கெட்டிக்காரன்.

''ஷாருலை நாம் இழந்துவிட்டோம்'' என்று படைத்தலைவனிடமிருந்து கரகரத்த குரலில் பதில் வந்தது.

படுத்துக் கிடந்தவர்களில் ஒருவன் பதுங்கி உட்கார்ந்தவாறு படைத் தலைவனிடமிருந்து ஒயர்லெஸ் பெட்டியை வாங்கி வைத்துக் கொண்டான்.

முருகேசனும் சேதுவும் இப்போதும் அருகருகேதான் படுத்திருந்தார்கள்.

''பதிமூணு பன்னெண்டாகிப் போச்சு, முருகேசா'' என்றான் சேது துயரத்துடன்.

''எப்போதும் விளையாட்டுத்தனமாக இருக்கிற, கறுகறுப்பு மிகுந்த அந்த ஷாருல் இப்போது இல்லையாம். படைத் தலைவன் சொல்கிறான்...''

''இன்னார்தான் போவாங்க, இன்னார் இருப்பாங்கன்னு நீ என்ன நினைக்கிறது?'' என்று ஏளனம் செய்கிற மாதிரி கேட்டான் சேது.

முருகேசன் அதற்குப் பதில் சொல்லவில்லை. ''சேது. உங்கிட்ட ஒண்ணு சொல்லணும்'' என்றான் சிறிது அவசரமாக.

''என்னது?''

''ஒருவேளை நானும் போயிட்டேன்னா நீ எங்க ஊருக்குப் போயி, கிலாவுக்கு நேரிலே ஆறுதல் சொல்லணும்...''

''அதுக்கென்ன இப்ப, ஒழுங்கா வேலையைப் பாரு'' என்று கடிந்தான் சேது.

கிலாவைப் பற்றி முருகேசன் ஏற்கனவே சேதுவிடம் சொல்லி யிருக்கிறான். அவள் அவனுக்கு முறைப் பெண்ணும். ஊரில் முருகேசனுக்காக அவள் காத்துக் கொண்டிருக்கிறாள். திருமணத்துக்காக முருகேசன் போன மாதமே விடுமுறை எடுத்துக் கொண்டு போயிருந்தான். அதற்குள் நிலைமை திடீரென்று மாறி அவன் திரும்ப அழைக்கப் பட்டு விட்டான். திருமணம் செய்து கொள்ளாமலே அவன் வந்த வேகத்தில் படை முகாமுக்குத் திரும்ப வேண்டியதாயிற்று.

''இல்லே, சேது. நான் விளையாட்டாகப் பேசல்லே. நான் போயிட்டா ஊருக்குப் போயி, அவளைச் சமாதானப்படுத்தறேன்னு சொல்லு'' என்று பரபரப்புடன் வேண்டினான் முருகேசன்.

''என்னப்பா இது, சின்னப் பிள்ளையாட்டம்? சரி; அப்படியே செய்யறேன். என் பெண்டாட்டி பிள்ளைங்களைப் பார்க்கப் போறதுக்கு முன்னாடியே உங்க ஊருக்குப் போயி உன்னோட கிலாவைப் பார்க்கிறேன்; போதுமா?'' என்று சிரித்த சேது, திடீரென்று அவலமாகக் குரல் எழுப்பியதும் முருகேசன் திடுக்கிட்டான்.

அருகில் நிழலுருவமாகப் படுத்துக் கிடந்த சேதுவை அவன் உறுத்து நோக்கினான். சந்தேகத்துடன் ஒரு கையை நீட்டி அவனைத் தொட்டுப் பார்த்தான்.

சேதுவிடம் சலனமில்லை. முருகேசன் மெதுவாக நெருங்கி வந்து அவனது உடம்பில் திரும்பவும் கைவைத்து மேல் நோக்கித் தடவிக் கொண்டே வந்தான்.

சேதுவின் தொண்டையை அவனது கை விரல்கள் வருடியபோது சூடான நீரை அளைகிற மாதிரி இருந்தது. சட்டென்று கையை எடுத்து விரல்களைக் கண்களுக்கு அருகில் கொண்டு வந்து கூர்ந்து பார்த்தான். அவை கரிய நிறமாகக் கறை பட்டிருந்தன.

'சேதுவும் இனிமேல் இல்லே...'

போர்முனையில் நிகழ்ச்சிகள் எவ்வளவு சர்வ சாதாரணமாக—ஆனால் திடுதிப்பென்று நேர்ந்து விடுகின்றன!

சேதுவைப் பற்றித் தொடர்ந்து சிந்திக்க முருகேசனுக்கு எதிரிகள் அவகாசம் தரவில்லை. அவர்களது மூர்க்கத்தனமான



# நம் குழந்தைகள் நம்மைத் தான் நம்பியிருக்கின்றன

ஆம், அவர்களை நாம் நன்கு கவனிக்க வேண்டும்.

குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவது நம் பொறுப்பு. சத்துணவு, நல்ல உடை, நல்ல கல்வி இவற்றை அனுபவிக்கும் உரிமை உண்டு அவர்களுக்கு. வளர்ந்து பெரியவர்களாகும்போது தக்க வேலை வாய்ப்பும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டும்.

அதிகமான குழந்தைகள் இருந்தால், நல்வாழ்வுக்கான இந்த அடிப்படை வசதிகளை நம்மால் அவர்களுக்கு அளிக்க முடியுமா? முடியாது. இப்பிரச்சினையைத் தீர்க்க ஒரே வழி-சிறிய குடும்பம். குடும்பம் எவ்வளவு சிறியதோ, அதற்கேற்றபடி, ஒவ்வொரு குழந்தையும் பெறும் அன்பும், அரவணைப்பும் அதிகமாகும்.

இலவச ஆலோசனையும், உதவியும் பெற குடும்ப நல திட்ட நிலையத்திற்குச் செல்லுங்கள்.

davp 71/373 TM

இம்மாத நாவல்

30.1.1972

# ஓதிம விளக்கு

த. நா. குமாரஸ்வாமி

தாக்குதலை அவன் சமாளிக்க வேண்டி யிருந் தது. பதிலுக்குத் தானும் ஆவேசமாகத் தாக்குதல் நடத்தி எதிரிகளைத் திக்குமுக் காடச் செய்தாக வேண்டும்...

ஒன்றரை மணி நேர இடைவிடாத மோத லுக்குப் பிறகு எதிர்த் தரப்பில் வேட்டுச் சத்தம் ஓய்ந்தது. வெளிச்சம் இப்போது நன்கு பரவி விட்டதால் எதிரிகளில் பெரும் பாலோர் உயிரிழந்தும் படுகாயமுற்றும் பின் வாங்கித் தப்பிச் சென்று விட்டதை அவர்க ளால் சந்தேகமறப் புரிந்து கொள்ள முடிந் தது. தங்கள் இலக்கை அவர்கள் எளிதாக எய்தி விடுவது இனிமேல் சாத்தியம்தான்.

அவர்கள் வெறி பிடித்த மாதிரி முன் னேக்கி ஓடினார்கள். சிதறிக் கிடந்த எதிரி களின் உடல்கள் மீது இடறி விழுந்து கொண்டும், விருக்கென்று துள்ளி எழுந்தும் அவர்கள் தலைதெறிக்க ஓடினார்கள்.

பீரங்கிகளைத் தள்ளிக் கொண்டு வந்த வர்கள் அவர்களுக்கு ஈடு கொடுக்க மாட்டா மல் பின்னடைந்து மூச்சிரைக்க அவற்றை உந்திக் கொண்டு வந்தார்கள். படைத் தலை வன் அவர்களுடைய சங்கடத்தைப் புரிந்து கொண்டு ஓடுகிறவர்களை யெல்லாம் சத்தம் போட்டு அழைத்தான். பீரங்கிகளைத் தள்ளிக் கொண்டு வரும் பொறுப்பை அனைவரும் பகிர்ந்து கொள்ளுமாறு உத்தரவிட்டான்.

மற்றவர்களைப் போலவே முருகேசனும் வெறுப்புடன் திரும்பி வந்து பீரங்கிகளைத் தள்ளும் கோஷ்டியில் சேர்ந்து கொண்டான்.

வெய்யில் கடுமையாகத் தொடங்கி விட் டது. தீவிரமடைந்து வருகிற வெய்யிலில் மேடிட்டுக் கிடக்கிற நிலத்தில் பீரங்கிகளைத் தள்ளிக் கொண்டு போவது ஒரு கொடிய தண்டனையை அனுபவிக்கிற மாதிரி அவர் களுக்குத் தோன்றியது.

மேட்டு நிலம் சமதரையாகத் தொடங்கிய இடத்திலேயே அவர்களின் இலக்கான அந்தச் சாவடி அமைந்திருப்பது கண்டு அவர்கள் புத்துயிர் பெற்றனர். முழு வலி மையையும் திரட்டிக் கரங்களில் செலுத்தி, மூச்சைப் பிடித்துக் கொண்டு அவர்கள் முன் னிலும் விரைவாகப் பீரங்கிகளைத் தள்ளிய வாறு முன்னேறினார்கள்.

அடுத்த சில நிமிடங்களுக்கெல்லாம் ஒரு வாறாக அவர்கள் அந்தச் சாவடிக்கு வந்து சேர்ந்தார்கள்.

முருகேசன் பெருமூச்செறிந்தவாறு 'அப் பாடா' என்று தன் வாய் விட்டு முனகிக் கொண்டான்.

இனிமேல் எதற்குமே இடைஞ்சல் இருக் காது. சாப்பாட்டுக்கு ஏதாவது வழிபிறந்து விடும். சுத்தமான காற்றைச் சுவாசித்துக் கொண்டிருக்கலாம். கடச் சுட வெந்நீர் வைத்து உடம்பின் ஐந்தாறு நாட்கள் அழுக் கும் வலியும் போகத் தேய்த்துத் தேய்த்து நீண்ட நேரம் நிச்சிந்தையாகக் குளிக்கலாம், சாவடிக்குள் படுத்துப் பாதுகாப்பாகவும் நிம்மதியோடும் கண்ணயரலாம்...

முருகேசனும் மற்றவர்களும் சாவடியின் வாயிற்புறத்தை நோக்கித் தெம்புடன் நடந்தபோது ஒயர்லெஸ் பெட்டியை வைத் திருந்தவன் திடீரென்று படைத்தலைவனைக் கூவியழைத்தான். படைத் தலைவனுக்கு மேலிடத்திலிருந்து அவசர அழைப்பாம்...

படைத்தலைவன் குழப்பத்துடன் ஒயர் லெஸ் பெட்டி மூலம் மேலிடத்துடன் தொடர்பு கொண்டான்.

படைத் தலைவன் பேச்சைச் சுருக்கமாக முடித்துக் கொண்டு முகம் சிவக்க மற்றவர் களை நோக்கினான்.

''நில்லுங்கள் அப்படியே! உள்ளே போக வேண்டாம். போர்நிறுத்தம் உத்தரவாகி யிருக்கிறது. இனி ஒரு விநாடி கூட நாம் இங்கே தாமதிக்கக் கூடாது. உடனே நமது எல்லைக்குத் திரும்பும்படி கட்டளையிட்டிருக் கிறார்கள். கிளம்புங்கள்!'' என்று கோபா வேசத்துடன் கத்தினான்.

அனைவருமே திகைப்புற்றவர்களாய்ப் படைத் தலைவனை உறுத்து நோக்கினார்கள்.

''உம், புறப்படுங்கள், போகலாம்!'' என்று மீண்டும் கூக்குரலிட்டான் படைத் தலைவன்.

அவர்களில் யாரும் எதுவுமே பேசவில்லை. மௌனமாக வந்த வழியே திரும்ப ஆயத்த மானார்கள். இப்போது நல்லவேளையாக அவர்கள் பீரங்கிகளைச் சிரமப்பட்டுத் தள்ளிக் கொண்டு போக வேண்டி யிருக்காது. மேட்டி லிருந்து இறக்கத்தில் அவற்றால் தாமாகவே எளிதாகவும் விரைவாகவும் செல்ல முடியும்.

பீரங்கிகளை அவர்கள் நிறைய இடைவெளி விட்டு வரிசையாக நிறுத்தி விசையுடன் உந்தித் தள்ளினார்கள். அவை கடகடவென்று உருண் டோடின. மிகவும் உற்சாகத்துடனும் உல் லாசமாகவும் மனப்பூர்வமாகவும் போவது போல் அவை காட்சியளித்தன.

விரைந்தோடுகிற பீரங்கிகளையே பார்த்துக் கொண்டு நின்ற முருகேசனுக்குத் திடீரென்று அவற்றின்மீது அடக்கமாட்டாத பொறுமை மூண்டெழுந்தது.

இப்படி அவன் பொறுமைப் படவேண்டிய அவசியமேயில்லை. ஏனென்றால் அவற்றைப் போலவே அவனும் ஒரு பீரங்கிதான்; ஆனால் சக்கரங்களுக்குப் பதிலாகக் கைகளும் கால் களும் முளைத்த பீரங்கி. அந்தக் கணத்தில் இது ஏனோ அவனுக்கு உறைக்கவே யில்லை.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon